# காரும் கதிரும்

(சிறு கதைகள்)

ஆசிரியர் :

ரவீந்திரநாத் டாகுர்

மொழிபெயர்த்தோர் :

த. நா. குமாரஸ்வாமி,

த. நா. ஸேனுபதி




கலைமகள் காரியாலயம்

மயிலாப்பூர் :: சென்னை

பதிப்புரிமை] நவம்பர், 1943 [விலை ரூ. 2-0-0

# பொருளடக்கம்

# முகவுரை

ரவீந்திரருக்கு முன்னால் வங்க இலக்கியத்தில் 'சிறு கதை' இருந்ததாகவே தெரியவில்லை. பங்கிம் சந்திரரின் 'இந்திரா', கதையின் தோரணையில் சென்றாலும் சிறு கதை ஆகாது. காளிபிரஸன்ன ஸிம்ஹரின் 'ஹுதோம் பேஞ்சார் நக்ஸா' இப்போது வழங்கும் சிறு கதையின் அமைப்பைக் கொண்டதல்ல. 'சொல் ஓவியங்கள்' (sketches) என்ற இலக்கிய வகையைச் சேர்ந்ததே.

நிலையில்லாமல் சுழலும் வாழ்க்கையின் ஒவ்வொரு நிகழ்ச்சித் துணுக்கையும் வைத்து நிறைவான காட்சியை எழுப்பும் சிறு கதைகளை முதல்முதல் வங்க இலக்கியத்திற்கு வழங்கியவர் டாகுரே. அவர் எழுதிய ஒரு சிறு கதையைத் துண்டாக்கிப் பார்த்தாலும், அதில் நம் மனத்தைக் கவரக்கூடிய பத்தரை மாற்றுத் தங்கம் கிடைக்காமற் போகாது.

ரவீந்திரர், மிகவும் அமைதியாகக் கதை சொல்பவர். 'மொபஸானை'ப்போல் கப்பென்று இறுகப் பிடித்து, உலுக்கித் தொப்பென்று விட்டுப்போகும் ரீதியில் கதைகளை அவர் இயற்றவில்லை. தலை கிறுகிறுக்கச் செய்யும் நாகரிகப் புரட்டோ, காமவேட்கையின் உக்கிர கந்தமோ அவருடைய ரசனைகளில் எதிர்பார்க்க முடியாது. அவர் முற்றிலும் உலகத்தின் தொன்மையான, கிழக்குப் பகுதியைச் சேர்ந்தவர். கீழ்நாட்டுக் கலைப்பண்பே கமழ்கிறது அவரது இலக்கிய ஸ்ருஷ்டியில்.

கவி டாகுரின் சிறு கதைகள், பெரும்பான்மை நடுத்தர வகுப்பினருடைய வாழ்க்கையின் சித்திரங்கள் எனலாம். தாழ்வுற்ற மக்களின் வாழ்க்கையைப்பற்றி அவர் எதுவும் எழுதவில்லை என்ற புகார் அவர்மீது. செல்வம் நிறைந்த ஒரு குடும்பத்தில் உதித்து அந்தச் சுற்றத்திலேயே வளர்ந்தவரானதால் கீழ்த்தர வகுப்பினருடன் பழகும் சந்தர்ப்பம் அவருக்கு ஏற்படவில்லை. 'அப்படி அவர் தாழ்த்தப்பட்டோரைப்பற்றி ஏதாகிலும் எழுதியிருந்தாலும், வெறும் கற்பனை என்றுதான் அதைக் கொள்ளவேண்டும்'—

இதுவே ஒரு சாராருடைய வாதம். ஷேக்ஸ்பியர் தம் வாழ்வில் படகோட்டியாகவோ, படையைச் சேர்ந்தவ ராகவோ இருக்கவில்லை. அவ்வாறே டாகுரும், தம் ஜீவிய தசையில் ஒரு கூலியாளாகவோ, குமாஸ்தாவாகவோ இருந்ததில்லை. ஆனால் இவர்களுடைய அஸாதாரணமான உள் நோக்கும் கற்பனை சக்தியும், எந்தப் பாதை வழியே சென்றாலும், இவர்களை உண்மையின் எல்லைக்கே கொண்டு விட்டன. இதிலிருந்து இயற்கையிலேயே இவர்கள் பிரதிபை மிக்கவர்கள் என்பது வெளிச்சமாகிறது. இவர் களது கற்பனை எல்லா இடங்களிலும் வாஸ்தவத்தின் போர்வையில் மறைந்து கொள்வதில்லை; வெளிப்படை யாகவே வாஸ்தவத்துடன் கைகோத்துக்கொண்டு செல் கிறது. வாசகர்களை ஒரு கற்பனை உலகிற்கு இழுத்துச் சென்றாலும் வாழ்க்கையின் உண்மையான மணமும், ஒளியும், உணர்ச்சியும் அவற்றுள் நுகர்வர்.

* * * *

மஹாகவி ஓரிடத்தில் தாம் இயற்றிய சிறு கதைகளைக் குறித்துச் சில அரிய விஷயங்களை வெளியிடுகிறார் :

"என் சிறு கதைகளுக்கு ஓர் இலக்கிய மதிப்பு இருப்ப தாகவே சில பேர் ஒப்புக்கொள்ளவில்லை. ஆனால் எட்வர்ட் தாம்ஸன் (Edward Thompson) மட்டும், உயர்ந்த சிறு கதை களுக்குரிய சுவை என் கதைகளில் மிளிர்வதாயும், என் னுடைய மற்ற இலக்கிய ரசனைகளைவிட இவையே சிறந்து விளங்குமென்றும் கூறியுள்ளார்.

"நிறை நோக்குடன் வாழ்க்கையில் கண்ட புதுமை களையே என் சிறு கதைகளில் நான் சித்திரித்திருக்கிறேன்.

"வங்காளத்தில் சிறு கதை என்ற இலக்கியத்தைப் புகுத் தியவன் நானே. 'ஹிதவாதி' என்ற பத்திரிகையில் என் னுடைய ஐந்து சிறு கதைகள் பிரசுரமாயின. ஆனால் அதன் ஆசிரியர் கிருஷ்ண கமல் என்னிடம் ஒரு நாள், 'இதோ பார் ரவி, உன் கதைகள் எல்லாருக்குமே புரியுமா? இப்போதுள்ள வாசகர்களுக்கு ஏற்றபடி இல்லை. உன்னுடைய கதைகளை உயர்தர இலக்கியத்தோடு சேர்க்கவேண்டியதுதான்; அதில் சந்தேகமில்லை. ஆனால் இந்த வாசகர்கள் அதன் சுவையை எவ்வாறு அறிவார்கள்?' என்றார். அந்தக் காலம் பங்கிம் யுகமானதால் என் கதைகளுக்குச் செல்வாக்கு இல்லாமற் போயிருக்கலாம். அந்தக் காலத்து இலக்கிய அளவுகோலுக்கு இணங்க 'Romance' என்னுடைய கதைகளில் மலிந்திருக்க வில்லை. அதனுடன் கதை எழுதுவதை நிறுத்திக்கொண்டேன். அதற்குப் பிறகு 'ஸாதனா' வெளியாயிற்று. மீண்டும் என்னைச் சிறு கதை எழுதும்படி நண்பர்கள் வற்புறுத்தினர். மடை விண்டதுபோல் சிறுகதை பெருக்கெடுத்து ஓடியது, என்

லேகினியிலிருந்து. எனக்கே சலித்துப்போய் நிறுத்திக் கொண்டேன்.

''என் கதைகளுக்கு உள்ள மதிப்பு என்னைத் தவிர வேறு யாருக்குத் தெரியும்? ஒவ்வொரு நாளும் நான் கண்டவையும் களித்தவையுமான விஷயங்களே இந்தச் சிறு கதைகளில் மண்டிக் கிடக்கின்றன. கண்ணிற் பட்ட காட்சிகளெல்லாம் என் சித்தத்தைக் கொள்ளைகொண்டன. ஒவ்வொரு நிகழ்ச்சியின் மூலமும் மக்கள் வாழ்வினை அலைக்கும் இன்ப துன்பங்களை, சில ஸமயம் உருக்கத்துடனும், சில ஸமயம் வேடிக்கையாகவும் நோக்க முயன்றேன். 'இவன் பெரிய மனிதன், செல்வக் குடியில் பிறந்தவன். எளியவருடன் பழகி இருந்தால்தானே அவர்களது நிலைமை தெரியப்போகிறது?'—இவ்வாறு சிலர் என்னைப்பற்றி அபிப்பிராயம் கொண்டிருந்தனர்.

''இவற்றை யெல்லாம் நாம் ஸஹித்துக்கொள்ள வேண்டியதுதான். ஏழைக் குடும்பத்தில் பல பேர் பிறந்து வளர்ந்திருக்கலாம். ஆனால் ஒன்று சொல்வேன்: அவர்கள் என்னுடைய நோக்குடன் உலகைப் பார்க்கவில்லை. சிறுகதையை, அதுவும் வங்கதேசத்தின் கிராம வாழ்க்கையை வர்ணிக்கும் சிறு கதையை, இதற்கு முன் யாருமே இயற்றவில்லை. நீரோட்டத்தில் அடித்துச் செல்லும் கொடிப்பாசியைப்போல், அற்பமான நிகழ்ச்சிகள் – சின்னஞ் சிறு காட்சிகள் - நித்தியம் என் முன் தோன்றி மறையும். அவற்றில் நான் சுவையைத் தேடுவேன். அது எனக்குக் கிடைத்தது. வங்க நாட்டின் இதயத்தை உட்புகுந்து பார்க்கும் பாக்கியத்தைப் பெற்றேன்.

''எண்ணற்ற சிறு காவியங்களை நான் இயற்றியுள்ளேன். உலகில் வேறு எந்தப் புலவனும் அவ்வளவு வரைந்திருப்பதாகத் தெரியவில்லை. ஆனால் என்னுடைய சிறு கதைகள் காவிய தர்மத்தை அடிப்படையாகக் கொண்டிருக்கின்றனவென்று சிலர் கூறும்போது எனக்கே தூக்கிப் போடுகிறது. வங்காளத்தில், ஆறுகள் பின்னிக்கொண்டு ஓடும் பிரதேசங்களில் நான் சுற்றித் திரிந்திருக்கிறேன். நாட்டுப்புறத்தின் விசித்திரமான எழிலையும், அங்கே மக்கள் நடத்தும் வாழ்க்கையையும் நேரில் கண்டிருக்கிறேன். ஒரு பெண், படகில் ஏறிப் புக்ககத்திற்குப் போகிறாள். அவளுடைய உறவினர்கள் துறையில் பேசிக்கொள்கிறார்கள்: 'அசட்டுப் பெண்! அழுவானேன், புக்ககம் போவதற்கு? அங்கேதான் அவளுக்குப் பாக்கியம் உண்டாகப் போகிறது' – இதை ஒட்டி ஒரு கதை பிறக்கும். அடங்காத சிறுவன்; ஊரெங்கும் ஏதாவது துஷ்டத்தனம் செய்துகொண்டே திரிவான். திடீரென ஒரு நாள் அவன் பட்டணத்திற்குத் தன் மாமாவிடம் போகவேண்டி நேரிடுகிறது. – நான் கண்ணால் பார்த்தது அவ்வளவுதான். மீதியை என்னுடைய கற்பனைக்கு விட்டுவிட்டேன். என் கதைகளில் உண்மை நிகழ்ச்சிகளுக்குச் சிறிதேனும் குறைவில்லை. நான் நேரில் பார்த்த விஷயங்களையே, உள்ளத்துள் அநுபவித்து வரைந்துள்ளேன். 'கங்காள' (எலும்புக்கூடு), 'க்ஷுதித பாஷாண' (கல்லின்

வேட்கை) இந்தக் கதைகளில் காவிய மணம் வீசுகிறதென்ருலும் ஒருவாறு ஒப்புக்கொள்வேன். கற்பனையே பிரதானமாக நிற்கிறது, இந்தமாதிரி ஸ்ருஷ்டியில். ஆனால் முழுவதும் அப்படி இல்லை. கற்பனைக்கொடி படரும் பற்றுக்கால் வாஸ்தவ விஷயமே.

"என் பாஷையை எடுத்துக்கொண்டு, உரை நடையும் காவியத்தின் சந்தத்திலேயே செல்கிறது என்கிறீர்களா? கதையின் போக்கை மீறி என் நடை தனிப்படையாகத் தோற்றும் பக்ஷத்தில், அதற்காக என்னைப் பழிக்காதீர்கள். காரணம் சொல்லுகிறேன்: வங்க இலக்கியத்தில் புதிய வசன நடையை நானே ஸ்ருஷ்டித்துக்கொள்ள வேண்டியதாயிற்று. உரை நடைக்கு அமைய வங்க மொழியை யாருமே எனக்கு முன்னால் வளப்படுத்தவில்லை. படிப்படியாக அதை நானே நிர்மானம் செய்துகொண்டேன். என் கதையின் போக்கிற்கு ஏற்றவாறு வசனத்தையும் நான் உருவாக்கிக் கொண்டேன். மொபஸாங் போன்ற அயல் நாட்டு எழுத்தாளர்களின் வசன நடையைப்பற்றி நீங்கள் உயர்வாக நினைக்கலாம். அதிசயமென்ன? ஏற்கனவே பண்பட்ட மொழியைப் பயின்றனர் அவர்களெல்லாம்! மொழியைச் சீர்திருத்திக்கொண்டே இலக்கியத்தை உருவாக்கும் கஷ்டம் அவர்களுக்கு நேரிட்டிருந்தால் தெரியும், அவர்கள் பாடும்."

* * * *

இந்தத் தொகுதியில் வரும் கதைகளில் குறிப்பிடத் தக்கவை: 'காரும் கதிரும்' (மேக ஓ ரௌத்ர), 'மனைவியின் கடிதம்' (ஸ்த்ரீர் பத்ர), 'மீட்சி' (உத்தார), 'இடம் இருக்கிறது' (அபரிசிதா).

நம் நாட்டில் சுதந்திர உணர்ச்சி வேரூன்றி வரும் போது அதை அழிக்கும் புழுவாக இருப்பவை மக்களிடையே படரும் இழிவு மனப்பான்மையும், ஒற்றுமையின்மையுமே. இதைச் சுட்டிக் காட்டிக் கவி, ஐக்கிய வாழ்வே விடுதலைக்கு வழி யென்று இடி முழக்கத்துடன் ஓரிடத்தில் கூறுகிருர்:

"அட்டுழியங்களுக்கு எதிரே நின்று போராட முன் வரும்போது, நம் ஜாதியாருக்கே நாம் அஞ்சவேண்டி வருகிறது. எவர்களுடைய நன்மையின் பொருட்டு நாம் பாடுபடுகிறோமோ, தியாகம் செய்கிறோமோ, அவர்களே நமக்குப் பிரதிகூலங்களை இழைக்கின்றனர். எவர்களுக்கு நாம் உதவி செய்ய நினைக்கிறோமோ, அவர்களே நமக்குப் பகைவராய் மாறிவிடுகிருர்கள். பேடிகள் உண்மையை ஒளிக்கத் தயங்குவதில்லை. பிடிக்கப்பட்டவர்கள், தம் துன்பங்களையும் மறந்து கோழைகள் ஆகிவிடுகின்றனர். சட்டம் தன் இரும்புப் பிடியில் இறுக்க வரும்போதும், வெஞ்சிறை நம்மை விழுங்கத் தயாராகக் காத்திருந்தாலும், நியாயத்திற்காக உழைக்கும் மாசற்ற தேசப்பிரேமை உள்ள

இரண்டொருவர் நம் இடையே தோன்றிக் கடைசிவரையில் நின்று போராடுகிறார்கள். அவர்களது அரிய தியாகமே நம் ஜாதியினரை ஒற்றுமைப்படுத்த வல்லது.''

ரவீந்திரர் தாம் கண்ட இந்தப் பேருண்மையைத் தம் **'காரும் கதிரும்'** என்ற ஒப்பற்ற கதையில் தெள்ளென விளக்கியுள்ளார்.

**'மனைவியின் கடிதம்'**, வங்க ஸாஹித்தியத்திலேயே ஓர் அபூர்வமான படைப்பு எனலாம். 'கம்யூனிஸ்ட் மானி பெஸ்டோ'வைப் போலவே இதை, இந்தியப் பெண்களின் விடுதலைக்கான முழக்கமென்பதில் தவறில்லை. ஆவேசமும் தீவிரமாக ஊடுருவும் ஏளனமும் அற்புதமாய்க் கலந்து கடிதம் முழுவதிலும் தோய்ந்திருப்பதைக் காணலாம்.

**'மீட்சி'**, மொழியின் அலங்காரமும் நிகழ்ச்சியின் துரித கதி எதுவும் இராமல் உள்ளத்துள் பாயும் உருக்கமான கதை.

கடைசிக் கதையான **'இடம் இருக்கிறது'** என்பதைப்பற்றி ஒரு வரி. மைத்ரேயி தேவி, டாகுர் அபிமானிகளில் ஒருவர். கடைசி நாட்களில் அவருடன் இழைந்து பழகிய புண்யவதி. இம்மாது தம் தினக் குறிப்பொன்றில் ஓரிடத்தில் பதித்துள்ளார் :

> ''ஒரு நாள் பிற்பகல் எங்களது ஸம்பாஷணைக்கு இடையே, 'கல்ப குச்ச' விலுள்ள கதைகளைப்பற்றிப் பேச்சு வந்தது. 'உனக்குச் சிரமம் இராத பக்ஷத்தில் இந்த மாலைப்பொழுதே என்னுடைய கதைகள் சிலவற்றை உனக்குப் படித்துச் சொல்லுகிறேன்...எனக்கு இப்பொழுது கவனத்திற்கு வரவில்லை' என்றார் (கவியரசர்.)...அன்று அவர் எடுத்துக் கொண்ட கதை அபரிசிதா (இடம் இருக்கிறது). அந்தக் கதையில் ஓரிடத்தில்,
>
> > 'அந்த ஆச்சரியமான உலகில், ஓர் அதிசயமான இரவிலே இனிமையான குரல் ஒன்று, – சீக்கிரம் வாயேன். அந்த வண்டியில் இடம் இருக்கிறது – என்று சொல்வது போல் கேட்டது...மனுஷ்ய கண்டமா, அல்லது தேவ கண்டமா வென்று சந்தேகம் பிறந்தது. வங்கதேசத்துப் பெண்ணின் குரலில் வங்கமொழியானது அவ்வளவு மதுரமாகத் தொனித்ததை எனக்கு ஏற்பட்டது போன்ற இடம், பொருள், ஏவலில் கேட்டிருப்பீர்களானால் நீங்களுந்தான் திகைத்துப்போயிருப்பீர்கள்......நெடுங்காலம் வரையில் குரலோசை ஒன்றுதான் அழியாமல் மனத்துள் பதிந்துவிடுகிறது...நான் கேட்டறியாத கண்டத் துவனியே! நில்லாது ஓடும் காலப் பெருக்கில் முளைத்த அழகுற்ற மலரே!...என் இதயத்தில் திகழும் உருவற்ற அழகே! என்றென்றும் எனக்கு அறிமுகமாகாது இருப்பாயா?'

—என்று வருகிறது. அவர் என்னைப் பார்த்து, 'போதுமா, வங்காளி ஜாதியை எவ்வளவோ உயர்த்தி வைத்துக் கூறியிருக்கிறேனே! பெண்வர்க்கத்தையும் என் வாயார ஸ்துதி செய்திருக்கிறேன். இதனால்தான் வங்காள யுவதிகள் என்னை விரும்புகிறார்கள்; தம் புருஷர்களைச் சண்டைக்கு இழுக்கிறார்கள். பெண்களின் குரலை அவ்வாறு நான் வர்ணித்து இருப்பது அதிசயோக்தி அல்லவென்று சொல்லுவாய் நீ. எங்கே, அந்தமாதிரி மதுரமான ஒரு கண்டத்துவனி என் செவியில் விழவில்லையே!' என்றார் வேடிக்கையாக."

இதைவிட ஒரு புகழ்மாலை அந்தக் கதைக்கு வேண்டுமோ!

*　　*　　*　　*

இந்தக் கதைத் திரட்டில் வந்துள்ள கதைகள் அனைத்தும் இதுவரையில் தமிழில் மொழிபெயர்க்கப்படாதவை. எனக்கு எல்லா விஷயத்திலும் பக்க பலமாக நிற்கும் என் இளைய சகோதரன் 'ஸேனு' இந்த முயற்சியிலும் தன் பங்கைச் செய்திருக்கிறான். எல்லாக் கதைகளிலும் அவனுடைய லேகினியும் இடம் பெற்றிருக்கிறது. பல்வேறு சுவைகளை வாசகர்களுக்குப் பயக்க இந்தக் கதைகளைத் தேர்ந்தெடுத்த பெருமை அவனையே சாரும்.

11—11—'43.　　　　—த. நா. கு.

# காரும் கதிரும்

## 1

முந்திய தினம் நல்ல மழை பெய்ததால் அன்று இளங்காலை, மழை ஓய்ந்து மங்கிய வெயிலும் சிதறிய மேகத்தின் நிழலும் கூடி அழகார்ந்து விளங்கியது. கதிர் முற்றிய பயிர்நிலங்களின்மேல் நிழலும் ஒளியும் மாறி மாறித் தம் நீண்ட சலாகையினால் வர்ணங்களைத் தீட்டின. நெடுந்தூரம் பரவிய பசுமையின் சித்திரம், ஒரு சமயம் கதிரவன் கிரணங்களை வீசும்போது, பளிச்செனத் திகழும்; மறுசமயம் முகிலின் சாயையினால் கண்ணுக்கினிய இருண்ட நிறம் கொள்ளும்.

விண்ணரங்கில் காரும் கதிருமே நடிக்கும் விசித்திர நாடகம் இவ்வாறு இருக்க, கீழே உலகில் வாழ்க்கையின் கூத்துக்களத்தில் நடக்கும் விந்தைகளுக்கு ஓர் எண்ணிக்கை உண்டோ !

நாம் இந்த இடத்தில் அத்தகைய வாழ்க்கைக் கூத்தின் திரையைச் சற்று நீக்கிப் பார்ப்போம். ஒரு கிராமம். வழியோரமாக வீடு ஒன்று தெரிகிறது. அதன் வெளிப்புறமாயிருக்கும் அறை ஒன்று மட்டுமே கிலம் ஆகாமல் இருக்கிறது. அவ்வறையின் இரு மருங்கிலும், சரிந்து விழும் செங்கற்சுவர் வளைத்துக்கொண் டிருக்கும் மண்வீடுகள். பாட்டையிலிருந்து பார்த்தால், அந்த வீட்டின் உட்புறம் ஜன்னலுக்கு அருகே ஓர் இளைஞன் மேடைமீது அமர்ந்து சற்றைக்கொருதரம் இடதுகையால் விசிறிக்கொண்டே இறுக்கத்தையும், ஈக்களின் உபத்திரவத்தையும் போக்கிக்கொள்வது தெரியும். வலதுகையால் ஏதோ ஒரு புஸ்தகத்தைப் புரட்டி ஊக்கமாகப் படித்துக்கொண் டிருந்தான்.

வெளியே ஊர்ப்பாதையில் 'டோரியா' போட்ட சிற்றாடை கட்டிக்கொண் டிருக்கும் சிறுமி ஒருத்தி மடியில் சில கருநாவற்பழங்களை வைத்துக்கொண்டு ஒவ்வொன்றாக வாயில் போட்டு ருசிபார்த்த வண்ணம் கம்பிபோட்ட அந்த ஜன்னல்முன் போவதும் வருவதுமா

யிருந்தாள். உள்ளே, புஸ்தகத்தில் லயித்திருக்கும் இளைஞனுக்கும் அந்தச் சிறுமிக்கும் இடையே வளரும் நேசம் அவளது முகத்தில் பிரதிபலித்தது. இளைஞனுடைய கவனத்தைத் தன்பால் எப்படியாவது இழுக்க வேண்டுமென்பதே அப்பாவையின் நோக்கம். ஆனால் அவன் நினைவெல்லாம் எங்கோ நிலைத்துவிடவே அவள் வெறுப்புற்றுத் தனக்குள்ளேயே, "என்னைத் திரும்பிப் பார்க்காமல் போனால் போயேன்; எனக்குமட்டும் என்ன அக்கறை, உனக்கு நாவற்பழம் கொடுக்கவேண்டுமென்று? நானே தின்று விடுகிறேன்" என்று சொல்லிக்கொண்டாள்.

துரதிருஷ்டவசமாக அறையில் படிப்பில் ஊன்றி யிருக்கும் ஆசாமிக்குக் கண் பார்வை சற்று மட்டம். சிறிது தொலைவில் தனக்காக அந்தப் பெண் காத்துக் கொண்டிருப்பது அவனுக்குத் தெரியவில்லை. அந்தச் சிறுமிக்கும் அது தெரிந்திருந்தாலும், நெடுநேரம் குறுக்கும் நெடுக்கும் அலைந்துவிட்டு அவன் பராமுகமாய் இருந்ததற்குப் பழி தீர்த்துக்கொள்ள நாவற்பழக் கொட்டைகளை ஒவ்வொன்றாக அவன்மேல் விட்டெறிந்தாள்; குருடனிடத்தில் தன் கோபத்தைக் காட்ட இதுதான் அவள் கையாண்ட கடைசி வழி.

சிறிது நேரத்திற்கு ஒருதரம் இரண்டொரு கொட்டை தற்செயலாக ஜன்னல் கட்டைமேல் டக்கென்று விழுந்தபோது படிப்பில் ஆழ்ந்திருந்த அந்த இளைஞன் நிமிர்ந்து பார்த்தான். அந்த மாயக்காரி அதை உணர்ந்தவளாய் இருமடங்கு ஆர்வத்துடன் மடியிலிருந்து பக்குவமான நாவற்பழங்களைத் தின்பதற்கு எடுத்து வைத்துக் கொள்ளலானாள். இளைஞன் புருவத்தைக் குறுக்கிக் கூர்ந்து கவனித்தான். சிறுமி யாரென்று அறிந்து கொண்டான். புஸ்தகத்தை வைத்துவிட்டு ஜன்னலுக்கு அருகில் வந்து நின்றுகொண்டு சிரித்தமுகத்துடன், "கிரிபாலா!" என்று அழைத்தான்.

கிரிபாலா திரும்பிக்கூடப் பாராமல் தன் மடியிலிருந்து கனிந்த நாவற்பழங்களை எடுத்துக்கொண்டே மெல்ல மெல்ல ஒவ்வோர் அடியாக வைத்து வெளியே செல்லலானாள். அப்போதுதான் பார்வைக் குறைவுள்ள அந்த இளைஞனுக்கு விஷயம் புரிந்தது; அறியாமல் தான் செய்த ஏதோ தவறுக்காக இது தண்டனைபோலும் என்று ஊகித்தான். விரைவாக வெளியே வந்து, "கிரிபாலா! எங்கே, எனக்கு நாவற்பழம் கிடையாதா?" என்றான். கிரிபாலா

அவன் வார்த்தைகளைக் காதிலேயே போட்டுக் கொள்ளாதவள்போல், நன்ருகப் பழுத்த ஒரு நாவற்கனியைச் சாவதானமாகத் தின்றுகொண் டிருந்தாள். அந்த நாவற் பழங்கள் கிரிபாலாவின் தோட்டத்தில் பறித்தவை. தினந் தோறும் அந்த இளைஞனுக்கு அதில் பங்கு கிடைத்து வந்தது. கனிகளை நமக்காக மட்டுமன்றி மற்ருேர் ஆசாமிக்காகவும் கொண்டு வந்தோம் என்பது அவளுக்கு ஞாபகம் இல்லையா? பின்னே, தன் தோட்டத்தில் பறித்த பழங்களை அயல்வீட்டுக்காரன் ஜன்னலுக்கு எதிரே தின்பதன் கருத்துத்தான் என்ன? அப்போது இளைஞன் அவள் அருகில் சென்று அவள் கையைப் பிடித்தான். கிரிபாலா முதலில் கோணிக்கொண்டு திமிற முயன்ருள். குப்பென்று அவள் கண்களில் நீர் பொங்கி எழுந்தது. மடியிலுள்ள நாவற்பழங்களைக் கொட்டிவிட்டு அவ்விடத்திலிருந்து ஓடிப்போய் விட்டாள்.

காலையில் கண்ணைக் கூசிய வெயிலும், கருமுகிலின் நிழலும் பிற்பகலில் மங்கி அமைதிகொண்டன. வெண்ணிற மேகங்கள் குவியலாக வானவரம்பில் படிந்து கிடந்தன. மாலையின் மங்கும் ஒளி இலைகள்மேலும், குளத்து நீரின்மீதும் இயற்கை எழிலுடன் பளபளத்தது. மீண்டும் அந்தச் சிறுமி அதே கம்பிபோட்ட ஜன்னல் முன்பு தெரிகிருள்; அந்த அறையினுள் அதே இளைஞன் உட்கார்ந்திருக்கிருன். முன் இருந்ததற்கு இப்போது வேறுபாடு என்னவென்ருல், தற்சமயம் பாலிகையின் மடியில் நாவற்பழங்கள் இல்லை; இளைஞன் கையிலும் புஸ்தகம் இல்லை. இதைத் தவிர முக்கியமான சில மாறுதல்களும் தென்பட்டன.

இந்தத் தடவையும் அதே இடத்திற்கு அந்தப் பெண் வந்து எதற்காக அலைகிருள் என்பதை இங்கே கூறுவது கடினம். பாலிகையின் நடவடிக்கையிலிருந்து உள்ளே இருக்கும் இளைஞனுடன் அவள் பேச வரவில்லை என்பது மட்டும் தெரிந்தது. காலையில் தான் மண்ணில் உமிழ்ந்த நாவற்கொட்டை மாலையில் முளைத்திருக்கின்றதா என்று பார்க்கவே அவள் வந்திருப்பதாகத் தோன்றியது. அது ஒருபுறம் இருக்க, அவர்களுடைய போக்கில் மற்ருெரு விசேஷமும் தென்பட்டது. இளைஞனின் முன்பு மேடைமேல் நாவற்கனிகள் குவியலாகக் கிடந்தன. சிறுமி நடு நடுவே, குனிந்து ஏதோ தேடுவதாகப் பாவனை செய்யும் போது அவன் தன் உள்ளத்தில் குமிழ்த்தெழும் சிரிப்பை

வெளிக்காட்டாமல் ஆழ்ந்த யோசனையில் இருப்பவன் போல் கனிகளை ஒவ்வொன்றாகப் புசிக்கலானான். கொட்டையை வெளியே துப்பும்போது எதிர்பாராதபடி இரண்டொன்று பெண்ணின் காலில் வந்து விழும். அப்போது கிரிபாலா, 'காலையில் நாம் செய்த காரியத்திற்கு இது பதிலாக்கும்!' என்று உணரலானாள். ஆனாலும் இது நியாயமா? அகம்பாவத்தை யெல்லாம் விட்டொழித்துத் தன் சின்னஞ்சிறு உள்ளத்தை அவனிடம் சமர்ப்பிக்க வழி தேடும்போது இப்படி அதற்கு இடையூறு செய்வது கொடுமையன்றோ? தானே வலிய அவனிடம் அகப்பட்டுக் கொள்ள வந்ததை நினைத்துக் கொள்ளும்போது பாலிகையின் முகம் நாணிச் சிவந்தது. அவ்விடத்தை விட்டு நழுவ முயலும்போது, இளைஞன் வெளியே வந்து அவள் கையைப் பற்றிக்கொண்டான்.

காலையில் நிகழ்ந்ததுபோலவே இப்போதும் சிறுமி உடலை வளைத்துக்கொண்டு அவன் பிடியிலிருந்து தப்பி ஓட முயன்று பார்த்தாள். ஆனால் இந்தத் தடவை அவள் அழவில்லை. முகம் நாணத்தால் ரத்தம்போலச் சிவக்க, கழுத்தை வக்கிரித்துக்கொண்டு, தன்னை அலைக்கழிப்பவனின் பின்புறமாக முகத்தை மறைத்து ஓயாமல் சிரித்தாள். விதியின்றித் தோற்றுப்போய் அவள் அந்தக் கிராதி போட்ட அறையினுள் சிறை புகுந்தாள்.

வானவெளியில் முகிலும் வெயிலும் மாறி மாறி இயற்றும் கண்ணாமூச்சி விளையாட்டுப்போல் பூதலத்தின் ஒரு மூலையில் இவர்கள் விளையாடுவதும் நிரந்தரமானதல்ல; அதிசயமானதும் அல்ல. காரும் கதிரும் ஒன்றோடொன்று இழைவது வெறும் விளையாட்டல்ல; ஆனால் நமக்கு அது வேடிக்கையாகத் தோன்றுகிறது. வேலை வெட்டியில்லாத மழைக் காலத்தில் இருவரிடையே நிகழும் இம்மாதிரிச் சிறு சம்பவங்கள் பல, வெளிக்கு அற்பமானவையாகத் தோற்றும், ஆனால், உண்மையில் அவை அற்பமன்று. எந்த விதிக்கும் கட்டுப்படாத மூவாமுதலோன் ஊழிதோறும் ஊழியைப் பிணைப்பது போல், அச்சிறுமியின் மனத்தில் எழும் அழுகையையும் சிரிப்பையுமே அவள் ஆயுள்முழுதும் நீடிக்கும் இன்ப துன்பமாக மாற்றுகிறான்.

இப்போது அச்சிறுமி ரோஷங்கொண்டதிலோ ஓர் அர்த்தமும் இல்லை. இந்த விசித்திர நாடகத்தைக் காண்பவர்களுக்கு மட்டுமல்ல; இதில் முக்கிய பாத்திரமாக

நடிக்கும் இளைஞனுக்கும் அது பொருளற்றதாகவே இருந் திருக்கும். அந்தச் சிறுமி ஒவ்வொரு நாள் அதிகமாகக் கோபித்துக் கொள்கிறாள்; ஒவ்வொரு நாள் அளவுகடந்த அன்பு காட்டுகிறாள். சில நாளில் அவனுக்கு நிறையக் கனிகள் தந்து உபசரிக்கிறாள்; சில தினங்களோ நாள் தோறும் கொடுப்பதையும் நிறுத்திவிடுகிறாள்; இதற்குக் காரணம் என்னவென்று சொல்வது? ஒவ்வொரு சமயம் தன் கற்பனைத் திறமையை யெல்லாம் காட்டி இளைஞ னுடன் உல்லாசமாக உரையாட வருகிறாள். ஒவ்வொரு சமயம் திடீரென மனம் கல்லாகித் தன்னால் இயன்றவரை யில் அவனோடு சேராமல் விலகிநின்று துன்புறுத்துகிறாள். கடினமாக இருந்த அவ்வுள்ளம் சட்டென அநுதாபத்தால் கண்ணீர்ப் பெருக்கில் கரைந்துருகுவதும் உண்டு. அற்ப மாகத் தோற்றுகின்ற காரும் கதிரும் நடத்தும் இந்த லீலைகள் ஒன்றன்பின் ஒன்றாகப் பின்னால் விவரிக்கப்படும்.

2

கட்சிச் சண்டை, குட்டிக்கலகம், வம்பு, வீண் வழக்கு, சணல் வியாபாரம், கரும்புச் சாகுபடி இவைதாம் அந்தக் கிராமத்தில் இருந்தவர்களுக்குப் பிரதானம். சசிபூஷணனும் கிரிபாலாவும் மட்டுமே இலக்கிய சர்ச்சையிலும் சிந்தைக்கு விருந்தாக உள்ள சம்பாஷணைகளிலும் ஈடுபட்டிருந்தனர். இதைக் குறித்து ஊரில் எவரும் அக்கறையோ, ஆவலோ கொள்ளவில்லை. காரணம்: கிரிபாலாவுக்கு வயசு பத்துத் தான். சசிபூஷணன் அப்போதுதான் முளைத்தெழும் எம்.ஏ., பி.எல். இவர்கள் உறவினரல்லர்; அண்டை வீட்டுக்காரர்களே.

கிரிபாலாவின் தந்தை ஹரகுமாரர் ஒரு காலத்தில் அந்தக் கிராமத்திலேயே பெரிய மிராசுதாரராக இருந்தவர். இப்போதோ துர்த்தசையினால் சொத்தெல்லாம விற்றுத் தொலைத்துவிட்டு அயலூர் ஜமீன்தாரன் ஒருவனிடம் காரியஸ்தராக அமர்ந்திருந்தார். அவர் வசிக்கும் *பர்கணா விலேயே அவருக்கு வேலை. அதனால் பிறந்த ஊரை விட்டுப் போகவேண்டிய அவசியம் ஏற்படவில்லை.

சசிபூஷணன் எம். ஏ., தேர்ச்சி பெற்றதும் சட்டப் பரீக்ஷையிலும் தேறினான். ஆனால் இன்னும் எந்தத் தொழி லிலும் ஈடுபடாமல் சும்மா இருந்தான். நாலு பேரோடு

---

* கோட்டம்.

கலந்து உறவாடுவதும் இல்லை; கிராமக் கூட்டங்களில் கலந்துகொண்டு இரண்டு வார்த்தைகூடப் பேசுவதும் இல்லை. கண்பார்வை மட்டமானதால் பழக்கமானவர் களைக்கூட அவன் தெரிந்துகொள்ள முடியாமல் இருந்தது. புருவத்தைக் குறுக்கிக்கொண்டு யாரென்று பார்ப்பான். இதை அகம்பாவம் என்று பிறர் எண்ணினார்கள்.

கல்கத்தாவில் ஜனத்திரளிடையே இந்தமாதிரித் தன் இஷ்டப்படி இருப்பது அதிசயமாயிராது. ஆனால் ஒரு பட்டிக்காட்டில் இது குற்றமாகக் கருதப்படும். சசிபூஷண னுடைய தகப்பனார் எவ்வளவோ சொல்லிப் பார்த்தும் பலன் ஏற்படவில்லை. முடிவாக, உத்தியோகம் இல்லாம லிருக்கும் தம் பிள்ளையைப் பயிர் பச்சையையாவது கவனித்துக் கொள்ளும்படிக் கிராமத்திற்கு அனுப்பி வைத்தார். இதனால் கிராமவாசிகள் சசிபூஷணனைக் கேலி செய்து அவனைக் கண்டபோதெல்லாம் இகழ்ந்து வந்தனர். இவற்றையெல்லாம் அவன் சகித்துக்கொண்டு வந்தான். அவர்கள் அவனை இகழ்வதற்கு மற்றொரு காரணமும் இருந்தது. அமைதியை விரும்பும் சசிபூஷணனுக்கு விவாகம் செய்துகொள்ள இஷ்டமில்லை. பெண்ணை வைத்துக்கொண் டிருக்கும் பெற்றோர்கள் அவன் இப்படி இருப்பதைக் கர்வம் என்று எண்ணி அவனைக் கண்டு பொருமினார்கள்.

அவர்கள் இவ்வாறு அவனுக்குப் பல விதத்திலும் தொந்தரவு இழைக்க இழைக்க, அவன் தன் சொந்த வீட்டில் தனிமையிலேயே மறைந்து வசிக்கலானான். அறை யின் ஒரு மூலையில் மேடைமேல் மெத்தையை விரித்துக் கொண்டு ஆங்கிலப் புஸ்தகங்களைப் படிப்பதில் ஈடுபட் டிருப்பான்; நினைத்த வேளையில் பிடித்த புஸ்தகத்தைப் படிப்பதே அவன் செய்யும் வேலை. சொத்து எக்கதி அடைந்தால் என்ன அவனுக்கு?

மனிதவர்க்கத்தில் கிரிபாலா ஒருத்தியோடு மட்டுமே அவனுக்குப் பழக்கம் என்பதை முன்னரே கூறியுள்ளோம்.

கிரிபாலாவின் சகோதரர்கள் பள்ளிக்கூடத்தில் படித்துக்கொண் டிருந்தார்கள். அடிக்கடி தங்கள் முட்டாள் தமக்கையைப் பார்த்து அவர்கள், "உலகத்தின் வடிவம் எப்படி இருக்கும்?", "சூரியன் பெரியதா, உலகம் பெரியதா?" என்று பலவிதமான கேள்விகள் கேட்டு அவ ளைப் பரீக்ஷிப்பார்கள். அவள் தப்பாகப் பதில் சொல்வதைப் பார்த்து அவளைத் தூக்கி எறிந்தாற்போல் பேசிப்

பிழையைத் திருத்துவார்கள். "சூரியன், உலகத்தைக் காட்டிலும் பிரம்மாண்டமானது என்ற கொள்கைக்கு ஆதாரம் காட்டு" என்று அவள் துணிவாகக் கேட்டால், அவளுடைய சகோதரர்கள், "சூ! வாயை மூடு. எங்கள் புஸ்தகத்தில் எழுதியிருக்கிறது!" என்று அவளை மட்டந் தட்டுவார்கள்.

அச்சடித்த புஸ்தகத்தில் அப்படி இருக்கிறது என்று கேட்டதும் கிரிபாலாவின் வாய் அடைத்துவிடும். வேறு பிரமாணமே அவளுக்கு வேண்டியதில்லை. அவளுக்கு மட்டும் மனசில் தானும் அவர்களைப்போலப் புஸ்தகங்களை வைத்துக் கொண்டு படிக்க வேண்டுமென்று ஆசை. ஒவ்வொரு நாள் தன் அறையில் ஏதாவது புஸ்தகத்தை வைத்துக்கொண்டு மட மடவென்று படிப்பதுபோல் அபிநயம் செய்து அநாவசியமாகப் பக்கங்களைப் புரட்டிக் கொண்டே இருப்பாள். பழக்கம் இராத அந்தக் கரிய அச்செழுத்துக்கள் பெரிய தோரணவாயில் வழியாக எந்த ரகஸ்யலோகத்தை நோக்கியோ கொம்பும், காலும், கீழ் விலங்கும், மேல் விலங்குமாய்ச் சாரி சாரியாகச் செல்வது போல் அவளுக்குத் தோற்றும். கிரிபாலா வினவும் கேள்வி களுக்கு அவை திரும்பிக்கூடப் பதில் தராமல் நிற்கும். பாவம்! ஆவல் குடிகொண் டிருக்கும் அவளிடம் பாட புஸ்தகத்தில் வரும் சொற்றொடர்கள் புலி, நரி, குதிரை, கழுதை இவற்றைப்பற்றிய ஓர் அதிசயத்தையும் சொல் லாமல் மௌனம் சாதிக்கும்.

கிரிபாலா, தனக்கு எழுதப் படிக்கச் சொல்லித் தரும்படி அண்ணன் தம்பிமார்களை எவ்வளவு வேண்டிக் கொண்டும் அவர்கள் காதிலேயே போட்டுக்கொள்ள வில்லை. சசிபூஷணன் ஒருவனே இந்த விஷயத்தில் அவளுக்கு ஒத்தாசையாக இருந்தான். 'கதாமாலை', 'ஆக்யானமஞ்சரி' என்ற பாடபுஸ்தகங்கள் புரிபடாமல் இருந்ததுபோலவே சசிபூஷணனுடைய குணமும் முதலில் கிரிபாலாவுக்குப் புரியாமல் இருந்தது. பாட்டையோர மாகக் கம்பிபோட்ட அந்தச் சிறிய அறையினுள் அவன் தனிமையாக மேடைமேல் புஸ்தகங்கள் சூழ உட்கார்ந் திருப்பான். வெளியே கிரிபாலா கம்பியைப் பிடித்துக் கொண்டு, முதுகு வளையப் புஸ்தகத்தைக் கவிந்து படிக்கும் இந்த அதிசயப் பிரகிருதியைப் பார்த்து ஸ்தம்பித்து நிற்பாள். அவனைச் சூழ்ந்துள்ள புஸ்தகங்களின் எண் ணிக்கையைப் பார்த்துத் தன் அண்ணன்மார்களைவிடச்

சசிபூஷணனே ரொம்பப் படித்தவன் என்ற முடிவுக்கு வருவாள். இதைவிட ஆச்சரியமான விஷயம் அவள் கண்டதில்லை. 'கதாமாலை'யைப் போன்ற எத்தனையோ பாடபுஸ்தகங்களைச் சசிபூஷணன் ஓர் எழுத்துவிடாமல் படித்திருக்கவேண்டும் என்பதில் அவளுக்கு எள்ளளவும் சந்தேகமில்லை. சசிபூஷணன் புஸ்தகங்களின் ஏடுகளைத் தள்ளும்போது அவள் ஒரே இடத்தில் நின்று கவனிப்பாள். அவனது அறிவின் விசாலம் அத்தகையதென்று அவளால் அநுமானிக்க முடியவில்லை.

கடைசியாக ஒருநாள் வியப்பில் ஆழ்ந்த அச்சிறுமி, கண் பார்வை மங்கிய 'சசிபூஷணனுடைய கவனத்தைக் கவர்ந்தாள். சசிபூஷணன் பகட்டாகப் 'பைண்டு' செய்த புஸ்தகம் ஒன்றைத் திறந்து, "கிரிபாலா, பொம்மை காட்டுகிறேன். வா" என்று கூப்பிட்டதும் ஒரே ஓட்டம் பிடித்தாள். ஆனால், மறுதினமே மீண்டும் அவள் 'டோரியா' சிற்றுடை அணிந்துகொண்டு அந்த ஜன்னலுக்கு வெளியில் நின்றவண்ணம், முன்போலவே ஒரே கவனமாகச் சசிபூஷணன் படித்துக்கொண் டிருப்பதைக் கண்கொட்டாமல் கவனித்தாள். சசிபூஷணன் அன்றும் அவளைக் கூப்பிட்டுப் பார்த்தான். அந்தத் தடவையும் கிரிபாலா தலைமயிர் காற்றில் பறக்க, இரைக்க இரைக்க ஓடி மறைந்து விட்டாள். இவ்வாறு தொடங்கிய இவர்களுடைய நட்பு வரவர முதிர்ந்து வந்தது ; பாலிகை ஜன்னலுக்கு வெளியிலிருந்து சசிபூஷணன் அறையினுள் வருவதும் மேடையில் உள்ள புஸ்தகங்களைப் புரட்டிப் பொம்மை பார்ப்பதுமாக அவ்வளவு அந்நியோன்யம் ஏற்பட்டதன் காரணம் சரித்திர ஆராய்ச்சியாளர்க்கே பிரயோஜனப்படும்.

சசிபூஷணனிடத்தில் கிரிபாலா கல்வி கற்க ஆரம்பித்தாள். கேட்டால் உங்களுக்குச் சிரிப்புவரும்; இந்த உபாத்தியாயர் தம் சிறு மாணவிக்கு வெறும் எழுத்து, உச்சரிப்பு, இலக்கணம் மட்டும் கற்றுக் கொடுத்ததோடு நிறுத்தி விடவில்லை ; பெரிய பெரிய காவியங்களிலிருந்து மொழிபெயர்த்தும் அவளுக்குச் சொல்வார் ! அவள் அபிப்பிராயத்தையும் கேட்பார். அந்தப் பெண்ணுக்கு இதெல்லாம் புரிந்ததோ இல்லையோ அது கடவுளுக்குத்தான் தெரியும்; அவளுக்கு மட்டும் இது பிடித்திருந்தது. விளங்கினதையும் விளங்காததையும் கலந்து, தன் சின்னஞ் சிறு உள்ளத்தில் அபூர்வமான கற்பனைச் சித்திரங்களை வரைந்து கொள்வாள். கண்கள்

விரிய மௌனமாக, மனம் ஒன்றி அவன் சொல்வதைக் கேட்டுக்கொண்டிருப்பாள். ஒவ்வொரு சமயம் சம்பந்த மற்ற கேள்விகளைக் கேட்பாள். அவர்கள் சம்பாஷணை எப்போதாவது இதிலிருந்து வேறு ஏதாவது விஷயத் திற்குத் தாவும். சசிபூஷணன் ஒருபோதும் அவளைத் தடுத்ததில்லை ; அவள் இஷ்டப்படிப் பேச விட்டுவிடுவான். பெரியபெரிய காவியங்களைப்பற்றி அவள் கூறும் புகழுரை யையோ கண்டனத்தையோ கேட்டுச் சந்தோஷம் அடைவான். அந்த ஊரில் கிரிபாலா ஒருத்தியிடமே அவனுக்கு உள்ளூற அன்பு. சசிபூஷணனோடு பரிசய மானபோது கிரிபாலாவுக்கு வயசு எட்டு; இப்போது அவளுக்குப் பத்து நிரம்பிவிட்டது. இந்த இரண்டு வருஷ காலத்திற்குள் ஆங்கிலமும் வங்க பாஷையும் கற்றுக்கொண்டு பாடபுஸ்தகங்களைச் சுலபமாகப் படிக்க ஆரம்பித்துவிட்டாள். கிரிபாலாவுடன் பழக்கம் ஏற்பட்ட பிறகே, பிடிக்காதிருந்த கிராம வாசமும் அவனுக்குப் பிடித்திருந்தது.

## 3

இவ்விதம் இருந்தும் கிரிபாலாவின் தந்தை ஹரகுமா ரருக்கும் சசிபூஷணனுக்கும் அவ்வளவாக மன ஒற்றுமை இல்லை. இந்த எம். ஏ., பி. எல். இடம் தம் வழக்கு விஷய மாக யோசனை கேட்க அவர் முன்னெல்லாம் வருவார். சசி பூஷணன் அதில் சிரத்தை காட்டியதாகத் தெரியவில்லை. தனக்குச் சட்டவிஷயங்களில் அநுபவம் போதாதென்று சொல்லவும் அவன் தயங்கவில்லை. ஆனால் காரியஸ்தர் மட்டும் இதை வெறும் புரட்டு என்று கருதினார். இம் மாதிரி இரண்டு வருஷங்கள் கழிந்தன.

இதற்கிடையே ஒருசமயம் தமக்கு அடங்காத குடியானவன் ஒருவனை அவர் தண்டிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. வெவ்வேறு இடங்களில் அவன் பேரில் குற்றச்சாட்டுக்களைச் சுமத்தி அவனை அழுத்துவதற் கான வழி சொல்லும்படிச் சசிபூஷணனை அவர் அடிக்கடி வற்புறுத்திவந்தார். இதற்குச் சசிபூஷணன் தந்த பதில் ஹரகுமாரருக்கு அநுகூலமானதாக இல்லை; அவருக்கு ஆக்ரோஷத்தையே உண்டு பண்ணியது.

மற்றொரு குடியானவன்மேல் அவர் தொடுத்திருந்த வழக்கும் அப்போது தோற்றுவிட்டது. அவன் பக்கம் சசிபூஷணனே நின்று மறைவாக வேலைசெய்திருக்க

வேண்டுமென்று துரபிப்பிராயம் கொண்டார் ஹரகுமாரர். இனிமேல் இந்த மனிதனை ஊரில் இருக்கவிடக் கூடாது என்று திடப் பிரதிக்ஞை செய்துகொண்டார்.

அவன் தோட்டத்தில் திடீரென மாடு கன்றுகள் புகுந்து செடிகளை நாசமாக்கும்; துவரங் கொல்லை திப் பற்றி எரியும்; வரப்புக்காக அநாவசியமான சச்சரவு மூளும். சொந்தக் குடியானவர்களே குத்தகையைச் சரிவரக் கொடுக்காமல் இழுக்க அடிப்பார்கள். அவன் மேல் அக்கப்போர் தொடுப்பார்கள். அஸ்தமிக்கும்போது வெளியில் வந்தால் அவனைக் குத்தி விடுவதாகவும் இரவு வேளையில் வீட்டையே தீக்கிரையாக்கப் போவதாகவும் ஊரில் பயமுறுத்தினார்கள்.

கடைசியாகச் சாதுவான சசிபூஷணன் ஊரைவிட்டுக் கல்கத்தாவுக்கு வந்துவிடச் சித்தமானான். அவன் புறப் படுவதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்யும் சமயம் கிராமத்தில் ஜாயிண்ட் மாஜிஸ்டிரேட் துரை முகாம் வந்து இறங்கினான். டவாலி, போலீஸ் சேவகன், பட்லர், நாய்கள், குதிரை, குப்பைக்காரன், மற்றும் சிப்பந்திகள் கூட வரவே கிராமம் திமிலோகப்பட்டது. புலியின் பின் செல்லும் நரிகள்போல் சிறுவர் கூட்டம், துரை முகாம் போட்டிருக்கும் இடத்தருகில் சுற்றிக்கொண் டிருந்தது.

வழக்கப்படிக் காரியஸ்தர் ஹரகுமாரர் துரைக்கு வேண்டிய கோழி, முட்டை, நெய், பால் எல்லாவற்றையும் சேகரித்துக் கொடுத்துச் செலவுக் கணக்கில் பற்று எழுதி விட்டார். மாஜிஸ்டிரேட் துரைக்கு, வேண்டிய அளவுக்கு மேல் முகம் சிணுங்காமல் ஹரகுமாரர் பண்டங்களைத் தாராளமாக வழங்கியும் துரையின் குப்பைக்காரன் அவருடைய நாய்க்கு இரண்டு வீசை நெய் வேண்டுமென்று அதிகார தோரணையில் கேட்டான். போதாத வேளை, ஹரகுமாரர் அவனைப் பார்த்து, "நாட்டு நாயை விடச் சீமை நாய்க்கு எவ்வளவு கொடுத்தாலும் ஜரிக்கும்; ஆனால் நீ கேட்கிற அளவு கொடுத்தால் அதற்கு மந்தம் தட்டி விடும்" என்று அவனை வெறுங்கையுடன் அனுப்பி விட்டார்.

குப்பைக்காரன் துரையிடம் போய், "நாய்க்காக மாமிசம் எங்கே அகப்படுமென்று காரியஸ்தரைக் கேட் டேன். 'ஈன சாதிப் பயலே! எவனடா உன்னை அனுப் பினான்?' என்று எல்லாரெதிரிலும் என்னைத் திட்டினார்.

உங்களையும் சும்மாவிடவில்லை'' என்று வத்தி வைத்தான்.

ஏற்கனவே அந்த மாஜிஸ்டிரேட் பிராமணத் துவேஷி; போதாக்குறைக்குத் தன்னுடைய குப்பைக்காரனை இழிவு படுத்தின சமாசாரத்தையும் கேட்டு ஆத்திரமடைந்தான். உடனே போலீஸ் சேவகனைக் கூப்பிட்டு, "அந்தப் பார்ப்பானை உடனே இழுத்துக்கொண்டுவா, இங்கே!'' என்று உத்தரவிட்டான்.

காரியஸ்தர் உடல் நடுக்குறத் துர்க்கா நாமத்தை ஜபித்த வண்ணம் துரையின் கூடாரத்தெதிரே வந்து நின்றார். துரை 'டக் டக்' என்று பூட்ஸ் காலால் அடி வைத்து வெளியே வந்து உரத்த குரலில் ஆங்கில உச்சரிப் புடன், "நீ என்னுட்டுக்கு நம்ப மனிசனைப் பயமுறுத் தினே? சொல்லு, மான்!'' என்று மிரட்டினன்.

ஹரகுமாரர் குலைநடுங்கக் கைகளைக் கூப்பி, "துரையவாள் ஆளைக்கூட நான் திட்டுவேனு, எங்கேயாவது? அவன் தங்களுடைய நாய்க்கு இரண்டு வீசை நெய் கேட்டான் முதலில்; நல்ல ஜாதி நாயாயிற்றே, அதனுடைய உடம்புக்கு ஆகாதே என்றுதான் கொடுக்கவில்லை. ஆனுலும் நெய்க்காக ஆளை அனுப்பி இருக்கிறேன். நான் வேறு ஒன்றும் சொல்லவில்லையே, துரை!'' என்று மன்ருடினர்.

மாஜிஸ்டிரேட் விடாக்கிண்டன். அவன் ஹரகுமாரரைப் பார்த்து, "யாரை அனுப்பியிருக்கிறே? எங்கே அனுப்பியிருக்கிறே?'' என்ருன்.

ஹரகுமாரர் தம் வாயில் வந்த இரண்டு பேரைச் சொன்னர். அந்த ஆட்களைச் சீக்கிரம் நெய்யை எடுத்து வரும்படித் துரை சிப்பந்திகளுள் ஒருவனை ஏவிக் காரியஸ்தரைத் தன் கூடாரத்திலேயே நிறுத்திக் கொண்டான். ஏவலாட்கள் திரும்பிவந்து துரையிடம் நெய்க்காக அவர் எவரையும் எங்குமே அனுப்பவில்லை என்று அறிவித்தனர். இதனல் காரியஸ்தர் சொன்னதெல்லாம் பொய்யென்றும், குப்பைக்காரன் வார்த்தையே மெய்யென்றும் பட்டு விட்டது துரைக்கு. அவன் உறுமிக்கொண்டே தன் குப்பைக்காரனைக் கூப்பிட்டு, "இந்தத் தடிப்பயலின் காதைத் திருகி இவன்மேல் ஏறி இந்தக் கூடாரத்தைச் சுற்றிச் சுற்றிக் குதிரை சவாரி செய்'' என்று ஆக்ஞை யிட்டான். குப்பைக்காரனும் தயங்காமல் நாலுபக்கமும்

ஜனங்கள் பார்க்கத் துரையின் கட்டளையை நிறை வேற்றினான். *

இந்தச் செய்தி ஊரெங்கும் அமளிகுமளிப்பட்டது. ஹரகுமாரர் வீட்டுக்குத் திரும்பியதும் உணவு ஒன்றும் கொள்ளாமல் ஸப்தநாடியும் ஒடுங்கிப்போய்ப் படுத்துக் கிடந்தார். ஜமீன் நிர்வாக ஸம்பந்தமாக அவருக்கு அநேக சத்துருக்கள் ஏற்பட்டிருந்தனர். இதைக் கேட்டதும் அவர்களுக்கெல்லாம் வயிற்றில் பாலை வார்த்தாற்போல் ஆயிற்று. இந்த அட்டூழியத்தைப் பற்றிக் கேட்டதும், கல்கத்தாவிற்குப் பிரயாணமாகும் சசிபூஷணனுக்கு ரத்தம் கொதித்து எழுந்தது. அன்று இரவு முழுவதும் அவ னுக்குத் தூக்கமே பிடிக்கவில்லை.

மறுநாட் காலையில் அவன் ஹரகுமாரர் வீட்டுக்குச் சென்றிருந்தான். அவன் கையைப் பிடித்துக்கொண்டு துக்கம் பொங்கிவரத் தேம்பித்தேம்பி அழுதார் அவர். மாஜிஸ்டிரேட்டின்மேல் மானநஷ்ட வழக்குத் தொடுக்கும் படியும், தானே அவர் பக்கம் வக்கீலாக இருந்து வாதாடுவ தாகவும் உறுதி கொடுத்தான் சசிபூஷணன்.

துரைமீது மானநஷ்ட வழக்கு என்றதும் அவர் முதலில் நடுநடுங்கிப் போனார். ஆனால் சசிபூஷணனே விடுபவனாயில்லை.

ஹரகுமாரர் யோசித்துப் பார்ப்பதாகச் சொன்னார். நாலுபக்கமும் விரோதிகள் கொம்மாளம் அடிப்பதைப் பார்க்கச் சகியாதவராய்ச் சசிபூஷணனுடைய யோசனைக்கு இணங்கினார். "அப்பனே! நீ கல்கத்தாவுக்குப் போய் விடுவதாகக் கேள்விப் பட்டேனே; போகக்கூடாது: உன்னைப்போன்ற ஒருவன் இந்த ஊரில் இருந்தால் எனக்கு எவ்வளவோ பக்கபலமாயிற்றே! எது வந்தாலும் சரி; என்னை இந்த மானக்கேட்டிலிருந்து காப்பாற்ற வேண்டும்" என்று நைந்துருகிச் சொன்னார்.

4

இதுவரையில் ஊரார் கண்ணுக்குப் படாமல் தனிமையில் காலங்கழித்த சசிபூஷணன் இன்று கச்சேரியில்

---

* குல்ன மாஜிஸ்டிரேட் ஒரு பிரஜையைக் கொடூரமாக நடத்துவதற்கு முன்பே இக்கதை எழுதப்பட்டது. பெல்துரை மிகவும் நல்லவர் என்பது எல்லாருக்கும் தெரிந்த விஷயந்தான்; அவரைப் போன்ற பெரிய மனிதரை நான் இங்கே குறிப்பிட்ட தாக எண்ணவேண்டாம்.

தோன்றினான். வழக்கின் விவரங்களைக் கேட்டுக்கொண்டு மாஜிஸ்டிரேட் அவனைத் தம் அறையினுள் அழைத்துச் சென்று மிக்க மரியாதையுடன், "சசிபாபு, இந்தக் கேஸை அம்பலமாக்காமல் ஒருவிதமாக ராஜியாகப் போய்விட்டால் நன்றாயிருக்குமே!" என்றார்.

சசிபாபு மேஜைமேல் இருக்கும் ஒரு சட்டப் புஸ்தகத்தின்மேல் பார்வையைச் செலுத்திய வண்ணம், "என்னுடைய கக்ஷிக்காரர் இதற்கு உடம்படமாட்டார். நாலுபேர் சிரிக்க அவரை அவமானப்படுத்திய வியவகார மாயிற்றே! எப்படி இதை ரகஸ்யமாகச் சரிப்படுத்துவது?" என்றான்.

இரண்டொரு வார்த்தையிலிருந்தே, மிதமாகப் பேசும் அந்தச் சசிபூஷணன் எளிதில் மசியக்கூடிய பேர் வழியல்ல என்பதைக் கண்டுகொண்டு மாஜிஸ்டிரேட் துரை, "ஆல்ரைட், பாபு! வியவகாரம் எவ்வளவு தூரம் போகிறதோ, பார்க்கலாம்" என்றார்.

வழக்கு விசாரணைத் தினத்தைத் தள்ளிப்போட்டு வெளியூர் அலுவல்களைக் கவனிக்கப் புறப்பட்டுவிட்டார். இதற்குள் ஜாயிண்டு மாஜிஸ்டிரேட் ஜமீன்தாரனுக்கு ஒரு கடிதம் எழுதினான்:

அதில், "உம்முடைய காரியஸ்தன் என் வேலையாள் ஒருவனை அவமானப்படுத்தியதோடுகூட என்னையும் தூஷித்ததாகத் தெரிகிறது. இதற்கு நீர் ஜவாப் சொல்லாவிட்டால் தகுந்த நடவடிக்கை எடுத்துக் கொள்ளப்படும்" என்று மிரட்டியிருந்தான்.

ஜமீன்தாரன் திடுக்கிட்டவனாய் உடனே ஹரகுமாரரை வரவழைத்தான். காரியஸ்தர் நடந்ததையெல்லாம் ஆதியோடந்தம் கூறிவிட்டார். ஜமீன்தாரன் கடுகடுப்புடன், "துரையின் குப்பைக்காரன் இரண்டு வீசை நெய் கேட்டால் அப்போதே கொடுத்து விடுகிறதுதானே? உம் அப்பன் வீட்டுச் சொத்து என்ன முழுகிப்போகிறது!" என்று கடிந்து கொண்டான்.

'அவன் சொல்வது வாஸ்தவந்தானே? நம் சொத்து ஒன்றும் புரண்டு போகவில்லையே! கொடுத்து விட்டிருக்கலாம்' என்று பட்டது ஹரகுமாரருக்கும். தம் பிழையை ஒப்புக்கொண்டு அவர், "என் போதாத காலம், எனக்கு அப்படிப் புத்தி கொடுத்தது! ஊம்!" என்றார்.

"அதோடு நில்லாமல் மாஜிஸ்டிரேட் மேலேயே தாவா தொடுக்கும்படி உமக்கு யாரையா உபதேசம் பண்ணி னது?" என்ருன் ஜமீன்தாரன்.

"பெரியவாள் கோபித்துக்கொள்ளக்கூடாது. வழக்குத் தொடுக்க வேண்டுமென்று நான் ஆசைப்படவில்லை; எங்களூர் வக்கீல் சசிபூஷணன் 'கேஸ்' ஒன்றும் கிடைக்காமற் போகவே என்னைத் தூண்டி இவ்வாறெல்லாம் செய் திருக்கிருன்" என்ருர்.

ஜமீன்தாரனுடைய சினம் சசிபூஷணன் மேல் பாய்ந்தது. 'அவனென்ன, உதவாக்கரை வக்கீல்! தான் பேரெடுக்க வேண்டுமென்று செய்த சூழ்ச்சி' என்று பட்டு விட்டது ஜமீன்தாரனுக்கு. காரியஸ்தரை உடனே வழக்கை வாபஸ் வாங்கிக் கொள்ளும்படியும், ஜாயிண்ட் மாஜிஸ்டிரேட், பெரிய மாஜிஸ்டிரேட் இவர்கள் காலில் விழும்படியும் உத்தரவிட்டான். காரியஸ்தர் துரையின் கோபத்தைத் தணிக்கக் கொஞ்சம் பக்ஷணமும் கனி வகை களும் எடுத்துக்கொண்டு அவனுடைய இருப்பிடத்திற்கு ஓடினுர். தமக்கும் வழக்குக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை என்றும் அந்த மீசை முளைக்காத வக்கீல்பயல் சசி பூஷணனே இதற்குக் காரணம் என்றும் மிகவும் வணக்க மாகச் சொல்லிக் கொண்டார். துரை உடனே சசிபூஷணன் மேல் தம் கோபத்தைக் காட்டிக்காரியஸ்தரை வெகுவாகப் புகழ்ந்தார்: "டெரியாமல் செய்டடற்கு மிகவும் வருட்டம் என்க்கு!" என்று ஒரு விதமாக வியவகாரத்தை மழுப்பி விட்டார்.

அந்தத் துரை வங்கபாஷையை நன்கு அறிந்தவர் என்று ஸம்மானங்கள்கூடப் பெற்றவர். அவர் பொது மக்களுடன் இம்மாதிரி அற்புதமாக ஸம்பாஷிப்பது வழக்கம்.

"அம்மா அப்பா எல்லாம் நீங்களேதான். ஒரு சமயம் அடித்தாலும் ஒரு சமயம் அணைத்துக் கொள்வீர்கள். குழந்தைகளான எங்களுக்கு உங்கள் பேரில் குறை கூறு வதற்கு என்ன இருக்கிறது?" என்று காரியஸ்தர் தம் ராஜ விசுவாஸத்தைக் காட்டிக் கொண்டார்.

ஜாயிண்ட் மாஜிஸ்டிரேட்டின் ஒவ்வொரு சிப்பந்திக் கும் அவர்கள் மனசுக்குத் திருப்தியாகும்படிப் பொருள்களை வழங்கிவிட்டு ஹரகுமாரர் பெரிய மாஜிஸ்டிரேட்டைப் பேட்டி காணச் சென்ருர். 'சசிபூஷணன் தலைக் கிறுக்குப்

பிடித்தவன்; அவனால்தான் இந்த வழக்கே ஏற்பட்டது என்பதைக் காரியஸ்தர் கூறக் கேட்டுப் பெரிய மாஜிஸ்டி ரேட்டும், "எனக்குந்தான் அதிசயமா யிருந்தது, ஏது, நீங்களே இந்த மாதிரிப் பண்ணுவீர்களா என்று! என்னை ஒரு வார்த்தை கேட்டுவிட்டுக் காதோடு காது வைத்தாற் போல் வியவகாரத்தை முடிப்பதுதானே அழகு! இப் பொழுது புரிகிறது, எல்லாம் யாருடைய வேலை என்று" என்றார். கடைசியாக ஹரகுமாரரைப் பார்த்து, "சசி காங்கிரஸ்காரனா?" என்று புலன் விசாரித்தார். அவரும் சற்றும் தயங்காமல், "ஆமாம்" என்றார்.

'இதெல்லாம் காங்கிரஸ்காரர் சூழ்ச்சிதான்!' என்று வெள்ளைத் துரைமார் ரீதியில் விஷயத்தைப் புரிந்து கொண்டார்.

"காங்கிரஸைச் சேர்ந்த சதிக்கூட்டம் ஒன்று 'அமிர்த பஜார் பத்திரிகை'யில் அரசாங்கத்தின் மேல் இல்லாத புகார்களையெல்லாம் எழுதிக்கொண்டு தலை மறைவாக நாடெங்கும் திரிகிறது. இத்தகைய கூட்டத்தை முளை யிலேயே கிள்ளி எறிய நமக்கு விசேஷ அதிகாரம் கொடுக் காத இந்திய சர்க்கார் என்ன சர்க்கார்?" என்று பல வாறாக அரசாங்கத்தை இகழ ஆரம்பித்தார்.

'காங்கிரஸ்கார'ச் சசிபூஷணனின் பெயர் மட்டும் மாஜிஸ்டிரேட்டின் மனசில் நன்றாகப் பதிந்துவிட்டது.

## 5

வாழ்க்கையில் நிகழும் பெரிய விஷயங்களை ஒட்டி அற்பமான சம்பவங்களும் உலகத்தில் வேரூன்றி நிற் கின்றன.

சசிபூஷணன் மாஜிஸ்டிரேட்டுடன் போர் தொடுக்கச் சட்ட புஸ்தகங்களைப் புரட்டித் தனக்கு அநுகூலமான குறிப்புக்களை எடுத்துக்கொண்டு மனசிற்குள்ளேயே வாதங்களைத் தீட்டி வைத்துக்கொண் டிருந்தான். கற் பனையில் சாக்ஷிகளை ஜோடித்தான். தன்முன்பு நீதி மன்றத்தில் ஜனத்திரள் நிற்பதுபோல் பாவனை செய்து கொண்டு இவ்வாறு வேர்த்து வழியப் போர்க்கோலத் துடன் இருக்கும் சமயம், அவனுடைய சிறிய மாணவி ஏடு கிழிந்த தன் பாடபுஸ்தகங்களையும் நோட்டுப் புஸ்த கங்களையும் எடுத்துக்கொண்டு அங்கே படிக்க வந்து விடுவாள். தோட்டத்திலிருந்து தேர்ந்த நாவற் கனிகளைக் கொண்டு தருவாள். தன் அன்னையைக் கேட்டு ருசி

கரமான ஊறுகாய்களைச் சிற்சில தினம் கொண்டு வந்து தருவாள். ஒருநாள் தேங்காய்ப் பொடிச் சாதம் வரும். வேறு ஒரு தினம் வீட்டிலேயே செய்த தாழம்பூ மணம் கமழும் பிட்டைச் சமயம் பார்த்துக் கொண்டு வைப்பாள்.

முதல் சிலதினங்கள் சசிபூஷணன், சித்திரமே இராத கனமான ஒரு புஸ்தகத்தை வேண்டா வெறுப்பாய்ப் புரட்டுவதைக் காணும்போது கிரிபாலாவுக்கு அதில் அவன் மனம் ஊன்றவில்லை என்றே தோன்றும். முன்னெல்லாம் இந்தமாதிரிப் புஸ்தகங்களைப் பிரித்து அநேகம் அதிசய மான விஷயங்களைச் சொல்லுவான்; ஆனால், இந்த ஒரு புஸ்தகத்திலுள்ள விஷயத்தைமட்டும் ஏனோ அவன் விவரிக்கவில்லை! அதில் தான் அறிந்துகொள்ளக்கூடியது ஒன்றுமே இல்லையா? இருக்கலாம்; புஸ்தகம் பெரியதோ, அன்றோ? தன் சிற்றறிவுக்கு அது எப்படி எட்டும்?— இவ்வாறு அவள் சிந்திக்கலானாள்.

சசிபூஷணனுடைய கவனத்தைத் தன்பால் இழுக்கக் கிரிபாலா கூந்தலை அலப்பிக்கொண்டே உரத்த குரலில் பதங்களைத் தானே கூட்டிக் கூட்டிப் படித்துப் பார்த்தாள். அதனால் ஒரு பலனும் ஏற்படாமற் போகவே அந்தக் கனமான கறுப்புப் புஸ்தகத்தின்மேல் அவளுக்கு எரிச்சல் மூண்டது. அதை ஒரு கொடூரமான மனிதனாகவே பாவித்து வெறுத்தாள். புரிபடாத அந்தப் புஸ்தகத்தின் ஒவ்வோர் ஏடும் கிரிபாலாவை ஏளனம் செய்வதுபோல் மௌனம் சாதித்தது. அவளுக்கு அதன்மேல் இருந்த அசூயையினால் யாராவது அதைத் திருடிக்கொண்டு போயிருந்தால் அவனுக்கு, வீட்டில் செய்த நல்ல பக்ஷணங் களைக்கூட வழங்கியிருப்பாள். அந்தப் பாழும் புஸ்தகம் ஒழியாதா என்று அர்த்தமற்ற பல பிரார்த்தனைகள் செய்துகொண்ட போதிலும் தெய்வம் அவற்றை ஏற்றுக் கொண்டதாகத் தெரியவில்லை. ஆகவே வாசகர்களும் அதைப்பற்றி மேற்கொண்டு சிந்திக்க வேண்டிய அவசியமே யில்லை.

அவன் கவனிக்காமல் இருக்கவே, வேதனையில் ஆழ்ந்த அந்தச் சிறுமி இரண்டொரு நாள் கழித்துத் தன் ஆசிரியனிடம் பாடம் கற்க வருவதை நிறுத்திவிட்டாள். தான் வராதிருப்பதனால் சசிபூஷணன் கவலைப்படுகிறானா என்பதை அறிவதற்குப் பாதையோரமாக மறைவில் நின்று கவனிப்பாள். சசிபூஷணன் அந்தப் பயங்கர மான புஸ்தகத்தை எரிந்துவிட்டுத் தனியாக நின்று

கொண்டு கைகளை ஆட்டி ஆட்டி அந்நியமொழியான ஆங்கிலத்தில் ஜன்னல் கம்பிகளைப் பார்த்து ஏதோ பிரசங்கம் செய்துகொண் டிருப்பான். நீதிபதியின் மனத்தை வசப்படுத்த அவன் கையாளும் முறை இதுவே போலும்! வாழ்க்கையில் அநுபவம் பெருது புஸ்தக உலகில் திரியும் சசிபூஷணன் எண்ணம், 'அந்தக் காலத்தில் டெமாஸ்தனிஸ், ஸிஸிரோ, பர்க், ஷெரிடன் போன்ற மேதாவிகள் தம் நாவன்மையால் அசாமான்யமான காரியங்களைக்கூட நடத்தி யிருக்கிருர்கள். அவர்கள் எதிரியின் வாதங்களைச் சொல்லம்பிஞல் சின்னபின்னம் ஆக்கிப் பல கொடூரங்களை வெளிப்படுத்தி, அகம்பாவம் கொண்டவர்களைத் தரையோடு தரையாகக் கவிழச் செய்து வெற்றிவாகை சூடியிருக்கும்போது, வியாபாரமே உயிர்நிலையாக இருக்கும் இந்தக் காலத்தில் அப்படிச் செய்வது அசாத்தியமன்று' என்பதே. 'அதிகாரத் திமிர் ஏறிய ஆங்கிலேயர்களை உலகோர் முன்பு பணியச் செய்வது எப்படி?' என்பதைக் குறித்துத் திலகுசிக் கிராமத்தில் இடிந்துபோன ஒரு சிறுவீட்டில் நின்றுகொண்டு சசிபூஷணன் யோசித்துக்கொண் டிருந்தான். இதைப் பார்த்து விண்ணவர் அழுதார்களா, சிரித்தார்களா என்று எவ்விதம் சொல்வது?

அன்று முழுவதும் கிரிபாலா அவன் கண்ணிலேயே படவில்லை. அன்று அவள் மடியில் நாவற்பழமும் இல்லை. முன்போல் அந்தப் பழத்தைச் சேகரித்து வைத்துக் கொள்ளவும் அவள் ஆசைப்படவில்லை. என்ருவது ஒருநாள் சசிபூஷணன் அவளை நோக்கிச் சகஜமாக, "கிரி, நாவற் பழம் இல்லையா?" என்று கேட்பான். அப்போது குறும் பாகக் கேட்கிருன் என்று எண்ணி, "போ! உனக்கென்ன வேலை?" என்று எரிந்துவிழுந்து அவ்விடத்தை விட்டு அகல்வாள். சசிபூஷணனுடைய கவனத்தைக் கவர முன் போல் நாவற்கொட்டையை உபயோகிக்காமல் தொலைவில் எதையோ பார்த்து அச்சிறுமி, "ஸ்வர்ணு! இரடி, போகாதே! இதோ நானும் வந்துவிடுகிறேன்" என்று கூக்குரலிடுவாள்.

புருஷவாசகர்கள், 'ஸ்வர்ணலதா' என்ற ஏதோ ஒரு பெண்ணை நோக்கி அவள் இவ்வாறு பேசினுள் என்று நினைக்கலாம். ஆனுல் இதை வாசிக்கும் பெண்மணிகள், 'அது யாரையும் குறிப்பிடவில்லை; சமீபத்தில் இருக்கும் ஆசாமியின் சிந்தனையைக் கலைக்கத்தான்' என்று

எளிதில் ஊகிப்பார்கள். ஆனால் பாவம்! குருடன் முன்பு அவள் செய்த இந்த ஜாலமெல்லாம் பலிக்கவில்லை. அவள் கூவியது சசிபூஷணன் காதில் விழாமல் இல்லை. பாலிகை விளையாட்டின்மேல் உற்சாகமாக இருக்கிறாள் என்று நினைத்தான். அதன் நடுவே அவளைப் பாடம் படிக்க அழைப்பது உசிதமல்ல என்று எண்ணினான். அதோடு அவனுக்கு அலுவல் இருந்தது. யார்மீதோ சொல்லம்பு எய்யப் பழகிக்கொண் டிருந்தான். அவனுடைய சிந்தனையைக் கலக்க அவள், சிறு பிராயத்தில் விட்டெறிந்த கொட்டைகள் குறி தப்பியது போலவே, இப்போது படிக்கத் தெரிந்த பின்பு ஒரு மகத்தான லக்ஷயத்தைக் கைப்பற்ற அவள் வகுத்த உபாயமும் வீணாயிற்று. வாசகர்களுக்கு இது ஏற்கனவே தெரிந்த விஷயந்தான்.

இதில் ஒரு விசேஷம் என்னவென்றால், நாவற் பழக் கொட்டையாவது, நாலு ஐந்து குறி தவறினாலும், ஒன்றாவது இலக்கைப் போய்த் தாக்கும் என்ற நிச்சயம் உண்டு. ஆனால் ஸ்வர்ணா, ஆயிரந்தான் கற்பனைப் பெண்ணாய் இருந்தாலும் 'இதோ வருகிறேன்' என்று சொன்னால்மட்டும் அதிக நேரம் நிற்பாளா? அப்படி நிற்கும் பக்ஷத்தில் ஸ்வர்ணா உண்மையானவளா என்பதைப்பற்றி இயல்பாகவே எல்லோருக்கும் ஸந்தேகம் பிறந்துவிடும். இந்த உபாயம் பயனற்றுப் போகவே கிரிபாலா அவ்விடத்தை விட்டு விரைவில் அகலவேண்டியதா யிருந்தது. தொலைவில் நிற்கும் 'ஸ்வர்ணா' என்ற தோழியோடு சேர்ந்து கொள்ள வேண்டுமென்று அவளுக்கு உள்ளூற ஆசை இருந்தால் அவள் பறந்தல்லவோ சென்றிருப்பாள்; ஆனால் கிரிபாலாவின் நடையில் அந்தப் பரபரப்புத் தென்படவில்லை. அவள் போகும்போது யாராவது தன்னைப் பின் தொடர்கிறார்களா என்று திரும்பித் திரும்பிப் பார்த்தாள். யாரும் வரவில்லை என்று தெரிந்ததும் அவளுக்கு இருந்த சிறு நம்பிக்கையும் மங்கிவிட்டது. நைந்திருக்கும் தன் பாட புஸ்தகங்களைச் சுக்கல் சுக்கலாகக் கிழித்து வழியோரத்தில் சிதற அடித்தாள். சசிபூஷணன் கற்றுக் கொடுத்த வித்தையைத் திருப்பித் தரக்கூடிய சக்தி தனக்கு இருந்தால், சப்பி உமிழ்ந்த நாவற்கொட்டையைப்போல், அதையும் அவன் வாயிற்படியண்டையே கக்கிவிட்டு வந்திருப்பாள். 'இன்னும் ஒருமுறை சசிபூஷணனைப் பார்ப்பதற்குள் கற்றதையெல்லாம் மறந்துவிட வேண்டும்; அவன் ஏதாவது கேள்வி கேட்டால் அதற்குப் பதில் சொல்ல முடியாதபடி இருக்கவேண்டும்—ஒரு

கேள்விக்குக்கூட ; அப்போதுதான் அவன் கொட்டம் அடங்கும்.'—இதுவே அவள் கொண்ட தீர்மானம்.

கிரிபாலாவின் இரு கண்களிலும் நீர் நிறைந்தது. கற்ற கல்வியைத் தான் மறந்துவிட்டால் சசிபூஷணனுக்கு அது வருத்தத்தையே அளிக்கும் என்று நினைக்கும்போது வேதனையுறும் அவள் உள்ளம் சிறிது சாந்தம் அடைந்தது. அவன் செய்த ஒரு பிழையினுல் படிப்பை அறவே மறந்து பெரியவளாகும் கிரிபாலாவைக் கற்பனைக் கண்ணுல் காணும்போது தன் பேரிலேயே அவளுக்கு, உலகத்தில் இல்லாத அநுதாபம் பொங்கி வழிந்தது—அந்தக் கார் காலத்து வானில் தினந்தோறும் மேகம் திரண்டெழுகிறதே அதுபோலவே. கிரிபாலா வழியோரமாக ஒரு மரத்தின் மறைவில் நின்ற வண்ணம் ரோஷம் தாளாமல் விம்மி விம்மி அழுதுகொண்டிருந்தாள். காரணமின்றி அவளைப்போல் தினந்தோறும் எத்தனையோ பெண்கள் அழுவதைப் பார்க்கிறோம் ; நின்று கவனிக்க அதில் என்ன விசேஷம் இருக்கிறது ?

## 6

சசிபூஷணனுடைய சட்டசம்பந்தமான ஆராய்ச்சியும் பேச்சுத்திறமையும் பயனற்றுப் போனதன் காரணம் வாசகர்களுக்குத் தெரிந்தே இருக்கும். மாஜிஸ்டிரேட்மீது தொடுத்த வழக்கு எதிர்பாராத விதமாய் வாபஸ் வாங்கப்பட்டது. ஹரகுமாரர் தம் பர்க்கணுவில் கௌரவ மாஜிஸ்டிரேட்டாக நியமிக்கப்பட்டார். அழுக்கடைந்த ஜிப்பா ஒன்றும் தலைப் பாகையும் போட்டுக்கொண்டு, அவர் இப்போதெல்லாம் ஜில்லா அதிகாரிகளைப் பேட்டி கண்டு தம் வணக்கத்தைச் செலுத்தத் தவறுவதில்லை.

சசிபூஷணனுடைய அந்தக் கருநிறச் சட்டப் புஸ்தகம் கிரிபாலாவின் சாபத்தினுலோ என்னவோ இருளடைந்த மூலை ஒன்றில் சிந்துவாரின்றிப் புழுதியில் கிடந்தது. அது அப்படி ஆதரவற்று விழுந்து கிடப்பதைப் பார்த்துச் சந்தோஷப்படக் கூடிய அந்தக் கிரிபாலா இப்போது எங்கே ?

சட்டப் புஸ்தகத்தைக் கட்டி வைத்த அன்றுதான் கிரிபாலா ஏன் வரவில்லை என்று சசிபூஷணனுக்குத் திடீரெனத் தோன்றியது. ஒவ்வொன்ருகக் கடந்த இரண்டு வருஷகாலத்து நினைவுகள் அப்போதுதான் மனத்தின் கண் எழுந்தன. ஒரு நாள், ஒளி நிரம்பிய காலை நேரத்தில்

கிரிபாலா மடி நிறைய அன்றலர்ந்த மகிழ மலர்களைக் கொண்டு வந்து தன்முன் நின்ற காட்சி அவன் ஞாபகத்திற்கு அப்போது வந்தது. அவள் வந்தது தெரிந்தும் அவன், புஸ்தகத்தை விட்டு முகத்தைத் திருப்பாமல் இருந்தபோது அந்தப் பூவின் நறுமணம் அவனை என்னவோ செய்து விட்டது. கிரிபாலா தன் தலைப்பில் செருகியிருந்த ஊசியை எடுத்துத் தலை குனிந்தபடியே ஒவ்வொரு மலராகக் கோத்து மாலைகட்டலானாள்; மாலையை நிதானமாகவே புனைந்தாள். அதை முடிக்க வெகு நாழிகையாயிற்று. பொழுதோ ஏறிக் கொண்டிருந்தது. கிரிபாலா வீட்டிற்குத் திரும்பும் நேரமும் ஆகிவிட்டது. ஆனால் சசிபூஷணனின் படிப்புக்கு மட்டும் ஒரு முடிவு ஏற்படவில்லை. கிரிபாலா மகிழ மாலையை மேடைமீது வைத்துவிட்டு வாடிய முகத்துடன் போய் விட்டாள். அன்று அவள் உள்ளத்தில் குமுறிய ரோஷம் இப்போது திரண்டு வருவது போன்ற பிரமை மூண்டது அவனுக்கு. 'அவள் இப்போதெல்லாம் ஏன் முன்போல் தன் அறையினுள் வராமல் வெளியிலேயே நின்று பார்த்து விட்டுப் போய்விடுகிறாள்? எதற்காக அவள் இங்கு வருவதை நிறுத்தி விட்டாள்? என்மேல் கிரிபாலாவுக்குக் கோபம் இத்தனை நாள் நீடித்திராதே!'—இவ்வாறெல்லாம் எண்ணிப் பெருமூச்செறிந்து பிரமை பிடித்தவன் போல் சுவரில் சாய்ந்து உட்கார்ந்து விட்டான். தன் சிறு மாணவி வராது போகவே புஸ்தகம் படிப்பதில் அவனுக்கு ஸ்வாரஸ்யம் ஏற்படவில்லை. இரண்டொரு புஸ்தகத்தின் ஏடுகளை அவன் புரட்டிப் பார்த்ததுதான் மிச்சம். அவன் அவற்றையும் ஒரு புறமாக எறிந்து விட்டான். ஏதோ எழுத உட்கார்ந்தான். சற்றைக்கு ஒருதரம் பாதையிலேயே அவன் கண் லயித்திருந்தது, கிரிபாலாவுக்காக.

'கிரிபாலாவுக்கு ஒரு வேளை உடம்பு அசௌக்கியமோ? அதனால்தான் அவள் வரவில்லையோ?' என்று அவன் மனம் அல்லற் பட்டது. விசாரித்ததில் அவன் கவலை கொண்டது வீண் எனத் தெரிந்தது. கிரிபாலா இப்போதெல்லாம் வீட்டுப் படியைத் தாண்டுவதில்லை. அவளுக்கு விவாக வயசாகிவிட்டது; ஒரு வரனும் அகப்பட்டு விட்டான்.

கிரிபாலா தன் பாட புஸ்தகங்களைக் கிராம வீதியில் கிழித்தெறிந்ததற்கு மறுநாள் அதிகாலையில் தன் மடியில் எதையோ மறைத்துக்கொண்டு வேகமாக வீட்டிலிருந்து வெளியே வந்துகொண் டிருந்தாள். கோடைக் காலமான

தால் இரவெல்லாம் தூக்கமின்றிக் கழித்த ஹரகுமாரர் பொழுது விடியுமுன்பே வாசல் திண்ணையில் திறந்த உடம்புடன் புகையிலை போட்டுக்கொண்டு உட்கார்ந்திருந்தார். கிரி அவசரமாகச் செல்வதைப் பார்த்து, "எங்கே போகிறாய்?" என்று கேட்டார். "சசி அண்ணா அகத்திற்கு" என்றாள் கிரி. ஹரகுமாரர் அவளை அதட்டி, "சசியின் அகத்திலே உனக்கு என்ன வேலை? போ உள்ளே! கல்யாணம் ஆகிற வயசாயிற்று; நாளைக்கே மாமியார் வீடு போக வேண்டியவள்! வெட்கம், மானம் இல்லை?" என்று திட்டினார். அன்று தொட்டு அவள் வீட்டிலேயே அடைப்பட்டுக் கிடந்தாள். ஆகவே அவளுடைய ரோஷத்தைத் தணிக்க அவகாசம் கிடைக்காமற் போய்விட்டது சசி பூஷணனுக்கு. மாம்பழச்சத்து, கார் அரிசிப் பிட்டு, எலுமிச்சங்காய் ஊறுகாய்—இவை இப்போதெல்லாம் அவனுக்குக் கிடைப்பதில்லை. மழை பாட்டிற்குப் பெய்துகொண்டிருந்தது. மகிழம் பூ உதிர்வது நிற்கவில்லை. மரம் முழுவதும் பேரிக்கனி பழுத்திருந்தது. கிளிகள் கொத்தி நழுவி விழும் கனிந்த கருநாவற் பழங்கள் மரத்தடியில் சிதறிக் கிடந்தன. ஐயோ, என்ன கொடுமை! அந்தக் கிழிந்த பாட புஸ்தகங்கள் மட்டும் அங்கே தென்படக் காணவில்லையே!

## 7

அன்று கிரிபாலாவுக்கு விவாகம்; கல்யாண வீட்டில் மேள ஓசை கேட்டுக்கொண்டிருந்தது. விவாகத்திற்கு அழைக்கப்படாத சசிபூஷணன் அன்றே படகேறிக் கல்கத்தாவை நோக்கிச் சென்றுகொண்டிருந்தான்.

வழக்கை வாபஸ் வாங்கிக்கொண்டதிலிருந்து ஹரகுமாரர் சசியை விஷக்கண்ணால் பார்த்தார். அவன் தன்னை அலக்ஷ்யம் செய்கிறான் என்றே அவருக்குப் பட்டுவிட்டது. அவன் நடவடிக்கைகளில், அதன் அறிகுறியைத் தாம் காண்பதாக எண்ணிக் கொண்டார். கிராமத்தவர்கள் எல்லோரும் தாம் அவமானப்பட்டதை மறந்து விட்டிருக்கும்போது சசி ஒருவன் மட்டும் அதை ஞாபகமூட்டுவது போல் தோன்றவே அவர் அவன் முகத்தில்கூட விழிக்காமல் இருந்தார். தற்செயலாக அவனைப் பார்க்க நேரிடும்போது அவர் ஹ்ருதயத்தில் என்னவோ ஒன்று உறுத்தும். ஆத்திரத்தில் அவருக்குத் தலை கால் தெரியாமல் போய்விடும்.

சசியை எப்படியாவது ஊரை விட்டே தொலைத்துவிட வேண்டுமென்று கங்கணம் கட்டிக் கொண்டார்.

சசிபூஷணனைப் போன்றவர்களை ஊரை விட்டு அப்புறப்படுத்துவது அப்படி ஒன்றும் கடினமான காரியமல்ல. காரியஸ்தருடைய கோரிக்கையும் சீக்கிரத்திலேயே நிறைவேறிவிட்டது. ஒரு நாள் விடியற்காலையில் பெரிய புஸ்தக மூட்டை, இரண்டு மூன்று தகரப் பெட்டிகள் இவற்றுடன் சசி படகில் ஏறிவிட்டான். கிராமத்தோடு தன்னைப் பிணைத்திருந்த ஒரே அன்புத்தளை அன்றே, ஆடம்பரமான விவாகத்திடையே விண்டது. இந்த அன்புத்தளை தன் ஹ்ருதயத்தை இவ்வளவு திடமாகப் பற்றிக்கொள்ளும் என்பதை இதற்கு முன்னால் அவன் அறிந்து கொள்ளவில்லை. படகு விலகிச் செல்ல செல்ல, கிராமம் தூரத்தில் மெல்ல மறைய மறைய, மணவிழாவின் இனிய வாத்தியத்தின் மெல்லொலி காதில் விழும் போதெல்லாம் அவன் கண்களில் நீர், திரையிடும். அவன் ஹ்ருதயம் துடிக்கும் ; கண்டம் அடைத்துக் கொள்ளும். நெற்றி நரம்புகளெல்லாம் ரத்த வேகத்தினால் படபடக்கும்.

உலகத்துக் காட்சிகளெல்லாம், நிழலைக்கொண்டு நிருமித்த பேய்த்தேர்போல, நிலையற்றே தோற்றின.

காற்று, கடு விசையுடன் பிரதிகூலமாக வீசிக்கொண்டிருந்தது. ஆற்று நீர் அநுகூலமாகச் சென்றபோதிலும் படகு மெல்லவே முன்பு ஏகியது. அதே சமயம் நதியில் நடந்த ஒரு விபரீதம் சசிபூஷணனுடைய பிரயாணத்திற்குத் தடையாக நின்றது; 'ஸ்டேஷன் காட்டி'லிருந்து பட்டணத்திற்குப் புதிய நீராவிக்கப்பல் போக்கு வரத்து ஏற்படுத்தப்பட்டிருந்தது. ஒரு ஸ்டீம்–லாஞ்சு இரைச்சலுடன் நீரைக் குழப்பிக்கொண்டே எதிர்முகமாக வந்துகொண்டிருந்தது. கப்பல் நிர்வாகி இளம் பிராயமுள்ள துரை. அதில் பிரயாணிகள் மிகச் சிலரே இருந்தனர். சசிபூஷணனுடைய கிராமத்தவர்களும் அதில் இருந்தனர். ஒரு பெரிய வியாபாரத்தோணி, சற்றுத் தொலைவிலிருந்தே அந்த ஸ்டீம் லாஞ்சுடன் போட்டி போட்டுக்கொண்டு வந்தது. ஒவ்வொரு சமயம் ஸ்டீமரைப் பிடிப்பதும் பின் தங்குவதுமாய் இருந்தது. தோணிக்காரனுக்குக் குஷி பிறந்துவிட்டது. அவன் முதலில் கீழ்ப் பாய்மரச் சீலையை அவிழ்த்து விட்டான் ; பிறகு அதற்குமேலிருக்கும் பாய்மரச் சீலையையும் பிரித்துவிட்டான். ஸ்டீமரோடு போட்டி போடுவதற்காகத் தோணியினது கூம்பின் உச்சியில் இருக்கும்

குட்டிச் சீலையும் காற்றில் ஊதியது. காற்றின் பளுத் தாங்காமல் பாய்மரம் முன்னே சரிந்தது. கலம் போழ்ந்த ஜலராசிகள் மகா கோலாகலத்துடன் தோணியின் இரு மருங்கிலும் 'தை தை' என்று கொந்தளித்தன. தோணி அப்போது கடிவாளம் அறுந்த குதிரைபோல் தலைதெறிக்கச் சென்றுகொண் டிருந்தது. நதியின் ஒரு வளைவில் துரித மாகச் சென்று தோணி ஸ்டீமரையும் கடந்தது. ஸ்டீமர் நிர்வாகி கிராதிமேல் சாய்ந்தவண்ணம் தோணி போட்டி போடுவதைக் குதூகலத்துடன் பார்த்துக்கொண் டிருந் தான். மரக்கலம் தன் முழுவேகத்துடன் ஸ்டீமரைத் தாண்டி இரண்டொரு கஜம் சென்றபிறகு அந்த வெள்ளைக்காரன் துப்பாக்கியை எடுத்துக் காற்றில் வீங்கும் சீலையைக் குறி வைத்துச் சுட்டான். அக்கணமே சீலை கிழிந்துவிட்டது.

அந்த வெள்ளைக்காரன் எதற்காக இவ்வாறு செய் தான் என்று சொல்வது சற்றுக் கடினம். அவ்வாங்கில மகனின் மனப்பான்மையை வங்காளிகளாகிய நாம் சரியாகப் புரிந்துகொள்ளவே முடியாது. ஒருவேளை சுதேசிப் பாய்மரக் கலம் ஒன்று போட்டியிடுவது அவனுக்குச் சகிக்கவில்லையோ என்னவோ? காற்றில் அழகாக ஊதி விளங்கும் ஒரு பொருளைத் துப்பாக்கியால் சுட்டால் என்ன கதியாகும் என்று பார்க்கும் குரூர ஆவலாகவும் இருக்கலாம், ஒருவேளை. கர்வமாகச் செல்லும் அந்தத் தோணியின் சீலையில் துளைசெய்து அதை ஜலத்தில் அழுத்துவதில் என்ன வேடிக்கை வேண்டியிருந்ததோ அவனுக்கு! அதன் உண்மை நமக்கு என்ன தெரியும்? ஆனால் இதுமட்டும் நிச்சயம்; விளையாட்டு என்று எண்ணிச் செய்யும் விபரீதத்தினால் தமக்கு யாதொரு தண்டனையும் ஏற்படாது என்று திடநம்பிக்கை கொள்வது ஆங்கிலேயருடைய மனப்பான்மை; படகோடு மூழ்கி இறக்கும் மனிதர்களை அவர்கள் ஜீவகோடியைச் சேர்ந்தவர்களாகவே எண்ணமாட்டார்கள். துப்பாக்கியை நீட்டி வெள்ளைக்காரன் சுட்டபோது படகு மூழ்கி விட்டது. அதே சமயம் சசிபூஷணனுடைய படகு இந்த அட்டூழியம் நடந்த இடத்தை அணுகியது. இந்தக் கண்ணராவியைச் சசிபூஷணன் நேரிலேயே பார்க்க நேர்ந்தது. சரசரவென்று தன் படகை அவ்விடத்திற்குச் செலுத்தித் தோணியில் உள்ளவர்களை மீட்க முயன்றான். உள்ளே 'மசாலா' அரைத்துக்கொண்டிருந்த ஓர் ஆளை

மட்டும் காணவில்லை. மழைக் காலமானதால் நதியில் நீர் புரண்டு சென்றது.

சசிபூஷணனுடைய ஹ்ருதயத்துள் ரத்தம் குபீரெனக் கொதித்தெழுந்தது. சட்டம் ஒரு கழுதை; அது ஒரு பெரிய சிக்கலான இரும்பு ஆலை போன்றது. கோல் தாழாது பக்ஷபாதமின்றித் தண்டனை விதிக்கும்போது, அதில் மனிதவுள்ளம் குமுறுவதற்கு ஒன்றும் இல்லை. ஆனால் பசிக்கும்போது உணவு தராமலும், விருப்பம் உண்டாகும் போது அநுபவிக்க விடாமலும், ஆக்ரோஷம் கொள்ளும் போது தண்டனை விதிக்காமலும் இருப்பது சசிபூஷணன் வரைக்கும் இயற்கைக்கு விரோதமானதென்றே தோற்றியது. உலகத்தில் எவ்வளவோ அநீதங்கள் ஏற்படு கின்றன; பார்த்த மாத்திரம் அவற்றுக்குரிய தண்டனையை நம் கையாலேயே விதிக்க முடியாமற் போய்விடுகிறது. கடவுள் இவற்றையெல்லாம் பார்ப்பவன் உள்ளத்தைத் தான் சுட்டெரிக்கிறார். அப்போது சட்டத்தை நினைத்துக் கொண்டு ஆறுதல் கொள்வது நம் மனசுக்கே லஜ்ஜையாய் இருக்கிறது; ஆனால் யந்திரம்போற் சுழலும் சட்டமும், யந்திரத்தால் இயங்கும் கப்பலும் சசிபூஷணனிடமிருந்து அந்த வெள்ளைக்காரனைத் தொலைவாக வைத்துவிட்டன. இவற்றால் உலகத்துக்கு என்ன நன்மைகள் விளைந்தன என்று சொல்வது? ஒன்றுமட்டும் சந்தேகமறக் கூறலாம். சசிபூஷணன் இந்தியனுக்குரிய ஆத்திரம் கொண்டதுதான் மிச்சம்.

மூழ்கிய தோணியிலிருந்து மீண்டவர்களுடன் சசி, தன்னுடைய கிராமத்திற்கே திரும்பி வந்தான். அந்தத் தோணியில் ஏராளமாகச் சணல் இருந்தது. அதை எடுப் பதற்காக ஆட்களை அமர்த்திவிட்டு, ஸ்டீமர் நிர்வாகிமேல் உடனே போலீஸில் பிராது கொடுக்கும்படித் தோணியைச் சேர்ந்தவர்களுக்கு யோசனை கூறினான்.

இதற்கு அவர்கள் சற்றும் சம்மதிக்கவில்லை. "தோணி யைத்தான் பறிகொடுத்தோம். இந்த வம்பில் சிக்கிப் பணத்தையும் பறிகொடுக்க வேண்டுமா? முதலில் போலீஸார் எதிரில் ஆஜராகவேண்டும், அப்புறம் காரி யத்தை விட்டுச் சோறு, தண்ணீர், தூக்கம் இராமல் ஒவ் வொரு கோர்ட்டாக ஏறவேண்டுமே! அதோடு வெள்ளைக்காரத் துரையாயிற்றே! அவன்மேல் புகார் செய்தால் கடைசியில் வழக்கு எந்த விதமாக முடியுமோ?

கடவுளுக்குத்தானே தெரியும்!" என்றான் அவர்களுள் ஒருவன். சசிபூஷணன் தான் வக்கீல் என்றும் வழக்கைத் தன் செலவிலேயே நடத்துவதாகவும் சொன்னதன்பேரில் அவர்கள் ஒப்புக்கொண்டார்கள். ஸ்டீமரில் சென்ற சசிபூஷணனின் கிராமத்தவர் எவரும் சாக்ஷி சொல்ல அறவே மறுத்துவிட்டனர்; "ஐயா! நாங்கள் எதையும் பார்க்கவில்லை; ஸ்டீமரின் பின்பாகத்தில் கிடந்தோம். எஞ்ஜின் போடும் இரைச்சலுக்கும் ஜலத்தின் சலசலப்பிற்கும் இடையே வெடிச் சத்தம் எப்படிக் காதில் விழும்?" என்றார்கள்.

ஊரார்மேல் வெறுப்புற்றவனாய் அவர்களை உள்ளூறச் சபித்துவிட்டு மாஜிஸ்டிரேட் கோர்ட்டில் வழக்கு நடத்த ஆரம்பித்து விட்டான் சசிபூஷணன்.

சாக்ஷியத்திற்கே அவசியம் ஏற்படவில்லை. அந்த ஸ்டீமர் நிர்வாகியே தான் துப்பாக்கியால் சுட்டதாக ஒப்புக்கொண்டான். மேலும் அவன், "ஆகாயத்தில் நாரைக்கூட்டம் ஒன்று பறந்து சென்றது. அதைப் பார்த்துத் தான் சுட்டேன். அப்போது எங்கள் ஸ்டீமர் விசையுடன் சென்று கொண்டிருந்தது. நதி வளைவாகத் திரும்பும் இடம். நான் சுட்டதால் காக்கைதான் விழுந்ததோ, நாரைதான் விழுந்ததோ, தோணிதான் மூழ்கியதோ! எனக்கு எப்படித் தெரியும்? பூமியிலும் ஆகாயத்திலும் வேட்டையாடுவதற்குச் சௌகரியங்கள் இருக்கும்போது தம்பிடி தாளாத அழுக்குப்பிடித்த கந்தல் மேலா குண்டை வீணாக்குவேன்!" என்றான்.

'குற்றவாளியல்ல' என்று விடுவிக்கப் பட்டவுடன் அந்த வெள்ளைக்கார நிர்வாகி சுருட்டை வாயில் பற்ற வைத்துக்கொண்டே நிச்சலமாய் 'உவிஸ்ட்' (whist) விளையாடக் 'கிளப்'பை நோக்கிச் சென்றான். தோணியில் மசாலா அரைத்துக் கொண்டிருந்த ஆளின் பிரேதம் அவ்வூருக்கு ஒன்பது மைலுக்கு அப்பால் கரையில் ஒதுங்கிக் கிடந்தது. சசிபூஷணன் புண்பட்ட உள்ளத்துடன் தன் கிராமத்திற்குத் திரும்பினான்.

அந்தத் தினமே படகை அலங்கரித்துக் கிரிபாலாவை அவள் புக்ககத்திற்கு அழைத்துப் போனார்கள். தன்னை யாரும் அழைக்காது போனாலும் சசிபூஷணன் நதிக்கரையோரமாக வந்து நின்றான். படித்துறையில் கூட்டமாக இருக்கவே சற்றுத் தொலைவாகவே இருந்தான். படகு

நகர்ந்து அவன் எதிரே செல்லும்போது சட்டென ஒரு தரம் நிமிர்ந்து நோக்கியபோது தலையில் முக்காட்டை இழுத்துக்கொண்டு மணமகள் குனிந்த தலையுடன் உட்கார்ந்திருந்தாள். கிராமத்தைவிட்டு நீங்குமுன் ஒரு தரமாவது சசி அண்ணாவைப் பார்க்கவேண்டுமென்று ஏங்கினாள் கிரிபாலா. இன்று தன்னுடைய குரு இவ்வளவு சமீபத்தில் கரையில் நின்றிருப்பது அவளுக்குத் தெரியாமற் போய்விட்டது! அவள் நிமிர்ந்துகூடப் பார்க்கவில்லை. மறைவாக விடும் கண்ணீர், அவள் இரு கன்னங்களிலும் வழிந்தோடியது.

படகும் சிறிது சிறிதாகக் கண்ணுக்கு மறையலாயிற்று. ஆற்றுநீரின்மேல் இளம் வெயில் படிந்து பளபளத்தது. அருகில் இருந்த ஒரு மாமரத்தின் கிளையில் வரிக்குயில் ஒன்று தீங்குரல் எடுத்துச் சலிக்காமல் பாடிக்கொண் டிருந்தது. கூலிப்படகுகள் இக்கரைக்கும் அக்கரைக்குமாகச் சென்றுகொண் டிருந்தன. நீர் மொள்ள வரும் கிராமப் பெண்டுகளின் வாயில், கிரிபாலா புக்ககம் போகும் விமரிசையைப் பற்றிய பேச்சுத்தான். சசி பூஷணன் மூக்குக் கண்ணாடியைக் கழற்றிக் கண்களைத் துடைத்துவிட்டுப் பாட்டை ஓரத்தில் இருக்கும் தனக்குச் சொந்தமான அச்சிறு அறையிலேயே அடைக்கலம் புகுந்தான். திடீரென, 'சசி அண்ணா' என்று கிரிபாலாவின் குரல் கேட்டது போன்ற மருள் ஏற்பட்டது அவனுக்கு. எங்கே அவள்? எங்கே அவள்? எங்கேயும் இல்லை! அவள் வீட்டிலும் இல்லை; வழியோரத்திலும் இல்லை; அவள் கிராமத்திலேயே இல்லை. கண்ணீர் மல்கும் அவன் இதயத்துள் வீற்றிருந்தாள்.

## 8

சசிபூஷணன் மறுபடியும் மூட்டை முடிச்சுக்களுடன் கல்கத்தாவிற்குப் பிரயாணமானான். கல்கத்தா போவதற்கு அவனுக்கு முக்கியமான வேலை எதுவும் இல்லை. ஆகவே ரெயில் வழியாகச் செல்லாமல் நதி மார்க்கமாகவே புறப்பட்டான்.

அப்போது நல்ல மழைக்காலம். வங்காள தேசமுழுதும் வளைந்து வளைந்து குறுக்கும் நெடுக்கும் நீர்நிலைகள் பின்னிக் கிடந்தன: பசுமை போர்த்த வங்க நாட்டின் ஜீவ நாடிகளான நதிகளெங்கும் நிறைபுனல் ஓடிற்று; மரங்களும் புதல்களும் சணலும் கரும்பும் செழித்தோங்கிப்

புதுமை அழகு எங்கும் வழிந்தோடுவதுபோல் தோன்றிற்று.

சசிபூஷணன் ஏறிச்செல்லும் படகு குறுகி வளைந்து ஓடும் பல நீரோட்டங்களில் புகுந்து சென்றது. கரை புரண்டு சென்றது ஜலராசி. நாணற் புதர்களும், சில இடங்களில் பயிர் நிலங்களும் நீரில் மூழ்கிக் கிடந்தன. கிராமத்து எல்லையிலும் மனைகளின் மூங்கில்வேலிக்கு அருகிலும் மாந்தோப்பினுள்ளும் நீர்ப்பெருக்குப் பரவி இருந்தது. எங்கும் எதிர்க்கும்படியாக வானவர் மாரிபொழிந்து வங்க பூமியை வெள்ளக் காடாக்கினர்.

பிரயாணம் தொடங்குமுன் மழையில் குளித்த இயற்கை, கதிரவனின் ஒளியைப் பருகிப் புன்னகை பூத்தது. சில நாழிகைக்கெல்லாம் ஆகாயம் இருண்டு வந்து மழை பொழிய ஆரம்பித்தது. அப்போது எந்தத் திசையைப் பார்த்தாலும் காட்சி மனசுக்குப் பிடிக்காதபடி இருந்தது. பெரு வெள்ளம் ஊரெங்கும் பொங்கி வரும் போது ஆநிரை, ஜலமும் சேறும் குழம்பிய முற்றத்தில் ஒன்றோடொன்று இடி பட்டுக்கொண்டு கொட்டும் மழையிலேயே பரிதாபமுறும்படி நனைவதுபோல், சேறும் சதுப்பும் புதல்களும் நிரம்பி வங்கதேசம் அந்த ஓயா மழைத் தாரையை மௌனமாகத் தாங்கிக்கொண்டிருந்தது. உழவர்கள் ஜம்பங்குடையை போட்டுக்கொண்டு கழனிகளுக்குச் சென்றனர். பெண்டுகள் தெப்பமாக நனைந்து மழையிலும் வாடைக்காற்றிலும் உடலைக் கூசிக் கொண்டே தம் அலுவலாக ஒருவர் வீட்டுக்கு ஒருவர் போவதும் வருவதுமாய் இருந்தனர். சறுக்கும் படித் துறையில் ஜாக்கிரதையாகக் கால்களை வைத்துச் சிலர் தண்ணீர் மொண்டு சென்றனர். வீட்டுத் திண்ணைகளில் குடியானவர் சிலர், புகையிலை மென்றுகொண்டே கும்மென உட்கார்ந்திருந்தனர். அவசியமான வேலையுள்ளவர்கள் வேஷ்டியைத் தூக்கிக் கட்டிக்கொண்டு கையில் செருப்பும் தலையில் குடையுமாகத் தெருவில் போய்க் கொண் டிருந்தனர். மண்டை வெடிக்கும்படியான வெயிலாக இருந்தாலும் கொட்டு மழையாயிருந்தாலும் நம் நாட்டுப் பழைய புனிதமான சம்பிரதாயப்படி, பெண்கள் குடை பிடித்துத்தான் செல்வதில்லையே!

மழை ஓயாது பொழியவே ஓர் இடத்தில் ஒதுங்கி இருக்கும் படகினுள் அடைப்பட்டுக் கிடக்கப் பிடிக்காமல் சசிபூஷணன் ரெயில் மார்க்கமாகப் போவதென்று உறுதி

கொண்டான். இரண்டு நதிகள் சேரும் மணல் திடர் ஒன்றில் சசிபூஷணனுடைய படகைக் கட்டிவிட்டு அதிலுள்ளவர்கள் ஆகாரத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யலாயினர். 'பல்லியை எத்தனை தரம் எடுத்துப் போட்டாலும் அது திரும்பத் திரும்பப் பழங் காடிப்பானையிலேயே போய் விழும்' என்று ஒரு வசனம் உண்டு. சசிபூஷணன் அன்று இதை நிரூபித்துவிட்டான்.

இரண்டு நதிகள் கூடும் அந்த இடத்திற்கு அருகே பெரிய வலைகளைப் பரப்பிச் செம்படவர்கள் மீன் பிடித்துக் கொண்டிருந்தனர். படகு போவதற்கும் வருவதற்கும் மட்டும் ஓர் ஓரமாக இடம் விட்டிருந்தனர். நெடுநாளாக இந்தத் தொழிலில் அவர்கள் ஈடுபட்டிருந்தனர். இதற்காகச் சர்க்காருக்கு மீன் மாசூல் செலுத்தி வந்தனர். அவர்களுடைய துரதிருஷ்டவசமாய் இந்த வருஷம் அந்தப் பக்கமாகத் திடீரென ஜில்லா போலீஸ் சூபரிண்டெண்டெண்டு விஜயம் செய்தான். அவனுடைய படகு தொலைவில் தென்பட்டவுடனேயே முன் ஜாக்கிரதையுடன் படகு செல்வதற்கான வழியை அவர்கள் காட்டினார்கள். ஆனால், 'கேவலம் இந்தச் செம்படவப் பயல்கள் வார்த்தையையா கேட்பது!' என்ற மண்டைக் கொழுப்பினால் வலைகள்மேலேயே படகைச் செலுத்தும்படி ஆட்களுக்கு உத்தரவிட்டான். வலையின் சட்டம் நீரில் படியவே படகு செல்வதற்கு வழி ஏற்பட்டு விட்டது. ஆனால், படகு சட்டத்தின்மேல் மோதியதால் அதன் சுக்கான் மாட்டிக் கொண்டது. அதைச் சரிப் படுத்தச் சிறிது நாழிகை ஆயிற்று.

அந்தப் போலீஸ் துரையின் முகம் கோபத்தால் ரத்தம்போல் சிவந்து விட்டது. உடனே படகை அந்த இடத்திலேயே நிறுத்தினான். அவனுடைய தோற்றத்தைப் பார்த்து அங்கே இருந்த செம்படவர்களெல்லாம் மேல் மூச்சு வாங்க மூலைக்கு ஒருவராக ஓடிவிட்டனர். துரை தன் படகோட்டிகளைக் கூப்பிட்டு வலை முழுவதையும் அறுத்தெறியும்படிக் கட்டளையிட்டான். அவர்களும் கை கூசாமல் எழுநூறு எண்ணூறு ரூபாய் பெறுமான அந்தப் பெரிய வலைக்கோவையைத் துண்டு துண்டாகச் சிதைத் தெறிந்தனர். அவர்கள் அவைகளையெல்லாம் ஒரு போராகக் குவித்த பிறகு செம்படவர்களை இழுத்து வரும்படித் துரை உத்தரவிட்டான். ஓடிப் போனவர்கள் அகப்படாமற் போகவே அக்கம் பக்கத்திலிருந்த இதில்

சம்பந்தப் படாத பேர்வழிகள் நால்வரைப் போலீஸ் சேவகன் பிடித்துக்கொண்டு வந்தான். "நாங்கள் ஒரு பாவத்தையும்அறியோமே!" என்று அந்த நிரபராதிகள் கெஞ்சி மன்றாடினார்கள். அவர்களைப் பிடித்துக் கட்டும்படி அந்தப் போலீஸ் புலி ஆக்ஞை இடும்போது, மூக்குக் கண்ணாடி அணிந்த சசிபூஷணன் சொக்காய்ப் பித்தானைச் சரியாகக் கூடப் போட்டுக் கொள்ளாமல் ஜோடு 'சடக் சடக்' என்று அடித்துக் கொள்ளத் தலைதெறிக்கப் போலீஸ் உத்தியோகஸ்தன் இருக்கும் படகெதிரே வந்து நின்றான்.

ஆக்ரோஷத்தினால் குரல் குலைக்க, "ஏழைச் செம்படவர்களின் வலையைப் பிய்த்தெறியவும், ஒன்றும் அறியாத இந்த ஜனங்களை ஹிம்ஸிக்கவும் உமக்கு என்ன அதிகாரம் ஐயா இருக்கிறது?" என்றான்.

போலீஸ் அதிகாரி, ஹிந்துஸ்தானியில் அவனை ஏதோ வித்தியாசமாகச் சொல்லவே, கரைமேல் இருந்த சசிபூஷணன் இமைப்பொழுதில் படகினுள் தாவி அந்த உத்தியோகஸ்தன்மேல் போய் விழுந்தான்; சிறு பிள்ளைகள் அடிப்பதுபோல் வெறிபிடித்துத் துரையைத் தாக்கினான்.

அதற்கப்புறம் என்ன நடந்ததோ அவனுக்கே தெரியாது. போலீஸ் தாணாவில் கண் விழித்தபோதுதான் தன் நிலை அவனுக்குப் புரிந்தது. அது மனசுக்குத் திருப்தியையோ, உடலுக்குச் சுகத்தையோ தரக்கூடியதாயில்லை.

௭

சசிபூஷணனுடைய தந்தை, பாரிஸ்டரைக்கொண்டு அவனை ஜாமீனில் விடுவித்துக்கொண்டு வந்தார். அப்புறம் வழக்கு விசாரணை ஆரம்பமாயிற்று. வலைஞர் யாவரும் சசிபூஷணன் இருக்கும் பர்கணாவைச் சேர்ந்த ஜமீன் குடிகளே. சங்கடத்தில் அகப்பட்டுக்கொண்ட போதெல்லாம் சசியினிடமே யோசனை கேட்க அவர்கள் வருவது வழக்கம். போலீஸ் சூபரிண்டெண்டெண்டு பிடித்துக்கொண்டு வந்த அந்த நிரபராதிகள் நால்வரும் சசிபூஷணனுக்குத் தெரிந்தவர்களே. தன் பக்கம் சாக்ஷிகளாக வரும்படி அவர்களை யெல்லாம் சசிபூஷணன் அழைத்து வந்தான். ஆனால், அவர்களுக்கு உள்ளுக்குள் நடுக்கந்தான். 'குழந்தையும் குட்டியுமாக இருக்கும் நாம் போலீஸ் வம்பில் மாட்டிக் கொண்டால் என்ன

நேரிடுமோ?' என்ற திகில் அவர்களுக்கு. அதோடு அவர்களுக்குத்தான் அந்த வெள்ளைக்காரத் துரையின் எதிரே நின்று போராடுவதற்கு என்ன சக்தி இருக்கிறது? நஷ்டம் என்னவோ ஆகிவிட்டது! 'இப்போது இந்தச் சாக்ஷி ஸம்மனை ஏற்றுக்கொள்ள வேண்டுமே!' என்று சங்கடத்தில் ஆழ்ந்தார்கள்; "சாமி! நீங்கள் ஏனோ எங்களை இந்த வம்பில் மாட்டிவிடுகிறீர்கள்?" என்று எல்லோரும் ஒருமுகமாய்க் கூறினர்.

நிதானமாகப் புத்திமதி சொன்னதன் பேரில் அவர்கள் நடந்ததை நடந்தவாறே சொல்ல ஒப்புக்கொண்டார்கள்.

இதற்குள் ஹரகுமாரர் ஒரு சமயம் தம் காரியமாய் ஜில்லா மாஜிஸ்டிரேட்டிடம் சென்றிருந்தபோது அங்கே மேற்சொன்ன போலிஸ் அதிகாரி அவரைப் பார்த்து, "ஏன் ஐயா காரியஸ்தரே! உம்முடைய குடிகள் சிலர் போலிஸ்மேல் அக்கப்போரெல்லாம் தொடுக்க ஆரம்பித்து விட்டார்களே!" என்றான். ஹரகுமாரர் திடுக்கிட்டவராய், "என்ன, அப்படி ஒருபோதும் நடக்காதே! அந்த ஈனஜாதிப் பயல்கள் உடம்பில் அவ்வளவு திமிர் ஏது?" என்றார்.

வழக்கு, சசிபூஷணன் பக்கம் வெற்றியடையவில்லை என்பது பத்திரிகை படிக்கும் நண்பர்களுக்குத் தெரிந்திருக்கும்!

வலைஞர் ஒவ்வொருவராக வந்து சாக்ஷிக்கூண்டில் ஏறித் துரை தங்களுடைய வலையை அறுக்கவில்லையென்றும், தங்களைப் படகண்டை வரச்சொல்லிப் பெயரை மட்டும் குறித்துக் கொண்டாரென்று சொன்னார்கள்.

அதோடு நில்லாமல் சசிபூஷணன் ஊரைச்சேர்ந்த இரண்டொருவர், தாம் பிரஸ்தாப ஸம்பவம் நடந்த இடத்தில் ஏதோ கல்யாணத்திற்குப் புறப்படக் கரையில் காத்திருந்ததாகவும், அப்போது சசிபூஷணன் அகாரணமாக ஓடிவந்து போலிஸ்காரரை வலுச் சண்டைக்கு இழுத்ததைத் தாமே நேரில் பார்த்ததாகவும் கலப்பற்ற பொய்யை நீதி ஸ்தலத்தின் நடுவே வாய் கூசாமல் சொன்னார்கள்.

அந்தப் போலிஸ் அதிகாரி தன்னைத் திட்டியதால் தான் அவனை அடித்ததாக ஒப்புக்கொண்டான் சசி. தனக்கு ஆத்திரம் மூண்டதற்கு மூலகாரணம், அதிகாரி

வலையை அறுத்து அந்த நால்வரையும் துன்புறுத்தியது தான் என்று வெளிப்படையாகக் கூறிவிட்டான்.

இந்த மாதிரி ஒரு வழக்கில் சசிபூஷணனுக்குக் கிடைத்த தண்டனை சட்டப்படி அநியாயம் என்று சொல்ல முடியாது. ஆனால், தண்டனை மட்டும் சற்றுக் கடுமைதான். அவன்மேல் மூன்று நான்கு குற்றச் சாட்டுகள்: அடித்த குற்றம், அத்துமீறி வந்தது, போலீஸ் வேலைக்குத் தடை விளைவித்தது முதலியவை. இதில் ஒவ்வொரு குற்றமும் அவன் செய்ததாகவே ருஜுப்படுத்தப் பட்டது.

சசிபூஷணன் தனிமையாக இருந்த தன் சிறு அறை யையும், பொழுதுபோக்குவதற்கு உதவியாய் இருந்த புஸ்த கங்களையும் விட்டுவிட்டுச் சிறையில் ஐந்து வருஷகாலம் உழலவேண்டியதாயிற்று. அவனுடைய தந்தை அப்பீல் செய்வதாகச் சொன்னபோது சசிபூஷணன் அவரைத் தடுத்து, "சிறைவாசமே மேலானது! இரும்புக் கிராதிகள் ஒருபோதும் பொய் சொல்லா. ஆனால் இந்த இருட் டறைக்கு வெளியே நடத்தும் சுதந்திர வாழ்க்கை என்னை ஆபத்தில்தான் சிக்கவைக்கும். நல்ல மனிதர்களின் தொடர்பு இல்லையே என்று நீங்கள் சொல்வதா யிருந்தால் சிறையில்தான் பொய்யர், துரோகிகள், பேடிகள் இவர்கள் அதிகமாக இருக்கமாட்டார்கள்; ஏனென்றால், இடம் குறுகியது. வெளி உலகமோ மிகவும் பரந்தது" என்றான்.

## 10

சசிபூஷணன் சிறைக்குச் சென்ற சில தினங்களுக் கெல்லாம் அவன் தந்தை இறந்துவிட்டார். அவனுக்கு நெருங்கிய உறவு வேறு யாரும் இல்லை. ஓர் அண்ணன் மட்டும் நெடு நாளைக்கு முன்பே மத்திய மாகாணத்தில் ஏதோ வேலையில் அமர்ந்து அங்கேயே தங்கிவிட்டான்; அவன் இந்தப் பக்கம் வருவதே யில்லை. ஊரிலிருந்த கொஞ்சநஞ்சம் சொத்துக்களையும் காரியஸ்தர் ஹரகுமாரர் சூது மார்க்கமாய்க் கபளீகரம் பண்ணிவிட்டார்.

சிறைக் கூடத்தில் கைதிகள் சாதாரணமாகப் படும் கஷ்டத்தைவிட அதிகமாகவே படவேண்டுமென்று அவன் தலையில் எழுதியிருந்தது. அப்படி யிருந்தும் அந்த ஐந்து நீண்ட வருஷங்கள் எவ்விதமோ கழிந்து விட்டன.

மீண்டும் முன்போலவே ஒரு மழைநாளில் உடல் நலிந்து உள்ளம் உடைந்தவனய்ச் சசிபூஷணன் விடுதலை யாகிச் சிறைக்கு வெளியே வந்து நின்முன். சுதந்திர மனிதனுகி விட்டாலும் இந்த விரிவான உலகில் தமர் என்று சொல்லிக்கொள்ள அவனுக்கு யாருமில்லையே! தலைசாய்க்க இடந்தான் ஏது? வீடு வாசலின்றி, உறவினர் இன்றி, சமூகத்தில் இடமின்றித் தான் ஒன்றியாக நிற்பது அவனுக்கே வருத்தத்தை அளித்தது.

மீண்டும் வாழ்க்கையை எப்படித் தொடங்குவது என்று அவன் ஆழ்ந்து சிந்தித்துக்கொண் டிருக்கும்போது ஒரு கோச்சு வண்டி அவன் எதிரில் வந்து நின்றது. அதிலிருந்து ஒரு வேலையாள் இறங்கி, "நீங்கள்தானு சசிபூஷண்பாபு?" என்று கேட்டான்.

"ஆமாம்" என்முன் சசிபூஷணன்.

அந்த ஆள் அக்கணமே வண்டிக் கதவைத் திறந்து, அதில் சசிபூஷணன் ஏறுவதற்காகக் காத்துக்கொண் டிருந்தான்.

சசிபூஷணன் வியப்படைந்து, "எங்கே வரவேண்டும் நான்?" என்முன்.

வேலையாள், "எங்கள் எஜமானர் உங்களை அழைத்து வரச் சொன்னுர்" என்முன்.

வழியில் போவோர் வருவோர் இதைக் கவனிப் பதைக் கண்டு பிடிக்காமல் மேலே பேச்சின்றி வண்டியில் ஏறிக்கொண்டான் சசி. 'வாஸ்தவமாக இதில் ஏதோ பிசகு ஏற்பட்டிருக்கிறது; எப்படியிருந்தால் என்ன? நான் எங்கோ ஓர் இடத்திற்குப் போய்த்தானே ஆகவேண்டும். ஒரு வேளை இந்த அதிசயத்திலிருந்து எனக்குப் புது வாழ்வு ஆரம்பமாகிறதோ என்னவோ?' என்று தன்னுள் எண்ணிக் கொண்டான்.

அன்றுகூடக் காரும் கதிரும் வானவெளி எங்கும் ஒன்றை யொன்று துரத்திக்கொண்டு திரிந்தன. வழி யோரத்தில் மழைநீர் தேங்கிய பைங்கிற வயல்கள் ஒளியும் நிழலும் கலந்து விசித்திரமாகத் தோற்றின. வழியில் சந்தைக்கடை கூடும் இடத்தில் பெரிய தேர் ஒன்று நின்றது. அதற்குச் சிறிது தொலைவில் உள்ள ஒரு மளிகைக் கடையில் தாசரிக் கூட்டத்தினர் தம்புராவை மீட்டித் தாளம் போட்டுக்கொண்டே பாடினர்:

"வருக வருக நாதனே வருக!
வருக விரைவிலென் வேட்கையைப் போக்க!
வருகஎன் உளம்கவர் கள்வனே வருக!"

சசிபூஷணனுடைய வண்டி போய்க்கொண்டே இருந்தது. அவர்களைக் கடந்து சென்றும் பாட்டின் மற்ற அடிகள் தெளிவாகக் காதில் விழுந்தன :

"வருக நோய்மிகச் செய்திடும் அன்பனே!
வருக கருணைக் குழகனே வருக!
வருக கார்முகில் வண்ணனே வருக!"

பாட்டின் அடிகள் வரவர மங்கிக்கொண்டே வந்தன; தெளிவாகக் கேட்கவில்லை. ஆனால் அதனுடைய சந்தம் மட்டும் சசிபூஷணன் மனத்தில் ஓர் அலையை எழுப்பி விட்டது. அவன் தனக்குத் தானே பாடிக்கொண்டு பாட்டின் மிகுதியான அடிகளைக் கவனம் செய்தான் :

"வருகஎன் ஆனந்த வாழ்வே மீண்டு.
வருகஎன் நெடுநாள் துயரே மீண்டு.
வருகஎன் இன்ப துன்பில்வாழ் நிதியே!
வருக வருகஎன் ஆசைக் கொழுந்தே!
வருக வருகஎன் அன்பின் பிழம்பே!
வருக வருகஎன் மனச்சஞ் சலமே!
வருக வருகஎன் தோள்மீ தணைவாய்.
வருக வருகஎன் அழியாப் பேறே!
வருக வருகஎன் அகத்துள் உறைவாய்.
வருக வருகஎன் கண்ணினுள் மணியே.
வருக வருகஎன் கனவிலும் நினைவிலும்.
வருகஎன் உயிரிலும் உடலிலும் உலகிலும்.
வருக வருகஎன் முகத்தொளிர் முறுவலில்.
வருக வருகஎன் கண்பனி யதனில்.
வருக வருகஎன் நிழலிலும் மயலிலும்.
வருக வருகஎன் ஊடலில் உவந்து.
வருக வருகஎன் எண்ணம் அனைத்திலும்.
வருக வருகஎன் பொறுப்புக ளனைத்திலும்.
வருக வருகஎன் அறமே! வினையே!
வருக வருகஎன் நிறைவே! வாழ்வே!
வருக வருகஎன் மரணத் திலுமே."

மதில்சூழ்ந்த ஓர் இரண்டடுக்கு மாளிகை யெதிரே வண்டி வந்து நின்றபோதுதான் சசிபூஷணன் செய்யுள் இயற்றுவதும் நின்றது. அவன் கேள்வி எதுவும் கேட்காமல்

வேலைக்காரன் காட்டிய வழியே வீட்டினுள் நுழைந்தான். அவன் போய் உட்கார்ந்த இடம் ஒரு பெரிய கூடம். அங்கே பெரிய பெரிய கண்ணுடிப் பீரோக்களில் பல விசித்திர வர்ண அட்டைகளையுடைய புஸ்தகங்கள் வரிசை யாக வைக்கப்பட் டிருப்பதைப் பார்த்தான். அந்தக் காட்சியைக் கண்டவுடன் பழைய வாழ்வின் நினைவுகள் மீண்டும் ஒரு முறை சிறையிலிருந்து வெளிப்படுவனபோல் வந்தன. பொன் எழுத்துக்கள் பொறிக்கப்பெற்ற அழகிய கோப்புடைய அந்தப் புஸ்தகங்கள் யாவும் ஓர் இன்ப உலகத்திற்குச் செல்லும் மணிகள் பதித்த தோரணவாயி லாகவே தோற்றின.

மேஜையின் மேலும் என்ன என்னவோ பொருள்கள் கிடந்தன. சசிபூஷணன் மங்கிய பார்வையுடன் அவை என்னவென்று நோக்கினுன்:—ஓர் உடைந்த பலகை, அதன்மேல் அழுக்குப் படிந்த பழைய பாட புஸ்தகம் இரண்டு, கிழியும் தறுவாயிலிருக்கும் ஒரு வாய்ப் பாடு, 'கதாமாலை', காசி ராமதாஸரின் மகாபாரதம் ஒன்று இவைதாம். பலகையின் சட்டத்தின்மேல் அன்ருெரு நாள் சசிபூஷணன் கறுப்பு மசிகொண்டு பட்டையாக எழுதிய 'கிரிபாலா தேவி' என்ற அக்ஷரங்கள் இன்னும் அழியவில்லை. நோட்டுப் புஸ்தகங்களிலும் தான் எழுதிய எழுத்துக்கள் அழியாமல் இருப்பதைக் கவனித்தான்.

எந்த இடத்திற்கு வந்திருக்கிருேம் என்பதை அவன் அறிந்துகொண்டான். அவன் ஹ்ருதயத்துள் ரத்தம் வேக மாய்த் துள்ளி ஓடியது. திறந்த பெரிய சாளரத்தின் வழியாக வெளியே நோக்கினுன். அவன் கண்களில் அப் போது தென்பட்டது என்ன?—கிராதியிட்ட அந்தப் பழைய அறை; மேடும் பள்ளமுமாகச் செல்லும் கிராமப் பாதை; 'டோரியா'ச் சிற்ருடை கட்டிக்கொண்டிருக்கும் அதே பூம்பாவை; அன்று தான் தனிமையில் நுகர்ந்த அவ்வின்ப வாழ்வு!

அந்த நாளில் சுகத்தில் ஊர்ந்துசென்ற வாழ்வு அவ னுக்கு ஏற்றதாகவே இருந்தது. ஒவ்வொரு நாளும் சின்னஞ்சிறு காரியங்களிடையே போவது தெரியாமல் நாட்கள் கழியும். தன் சொந்த அலுவலுக்கு நடுவில் ஒரு பாலிகை தன்னிடம் பாடங் கற்றுக்கொள்ள வருவது ஓர் அற்ப நிகழ்ச்சியாகவே அப்போது தோன்றிற்று. ஆனுல் அந்தக் கிராமத்தின் ஒரு மூலையில் ஏகாந்தமாகக் கழியும் அந்நாட்கள் - அவன் அநுபவித்த அந்தச் சிறு

அமைதி - அவன் பெற்ற அத்துளி இன்பம் - அந்தப் பெண்ணின் சின்னஞ்சிறு முகம் - இவை எல்லாம் சொர்க்கக் காட்சிபோல் தேச கால வர்த்தமானங்களை மீறி அவன் கற்பனையில் நிழல்களெனத் தோன்றின. அன்றைய வாழ்க்கைச் சித்திரங்களும் நினைவுகளும், மழையினால் மங்கிய இந்தக் காலை ஒளியுடன் கூடி, அவன் மனத்துள் எழுந்த இன்னிசையோடு கலந்து அபூர்வமான உருவம் கொண்டன. புதல்கள் சூழச் சேறு படிந்த குறுகிய கிராம வீதியில், தான் அலக்ஷ்யம் செய்த அப்பேதையின் துயருற்ற வதனம் அவன் மனத்திரையில் ஆழ்ந்து பதிந்திருந்தது. இந்தச் சிந்தனைகளுடன் அந்தப் பிச்சைக்காரர் பாட்டும் சேர்ந்து அவனுக்குத் தீராத ஏக்கத்தை உண்டாக்கியது. அந்த நாட்டுப்புறப் பாவையின் முகத்தில் உலகத்துத் துயரனைத்தும் திரண்டிருப்பதுபோல் அவனுக்குப் பட்டது. சசிபூஷணன் தன் இரு கரங்களுக்கிடையே முகத்தை மறைத்து, மேஜைமேல் இருக்கும் அந்தப் பலகை புஸ்தகங்களோடு பதித்த வண்ணம், கடந்துசென்ற அந்நாட்களைப்பற்றிக் கனவு கண்டுகொண்டிருந்தான்.

நெடுநேரம் இவ்வாறு இருந்த பின்பு பக்கத்தில் மெல்லொலி கேட்கவே நிமிர்ந்து பார்த்தான். அவன் எதிரே வெள்ளித் தட்டில் கனிகளும் தின்பண்டங்களும் ஏந்திக் கிரிபாலா மௌனமாகக் காத்திருந்தாள். அவன் தலை தூக்கியதுமே அணிகலம் இழந்து விதவைக்குரிய வெள்ளாடை தரித்திருக்கும் கிரிபாலா பூமியில் படிந்து அவனை வணங்கினாள். எழுந்ததும், முகம் சோர்ந்து நிறம் மங்கி உடல் நலம் குன்றிய சசிபூஷணனைக் கருணை நிரம்பிய கண்களால் நோக்கினாள். தாரை தாரையாக விழிநீர் அவள் கன்னங்களில் பெருகியது.

க்ஷேமலாபம் விசாரிக்க வாயெடுக்கும்போது நெஞ்சில் அடைத்து வரும் அழுகை, சசிபூஷணனைப் பேசவிடாமல் தடுத்து விட்டது. வேதனை அவன் உள்ளத்திலேயே கட்டுண்டு சுழன்றது. அப்போது அந்தத் தாசரிகள் பிச்சையெடுத்துக் கொண்டே அவ்வீட்டெதிரே வந்து நின்று திரும்பத் திரும்ப அதே பாட்டின் அடியைப் பாடினார்கள்.

"வருக வருக நாதனே வருக......"

# கர்வ பங்கம்

எப்படிக் கதை எழுதுவது என்பதை இப்போது தான் கற்றுக்கொண்டேன். பங்கிம் பாபுவையோ ஸர் வால்டர் ஸ்காட்டையோ படித்து ஒன்றும் பிரமாத பலன் ஏற்பட்டுவிடவில்லை. அது யாரால் எப்படி ஏற்பட்டது என்பதை என்னுடைய இந்த முதல் கதையிலேயே எழுதப் போகிறேன்.

என் தந்தையின் மனப்போக்குப் பலவிதமாயிருக்கும்; இருந்தாலும் பால்ய விவாகத்துக்கு எதிராக அவருக்குத் தனிப்பட்ட கருத்து எதுவும் இருந்ததாகத் தெரியவில்லை. எனக்குக் கல்யாணம் ஆகும்போது வயசு பதினேழு நிரம்பிப் பதினெட்டு ஆரம்பம். அப்போது நான் கலா சாலையில் மூன்றும் வருஷம் படித்துக்கொண் டிருந்தேன். என் மனோராஜ்யத்தில் யௌவனத்தின் இளந்தென்றல் வீசியது; கண்ணுக்கு எட்டாத பல திசைகளிலிருந்து அபூர்வமான பல ராகங்களில், பல வகை மணம் கமழ, சந்தம் பல ஒலிக்க, என்னை மயக்கியது அது. இப்போது நினைத்தால்கூட, 'ஆ! அந்த நாள் வருமா?' என்று பெரு மூச்சு விடத் தோன்றுகிறது.

என் தாய் அப்போது இல்லை; கிருஹலக்ஷ்மி இல்லாமல் வீடு வெறிச்சென்றிருந்ததால், என் படிப்பு முடியும் வரையில் காத்திராமல் பன்னிரண்டு வயசு பாலிகையான நிர்ஜரிணியை என் ஸஹதர்மிணியாக அப்பா அகத்துக்கு அழைத்து வந்தார்.

வாசகர்களுக்கு இந்தப் பெயரைத் திடீரென்று அறிவிக்க எனக்குச் சற்றுச் சங்கோசமாகத்தான் இருக் கிறது. ஏனெனில் அவர்களில் அநேகம் பேர் வயசானவர் களாய் இருப்பார்கள்; பள்ளிக்கூட உபாத்தியாயர், முன்சீப், அல்லது சிலபேர் பத்திராசிரியர்களாகவும் இருக்கலாம்; என் மாமனார் இம்மாதிரி அதிநூதனமாகப் பெண்ணுக் குப் பெயரிட்டிருப்பதைக் கேட்டு நகைப்பார்கள். ஆனால் அப்போது அறியாத வயசானதால் நான் எதையும் ஆழ்ந்து

யோசிப்பதில்லை. விவாகம் நிச்சயமாகும்போது பெண்ணின் பெயரைக் கேட்டதுமே,

"செவியினுட் பாய்ந்தது தெளிவாய் மனத்தினுட்
பதிந்தென் ஆவியைப் பருகிய தந்தோ!"

இப்போதோ வயசாகிவிட்டது; வக்கீல் தொழிலை விட்டு முன்சீப் ஆக முயன்றுவருகிறேன்; ஆனால், இந்த ஒரு பெயர்மட்டும் பழையதோர் யாழின் இன்னிசை போல் என் உள்ளத்தினுள் மென்மையாக ஒலிக்கிறது.

இளமையின் தொடக்கத்தில் பல சின்னஞ் சிறு இடையீடுகளிடையே காதல் நிகழ்த்துவதைப்போல் இனிமையானது வேறொன்றும் இல்லை. வெட்கம் ஒருபக்கம் தடை செய்ய, ஒருபக்கம் வீட்டிலிருப்பவர்களாலும், நமக்கே முன் பின் அநுபவம் இல்லாததாலும் தடை ஏற்படும். இவைகளுக் கிடையே முதல் முதலாகக் காதலர் இருவரும் ரகசியமாய்க் கூடி ஒருவரையொருவர் அறிவதை வைகறையின் வர்ண வைசித்திரியத்துக்கு ஒப்பிடலாம்; பகற்பொழுதில் பளிச்செனக் காணும் வர்ண பேதம் அற்ற ஒளிக்கு அல்ல!

இதற்கு இடையூறாக ஆரம்பத்தில் அப்பா விந்திய மலைபோல் குறுக்கே நின்றிருந்தார். என்னை ஹாஸ்டலுக்கு அனுப்பிவிட்டு நாட்டுப் பெண்ணுக்கு வங்காளி கற்றுக் கொடுக்கத் தொடங்கினார். கதையின் ஆரம்பம் இந்த இடத்தில்தான்.

என் மாமனார் தம் பெண்ணுக்கு இம்மாதிரிப் பெயர் வைத்துவிட்டு மட்டும் சும்மா இருந்துவிடவில்லை. அவளது கல்விக்கு வேண்டிய ஏற்பாடுகளையும் செய்திருந்தார். அஸ்திவாரம் போட்டு முடித்துவிட்டார் அவர்; அதனால் 'மேகநாதவத காவியம்'* படிப்பதற்கு ஹேமபாபுவின் உரைகூட அவளுக்குத் தேவையில்லை.

ஹாஸ்டலுக்கு வந்தபின் அவளோடு கடித மூலமாக அதிகப் பரிசயம் ஏற்பட்டது. அப்பாவுக்குத் தெரியாமல், புதிதாக உண்டான விரகவேதனையினால், உணர்ச்சி வேகத்துடன் இரண்டொரு கடிதம் அவளுக்கு எழுத

---

*சென்ற நூற்றாண்டில் சென்னை ஸெக்ரிடேரியட் குமாஸ்தாவாயிருந்த மைக்கேல் மதுசூதன் தத்தர் என்னும் வங்காளிக் கிறிஸ்தவர் எழுதிய ராமாயண ஸம்பந்தமான காவியம்; ஸம்ஸ்கிருத பதப்பிரயோகம் அதிகமாக உள்ளது. இதற்கு ஹேமபாபு என்பவர் உரை எழுதி யிருக்கிறார்.

லானேன், அங்கிருந்தபடியே. இன்னருடையது என்று விளங்கும்படி மேற்கோள் குறி போடாதபடி அவைகளில் நம்முடைய புதிய கவிஞர்களிடமிருந்து வடிக்கட்டி எடுத்துப் பல கவிதைகள் இயற்றினேன். 'அன்புத்தலை யால் அவளைப் பிணைத்துக்கொண்டால் மட்டும் போதாது ; நம்மிடத்தில் அவளுக்கு மதிப்பும் இருக்கவேண்டும்' என்று அப்போது எண்ணினேன். அது ஏற்பட வேண்டுமானல் வங்க மொழியில் எழுதும் திறமை வேண்டும்; அது சுய மாக எனக்கு வரவில்லை. ஆகையால், 'மணௌ வஜ்ர ஸமுத் கீர்ணே ஸூத்ரஸ்யேவாஸ்தி மே கதி:' - அதாவது, மற்றவர்கள் கோக்கத் தயாராகத் துளையிட்டிருந்த மணிகளை என் கடிதத்தில் மாலையாகக் கோத்து அனுப் பினேன். ஆனல் இதிலுள்ள மணிகள் பிறருடை யவை ; நூல்மட்டும் என்னுடையது. இதை வெளிப்படை யாகச் சொல்வது சரியல்ல என்று எண்ணினேன். நான் என்ன ? - காளிதாஸன் கூடத்தான் சொல்ல மாட்டான், உண்மையாக அவன் திருடியிருந்தானுனல் !

அந்தக் கடிதத்திற்குப் பதில் கிடைத்தது ; அது முதல் உரிய இடங்களில் மேற்கோள் குறிபோடத் தவறுவ தில்லை நான். புது நாட்டுப்பெண்ணுக்குத் தாய் மொழி நன்ருகத் தெரியும் என்பது தெளிவாகி விட்டது. அவள் கடிதத்தில் எழுத்துப் பிழை இருந்ததா இல்லையா என்று விசாரணை செய்ய நான் தயாராயில்லை ; இலக்கிய அறிவும், பாஷா ஞானமும் இராவிட்டால் இத்தகைய கடிதம் எழுத முடியாது என்று மட்டுமே எனக்குச் சொல்லத் தெரியும்.

மனைவி படித்தவளாயிருந்தால் நல்ல கணவனுயிருப் பவன் இன்பமும் பெருமையும் அடையவேண்டியது நியாயந்தானே ! 'அப்படி ஒன்றும் எனக்கு ஏற்படவில்லை' என்று என் மேலேயே குறைகூறிக் கொள்ள நான் தயாராயில்லை. இருந்தாலும் சிறிது மனசில் என்னவோ மாதிரித்தான் இருந்தது. அது உயர்ந்த எண்ணமாக இரா திருக்கலாம்; ஆனல் ஒரு பெரிய சங்கடம் என்னவென்ருல், என் படிப்புத் திறமையை யெல்லாம் நான் வெளிக் காட்டின விதம் அந்தப் பெண்ணுக்குப் புரியவில்லை. நான் பர்க், மெக்காலே முதலானவர்கள் எழுதுகிற ரீதியில் கடிதம் வரைந்து தள்ளினேன். அவளுக்குத் தெரிந்த கொஞ்சநஞ்சம் இங்கிலீஷ் அறிவு இதற்குப் பயன்படுமா ? கொசுவைக் கோல்லப் பீரங்கியால் சுட்டால் கொசு

அதனால் சாகுமா என்ன? வெடியும் புகையுந்தானே மிஞ்சும்?

எனக்கு மூன்றுபேர் உயிர் நண்பர்கள். அவர்களிடம் மட்டும், என் மனைவியின் கடிதத்தைக் காட்டாமல் இருக்க முடியவில்லை. அவர்கள் ஆச்சரியப்பட்டு, "அடே! இப்படிப்பட்ட பெண்டாட்டி கிடைத்தது உன் அதிருஷ்டந்தாண்டா!" என்றார்கள். நான் அவளுக்கேற்ற கணவனல்ல என்பதுதான் அதற்கு அர்த்தம்.

நிர்ஜரிணியிடமிருந்து பதில் வருவதற்குமுன் நான் அவளுக்கு எழுதிப்போட்ட இரண்டொரு கடிதத்தில் உள்ளத்தில் இருப்பதையெல்லாம் கொட்டி அளந்திருந்தேன்; அவைகளில் இருந்த எழுத்துப் பிழைகள் இவ்வளவு அவ்வளவல்ல. ஜாக்கிரதையாக எழுதவேண்டுமே என்று அப்போது தோன்றவே இல்லை. அப்படி எழுதினால் எழுத்துப் பிழை அவ்வளவாக ஏற்படுவதில்லை என்பது உண்மைதான்; ஆனால், உள்ளத்திலிருந்து எழும் உணர்ச்சி வெள்ளம் தடைப்பட்டு விடும். இந்த நிலையில் இனிமேல் கடிதப்போக்கு வரத்தை நிறுத்திக்கொண்டு நேரில் ஸம்பாஷிப்பதே உத்தமம் என்று தோன்றியது. அப்பா ஆபீஸுக்குப் போனதும் நான் காலேஜைவிட்டு ஓடிவந்து விடுவேன். இதனால் எங்கள் இரண்டு பேர் படிப்பும் கெட்டுக் குட்டிச் சுவராயிற்று. ஆனாலும் உரையாடுவதில் தேர்ந்து அதற்கு ஈடு செய்து கொண்டோம். இந்த விசாலமான உலகில் எதுவும் ஒரேயடியாகப் பாழாகி விடுவதில்லை. ஒரு விதத்தில் நஷ்டமானால் மற்றொரு விதத்தில் லாபம் இருக்கிறது. இந்தப் பேருண்மையை எங்கள் காதல் பேச்சிடையே அடிக்கடி கண்டு தெளிந்தேன்.

இப்படியிருக்கும்போது, என் மனைவியின் பெரியப்பா பெண்ணுக்கு விவாகமாயிற்று. நாங்களெல்லோரும் கல்யாணச் சாப்பாட்டைச் சாப்பிட்டு விட்டு 'ஹாய்' என்று இருந்தோம். ஆனால் என் மனைவி தன் தங்கை பேரிலுள்ள ஆசையினால் ஒரு கவிதை கட்டி ரோஜா வர்ணக் காகிதத்தில் சிவப்பு மையால் எழுதி அதை அப் பெண்ணுக்கு அனுப்பினாள். அது எப்படியோ அப்பா கையில் அகப்பட்டுவிட்டது. தம் நாட்டுப்பெண்ணின் கவிதையில் கவித்திறமை, நல்ல கருத்து, அழகு, நோக்கு, பத்ததி, எளிமை - என்ற சாஸ்திர சம்மதமான பல அம்சங்களும் பொருந்தியிருப்பதைக் கண்டு பூரித்துப் போனார். தம்முடைய வயசான நண்பர்களிடம் அதைக் காட்டினார்.

அவர்களும் புகையிலை போட்டுக்கொண்டே, "பேஷா யிருக்கிறது !" என்ருர்கள். அவளுக்குக் கவிதை எழுதத் திறமை இருக்கிறது என்பது எல்லோருக்கும் தெரிந்து விட்டது. இப்படித் திடீரென்று தன் பெயர் பிரஸித்தி யாகிவிடவே வெட்கத்தால் அவள் காது, கன்னம் எல்லாம் சிவந்துவிட்டன. ஆனல் நாளடைவில் அது நீங்கிவிட்டது. முன்னமேயே நான்தான் சொல்லியிருக் கிறேனே : இந்த உலகத்தில் எதுவும் ஒரேயடியாக அழிந்தோ, நீங்கியோ போய்விடாது என்று. அந்த வெட்கம் அவள் கன்னத்தைவிட்டு நீங்கி என் அந்தரங்கத்தின் ஓர் இருண்ட மூலையில் குடிபுகுந்துவிட்டதோ, என்னவோ, யார் கண்டார்கள் ?

ஆனாலும், அதற்காகக் கணவனுக்கு உள்ள கடமையை நான் மறந்துவிடவில்லை. பக்ஷபாதம் இல்லாதபடி என் மனைவி எழுதியவற்றிலுள்ள குற்றங் குறைகளைத் திருத்து வதற்குப் பின் வாங்குவதில்லை நான். அவற்றை அப்பா ஆழ்ந்து கவனியாமலே அவளுக்கு உற்சாக மூட்டுவார். நானே அப்போதுதான், மிகவும் ஊன்றி ஊன்றித் தப்புக் கண்டுபிடித்து அவர் அளித்த ஊக்கத்தை என்னலான மட்டும் குன்றச்செய்வேன். ஆங்கிலத்தில் மிக மிகப் பெரிய வர்கள் எழுதியவற்றைக் காட்டி அவளை மட்டந்தட்டச் சிறிதும் பின் வாங்குவதில்லை நான். குயில்மீது ஒரு செய்யுள் இயற்றியிருந்தாள் அவள். நான் ஷெல்லியின் 'ஸ்கைலார்க்', கீட்ஸின் 'நைட்டிங்கேல்' என்னும் கவிதை களை அவளுக்குப் படித்துக்காட்டி ஒரு விதமாக அவள் வாயை அடக்கிவிட்டேன். 'நாம் ஆங்கிலம் படிக்கிறோம்' என்ற தலைக்கிறுக்கில் ஷெல்லி, கீட்ஸ் - இவர்களுக்கிருந்த கௌரவத்தில் எனக்கும் சிறிது பங்கு உண்டு என்று தோன் றிற்று. அதுமுதல் ஆங்கில இலக்கியத்திலிருந்து ரஸமான வற்றைத் தனக்கு மொழிபெயர்த்துச் சொல்லும்படி என் மனைவியும் என்னைத் தொந்தரவு செய்ய ஆரம்பித்தாள். நான் மிகவும் இறுமாப்படைந்தேன். அவள் வேண்டு கோளின்படியே ஆங்கில இலக்கியத்தின் மேன்மையை நன்ருக விளக்கினேன்; என் விருப்பம் நிறைவேறிவிட்டது. எவ்விதமோ என் மனைவியின் புகழை மங்கி மறையச் செய்துவிட்டேனல்லவா? பெண்பாலாரை மெல்லியலார் என்றுதானே நாம் சொல்லுகிறோம்! அதற்கேற்றபடி அவர்களைச் சற்று நிழல் மறைவிலேயே வைத்திருக்க வேண்டியது நம்கடமை அல்லவா? அப்பாவுக்கும் அவர்

நண்பர்களுக்கும் இதெல்லாம் தெரிகிறதா? அதனால் நானே இந்தப் பெரிய பொறுப்பைத் தலையில் ஏற்றுக்கொண்டேன். இரவில் திகழும் முழுமதி பகலில் கதிரவனைப்போல் ஒளி வீசினால் முதலில், "ஆஹா! ஆஹா!" என்றுதான் ஆச்சரியப்படுவோம். ஆனால் சற்றுக் கழித்து, 'இதை எப்படியடா மறைப்பது?' என்ற கவலை ஏற்படுவது இயல்புதானே?

என் மனைவி எழுதியவற்றை யெல்லாம் அப்பாவும் மற்றவர்களும் பத்திரிகைகளில் போடவேண்டு மென்றார்கள். நிர்ஜரிணி சிறிது நாணப்பட்டாள்; பெண்களுக்கு இயல்பாயுள்ள அக்குணம் அவளிடமிருந்து நீங்காதபடி நான் பார்த்துக்கொண்டேன். பத்திரிகையில் அவற்றைப் பிரசுரிக்க நான் விடவில்லை; ஆனால் தெரிந்தவர்களிடம் படித்துக் காட்டுவதை மட்டும் தடை செய்ய என்னால் முடியவில்லை!

இதனால் ஏற்பட்ட விபரீத பலனை மிக விரைவிலேயே நான் அநுபவிக்க நேர்ந்தது. அப்போது நான் வக்கீலாகி விட்டேன்; ஆலிபுரத்திற்குப் போயிருந்தேன், உயில் சம்பந்தமான ஒரு வியாஜ்யத்திற்கு. அதில் பிரதிவாதிக்கு எதிராகப் பலமாய் வழக்காடிக்கொண் டிருந்தேன். உயில் வங்காளியில் எழுதப்பட்டிருந்தது. "வாதிக்கு அநுகூலமாகத்தான் உயில் இருக்கிறதென்பது அதன் பொருளிலிருந்தே நன்றாகப் புலனாகின்றது" என்று சட்ட ரீதியாக நான் நிரூபித்துக்கொண் டிருந்தேன். அப்போது பிரதிவாதியின் வக்கீல் எழுந்து, "மேதாவியாகிய என் நண்பர் பண்டிதையான தம் பாரியாளிடம் இந்த உயிலுக்கு அர்த்தம் தெரிந்துகொண்டு வந்திருந்தால் இந்த மாதிரியான அற்புத வியாக்கியானம் செய்து தாய்மொழியைக் கொலை பண்ணியிருக்க மாட்டார்" என்றார்.

மூக்கிலும் கண்ணிலும் நீர் வர அடுப்பிலே நெருப்புப் பற்ற வைக்க வேண்டியிருக்கிறது. ஆனால் ஒரு வீடு எப்படியோ தானாகப் பற்றிக்கொண்டு எரிகிறதே; அப்போது நெருப்பை எப்படியடா அணைப்பது என்று திண்டாடுகிறோம். ஒருவன் நல்லது செய்தால் அது கொஞ்சத்தில் பிரபலமாகாது; ஆனால் அவனைப்பற்றி அருவருக்கத்தக்க விஷயம் ஏதாவது இருந்தாலோ அது எல்லார் வாயிலும் அடிபடும். உலைவாயை மூடலாம்; ஊர் வாயை எப்படி மூடுவது? இந்த உயில் விஷயமும்

எங்கும் பரவி விட்டது. என் மனைவிக்கு இது எட்டப் போகிறதே என்று எனக்கு உள்ளூறத் திகில்தான்; நல்ல வேளையாக அப்படி ஒன்றும் நேரவில்லை. எதுவோ, இன்று வரையில் இதைப்பற்றி அவள் ஒரு வார்த்தையும் எடுக்க வில்லை.

முன் பின் அறியாத ஒருவரை, ஒருநாள் நான் சந்திக்க நேர்ந்தது; அவரோடு பரிசயம் ஏற்பட்டதும், "தாங்கள் தாம் ஸ்ரீமதி நிர்ஜரிணி தேவியின் கணவரா?" என்று கேட்டார். அதற்கு, "நான் அந்த அம்மாளுடைய கணவனு அல்லவா. என்ற கேள்விக்குப் பதில் சொல்ல எனக்கு இஷ்டமில்லை; ஆனால் அந்த அம்மாள் என் மனைவிதான். அதுமட்டும் நிச்சயம்" என்றேன். 'இன்னவள் புருஷன் இவன்' என்று பிறரிடம் பெயரெடுப்பது என் கௌரவத் திற்கு ஏற்றதாக எனக்குப் படவில்லை.

உண்மையாகவே இது கௌரவப்படக்கூடிய விஷயம் அல்ல என்பதை இன்னும் தெளிவாக வேறு ஓர் ஆசாமி எனக்கு அறிவுறுத்தி விட்டான். என் மனைவியின் பெரியப்பா பெண்ணுக்கு விவாகமான விஷயம் வாசகர் களுக்கு முன்னமே தெரிந்திருக்கும். அவள் கணவன் மகாமுரடன்; தூர்த்தன். அவளை அவன் படுத்தி வைத்த பாட்டைச் சொல்லி முடியாது. அந்தக் கல்நெஞ்சனுடைய கொடூர நடத்தையைப் பற்றிப் பந்துக்களோடு பேசிக் கொண்டிருந்தேன். இது எப்படியோ பெரியதாகப் போய் அவன் காதுக்கு எட்டிவிட்டது. அதுமுதற்கொண்டு அவன், "தன்னாலே ஒருவன் பெயரெடுப்பது சிலாக்கிய மான விஷயம்; மாமனாரால் பெயரெடுத்தான் மாப்பிள்ளை என்பது ஒருவிதம். சாஸ்திரத்தில் சொல்லியிருப்பது போல் உத்தமம், மத்தியமம், அதமம் என்று இப்படிப் பல விதத்தில் பெயரெடுப்பது சகஜம். ஆனால் இதுபோல் பெண்டாட்டி பெயரால் கணவன் பிரபலமாகிற யுக்தி இதுவரையில் எந்த மேதாவியின் மூளைக்கும் எட்ட வில்லையே!" என்று என்னைக் குறித்து எல்லோரிடமும் பேசித் திரிகிறான்.

இப்படி யெல்லாம் ஊரார் பேசிக்கொள்ள ஆரம் பித்தால் என் மனைவிக்கு இயல்பாகவே தலைக்கிறுக்கு ஏற்படவேண்டியதுதானே? முக்கியமாக அப்பாவிடத்தில் ஒரு கெட்ட வழக்கம் உண்டு. நிர்ஜரிணியின் எதிரிலேயே வங்கபாஷையில் எனக்கும் அவளுக்கும் உள்ள ஞானத்தின் ஏற்றத்தாழ்வை எடுத்துச் சொல்லி என்னை ஏளனம்

செய்வார். ஒரு நாள் அவர், "ஹரிச், வங்காளியில் எழுதுகிற கடிதங்களில் இருக்கிற எழுத்துப் பிழையை நீ ஒரு தடவை பார்த்துத் திருத்திக் கொடுக்கக் கூடாதா, அம்மா? எனக்கு அவன் ஒரு கடுதாசி எழுதியிருந்தான். அதில் 'ஜகதிந்திர' என்பதற்குப் பதில் 'ஜகதீந்திர' என்று இகரத்தை நீட்டியிருக்கிருன்'' என்ருர்.

இதைக் கேட்டதும் அவள் ஒரு விதமாகப் புன்னகை செய்தாள். நானும் 'இது தமாஷாதானே' என்று அவளோடு சேர்ந்து சிரித்தேன். ஆனாலும் இப்படிக் கிண்டல் செய்வது சரியென்று எனக்குப் படவில்லை.

என் மனைவிக்கு எவ்வளவு வித்தியாகர்வம் இருக்கிற தென்பதை விரைவிலேயே அறிந்துகொண்டேன். அந்தப் பேட்டையில் வாலிபர் சங்கம் ஒன்று இருந்தது. அங்கே ஒருநாள் பிரபல வங்க எழுத்தாளர் ஒருவரைப் பேச அழைத்திருந்தார்கள்; பிரசித்தரான மற்ருெருவரையும் தலைவராகப் போட்டிருந்தார்கள். பிரசங்கத்திற்கு முந்தின நாள் இரவு 'உடம்பு சரியாயில்லை' என்று சொல்லி விட்டார் அவர். வேறு வழியில்லாமல் சிறுவர்கள் என்னைப் பிடித்துக்கொண்டு தொந்தரவு கொடுத்தார்கள். என்னிடத்தில் அவர்களுக்குத் திடீரென ஏற்பட்ட மதிப்பைக் கண்டு உள்ளம் பூரித்துவிட்டேன்; "அது சரி; பிரசங்கம் எந்த விஷயத்தைப்பற்றி?'' என்று கேட்டேன்.

"புராதன வங்க இலக்கியமும், நவீன வங்க இலக்கிய மும்'' என்ருர்கள்.

"அப்படியே ஆகட்டும், இரண்டும் எனக்குச் சரி சமமாகத் தெரியும்'' என்றேன்.

மறுநாள் இளைஞர் கழகத்திற்குப் புறப்படுமுன் சிற் றுண்டி அருந்தி உடை மாற்றிக்கொள்வதற்காகப் பின் கட்டுக்குப் போனேன்; மனைவியைச் சற்று அதட்டினேன்.

"என்ன! எதற்காக இப்படி அவசரப்படுகிறீர்கள்? மறுபடியும் எங்கேயாவது பெண் பார்க்கப் போகிறீர்களா என்ன?'' என்று கேட்டாள் நிர்ஜரிணி.

"ஒரு தடவை போய்ப் பார்த்து விட்டுத்தான் சிண்டைக் கொடுத்துவிட்டுத் திண்டாடுகிறேனே! இன்னுமா?—போதுமே'' என்றேன்.

"அப்படியானல் ஏன் இவ்வளவு தடபுடல்?''

நடந்த சங்கதியை என் மனைவியிடம் அதிகப் பெருமை யோடு தெரிவித்துக் கொண்டேன். அதைக் கேட்டு அவள்

உற்சாகம் அடையவேண்டுமே! – அதுதான் இல்லை; வருத்தமுற்றவள்போல் முகத்தை வைத்துக்கொண்டு என் கையைப் பிடித்தபடி, "உங்களுக்குப் பைத்தியமா என்ன? வேண்டாம்; அங்கே போகக்கூடாது; சொன்னேன்" என்றாள்.

நான், "ராஜபுத்திர ஸ்திரீகள் தங்கள் கணவன்மாருக்கு யுத்த ஆடை உடுத்துப் போர்க்களத்திற்கு அனுப்புவார்களாம். வங்காளிப் பெண்கள் கணவனைப் பிரசங்கமேடைக்கு அனுப்புவதற்குக்கூடத் தயங்குவது அழகா?" என்றேன்.

"நீங்கள் இங்கிலீஷில் பிரசங்கம் பண்ணுவதாயிருந்தால் எனக்கு ஒரு திகிலும் இல்லை. ஆனால்—வேண்டாமே! அநேகம் பேர் அங்கே வருவார்கள். உங்களுக்கு வங்காளியில் பேசி வழக்கமில்லை - கடைசியில் -"

முடிவில் என்ன நேரும் என்பதை நானும் யோசிக்காமற் போகவில்லை. அப்போது ராம்மோஹன் ராயரின் பாட்டு ஒன்று என் நினைவுக்கு வந்தது:

'அந்தப் பயங்கர அந்திம நாள்வரும்;
வந்தவர் பேசநீ மௌனமாய் நிற்பாய்.'

பிரசங்கி தம்சொற்பொழிவை முடித்துவிட்டு நிற்கும்போது தலைவருக்குத் திடீரென ஏழு நாடியும் ஒடுங்கிப் போய் உடம்பு சில்லிட்டு வாய் அடைத்துவிட்டால் என்ன செய்வது? இவற்றை யெல்லாம் தீர ஆலோசித்துப் பார்த்தபோது தேக அசௌக்கியம் என்று சொல்லித் தப்பித்துக் கொண்டு ஓடிவிட்ட அந்தத் தலைவரைவிட நான் எந்த விஷயத்தில் அதிகத் தைரியசாலி என்று எனக்கே விளங்கவில்லை!

அப்போது என் மார்பை என்னவோ செய்யவே நான் அதைப் பிடித்துக்கொண்டே, "நிர்ஜர், என்ன செய்கிறது சொல்லேன்?" என்று கேட்டேன்.

என் மனைவி, "நான் சொல்வதற்கு என்ன இருக்கிறது? எனக்கு என்னவோ தலையெல்லாம் கனக்கிறது-ஜுரம் வரும்போல் இருக்கிறது; நீங்கள் இன்றைக்கு என்னை இப்படி விட்டுவிட்டுப் போகக்கூடாது" என்றாள்.

நான், "அது சரி; உன் மூஞ்சிகூடச் சற்றுச் சிவந்துதான் இருக்கிறது" என்றேன்.

அவள் முகம் சிவந்தது, பிரசங்க மேடையில் நான் அவமானப்படப் போகிறேன் என்று எண்ணி வெட்கப் பட்டதாலோ அல்லது ஜுரம் வரப்போவதாலோ; அது எதனுல் என்பதைக் குறித்து நான் அப்போது யோசனை செய்யவில்லை. சங்கக் காரியதரிசியிடம் சென்று, "என் மனைவிக்கு உடம்பு சரியாயில்லை" என்று சொல்லி மெதுவாகத் தப்பித்துக்கொண்டேன்.

என் மனைவிக்கும் உடம்பு உடனே குணமாய் விட்டது என்று சொல்ல வேண்டியதில்லை. உள்ளத்திலே ஒன்று, "எல்லாம் சரி; ஆனுல் தாய்மொழியில் உனக்கு எவ்வளவு ஞானம் உண்டு என்பதை உன் மனைவி நன்ருகக் கண்டு கொண்டு விட்டாள். இது ஒன்றுதான் மனசுக்குத் திருப்தியாயில்லை. தான் பிரமாதமாகப் படித்தவள் என்று அவளுக்குக் கர்வம். ஒருநாள் இல்லாவிட்டால் ஒருநாள் திரைமறைவில் இராப் பள்ளிக்கூடம் வைத்து உனக்கு வங்காளி கற்றுக்கொடுக்கக்கூட ஆரம்பித்து விடுவாள்!" என்றது.

நான், "அது சரிதான்; இப்போதே அவள் கொட்டத்தை அடக்கினுல்தான் ஆயிற்று. இல்லா விட்டால் அவள் தலையைப் பிடிக்க முடியாது" என்று தீர்மானித்துக் கொண்டேன்.

அன்று இரவே அவளோடு சச்சரவு செய்ய ஆரம் பித்து விட்டேன். அரைகுறைக் கல்வியினுல் விளையும் கேட்டைப்பற்றிப் போப் எழுதிய ஒரு காவியத்திலிருந்து அவளுக்கு மேற்கோள் ஒன்று எடுத்துக் காட்டினேன். எழுத்துப் பிழை, இலக்கணப் பிழை இல்லாமல் எழுதி விடுவதால் ஒன்றும் பயனில்லை; முக்கியமாக வேண்டியது கருத்துத்தான் என்றும் தெரிவித்தேன்.

பிறகு சற்றுக் கனைத்து விட்டு, "ஒரு பாஷையின் அடிப்படையான விஷயங்கள் தெரிந்தால் மட்டும் கருத்துக்கள் மனத்தில் தோன்றி விடுமா? அதற்குச் சுயமாகவே மூளைவேண்டும். அதுதான் பிரதானம்" என்றேன். மூளைஎங்கே இருக்கிறது என்பதை நான் அவளுக்குத் தெளிவாகக் காட்டா விட்டாலும் நான் சொன்னதன் அர்த்தம் அவளுக்கு விளங்காமற்போயிராது.

"எங்கேயாவது, என்ருவது ஒரு பெண்பிள்ளை நல்ல தாக ஏதோ எழுதி யிருக்கிருள் என்று கேள்விப்பட்டிருக் கிருயா?" என்றேன்.

இதைக் கேட்டதும் நிர்ஜரிணி பெண்களுக்கு இயல்பான விதண்டாவாதத்தில் இறங்கிவிட்டாள். "பெண் பிள்ளைகளுக்கு எழுத யோக்கியதை இல்லாமற் போவானேன்? பெண்கள் என்றால் என்ன, அவ்வளவு இழிவா?" என்றாள்.

"கோபித்துக்கொண்டு என்ன பயன்? திருஷ்டாந்தம் ஏதாவது இருந்தால் காட்டேன்" என்றேன்.

நிர்ஜரிணி, "உங்களைப்போல் சரித்திரம் கிரித்திரம் படித்திருந்தால் நான் எத்தனையோ திருஷ்டாந்தம் காட்டியிருப்பேன்" என்றாள்.

இதற்கப்புறம் ஒருவாறு என் மனம் அமைதி அடைந்தது. ஆனாலும் விவாதம் இதோடு நின்றுவிடவில்லை. அது எப்படி முடிந்தது என்பதைத்தான் பின்னால் விவரமாகக் கூறப்போகிறேன்.

'உத்தீபனு' என்ற ஒரு மாதப்பத்திரிகையில் 'உயர் தரக் கதைக்கு 50 ரூபாய் பரிசு' என்று விளம்பரம் செய்திருந்தது. நாங்கள் இருவரும் தனித்தனியே ஒவ்வொரு கதை எழுதி அனுப்புவது, யார் அந்தப் பரிசு பெறக் கொடுத்து வைத்திருக்கிறார்களோ பார்க்கலாம் என்று ஒரு தீர்மானம் செய்துகொண்டோம்.

இது அன்று இரவு நடந்த விஷயம். மறுநாள் பொழுது விடிந்து மூளை தெளிந்திருந்தபோது எழுதலாமா, வேண்டாமா என்று தயக்கம் ஏற்பட்டது. ஆனாலும் 'இந்தச் சந்தர்ப்பத்தை விட்டுவிடக் கூடாது; எப்படியிருந்தாலும் இதில் ஜயித்தே தீருவது' என்று கங்கணம் கட்டிக்கொண்டேன். இன்னும் இரண்டு மாதம் தவணை இருந்தது.

'மரபுத்தொடர் அகராதி' ஒன்று வாங்கினேன். பங்கிம் பாபுவின் நூல்களையும் சேகரித்தேன். ஆனால் அவர் எழுதும் நடை என்னைவிட என் அகத்துக்காரிக்குத்தான் அதிகப் பழக்கமானது. ஆகையால் அதைக் கைவிட்டேன். ஆங்கிலக் கதைப் புத்தகங்களை நிறையப் படிக்க ஆரம்பித்தேன். பல கதைகளிலிருந்து பிய்த்துத் திருடி ஒரு 'பிளாட்' கண்டு பிடித்துவிட்டேன். 'பிளாட்' என்னவோ மிகவும் அழகாக அமைந்திருந்தது. ஆனால் ஒரு சங்கடம்: அந்த மாதிரிச் சம்பவங்கள் எல்லாம் ஒரு போதும் வங்க சமூகத்தில் நிகழ முடியாது; ஆகவே பண்டைக்காலத்தில் பாஞ்சால நாட்டின் எல்லைப்புறத்தில் கதை நிகழ்வதாகப் புனைந்தேன். அங்கே நடக்கக் கூடி

யதையும் நடக்கக் கூடாததையும் இங்கே யார் கண்டார்கள்? தங்கு தடை இல்லாமல் பேனு போகிற போக்கில் விட்டுவிட்டேன். காந்தர்வ விவாகம், அபாரமான வீரதீரச் செயல், துன்பகரமான முடிவு - இப்படி ஒன்றன்பின் ஒன்ருகச் சம்பவங்களைச் சர்க்கஸ் குதிரை காட்டும் சாமர்த்தியங்களைப் போல் என் கதையில் அமைத்துவிட்டேன்.

இரா வேளைகளில் தூக்கம் என்பதே இல்லை. பகலிலோ சாப்பிடும்போது சாதத்தட்டில் குழம்பையும் குழம்புக் கிண்ணத்தில் சாதத்தையும் எடுத்துப் போட்டுக் கொள்வேன். இதைப் பார்த்து நிர்ஜரிணி, "இப்படி யெல்லாம் பண்ணினுல் என் தலையைத் தின்ருற் போலே! நீங்கள் ஒரு கதையும் எழுத வேண்டாம்; நான்தான் தோற்றுப்போய் விட்டேன் என்று ஒப்புக் கொள்கிறேன்! இதில் என்ன வந்தது?" என்று என்னைக் கெஞ்சிக் கேட்டுக்கொண்டாள்.

நான், "இரவும் பகலும் கேவலம் கதை எழுதுவதற்காகவா மண்டையை உடைத்துக்கொண்டு திண்டாடுகிறேன் என்று எண்ணுகிருய்? அதெல்லாம் ஒன்றும் இல்லை. கக்ஷிக்காரனைப் பற்றித்தான் யோசனை. உன்னைப் போலக் கதையும் கவிதையும் எழுதுவதற்கு எனக்கு அவகாசம் இருந்தால்தான் பரவாயில்லையே; எங்கே இருக்கிறது?" என்றேன்.

எப்படியோ ஆங்கிலப் 'பிளாட்'டையும் ஸம்ஸ்கிருத அகராதியையும் வைத்துக்கொண்டு ஒரு கதையை உருவாக்கிவிட்டேன்.

ஆனுல், 'பாவம், நிர்ஜரிணி ஆங்கில இலக்கியமே படிக்காதவள்; அவளுக்குக் கிடைக்கக் கூடிய விஷயமோ சொற்பந்தான். நம்மோடு அவள் போட்டியிட்டது சரியாகுமா?' என்று நியாய அநியாய விசாரணையில் ஆழ்ந்து விட்டது என் மனம்.

### பின்னுரை

எழுதின கதைகளை அனுப்பியாகி விட்டது. வைகாசி மாத இதழில் பரிசு பெற்ற கதை வெளியாகப் போகிறது. எனக்கே பரிசு கிடைக்கும் என்பதில் சந்தேகமே இல்லை எனக்கு; ஆனுலும் நாள் நெருங்க நெருங்க மனம் குழம்ப ஆரம்பித்துவிட்டது.

வைகாசி மாதம் பிறந்துவிட்டது. ஒருநாள் கோர்ட்டி லிருந்து மிக விரைவாகத் திரும்பி வந்தேன். வந்ததும் ‘உத்திபனு’வின் வைகாசி இதழ் வந்துவிட்டது; என் மனைவி அதை வாங்கிக்கொண்டாள்’ என்று சங்கதி எட்டியது.

மெல்ல மெல்லச் சப்தம் செய்யாமல் பின்கட்டிற்குப் போனேன். படுக்கையறையில் எட்டிப் பார்த்தேன். என் மனைவி ஏதோ புஸ்தகம் ஒன்றைக் கொளுத்திக் கொண்டிருந்தாள். அங்கே சுவரிலுள்ள கண்ணுடியில் நிர்ஜரிணியின் முகம் தெரிந்தது. அதைப் பார்த்ததும் சற்றுமுன் அவள் அழுதிருக்க வேண்டுமென்று தோன்றியது.

எனக்கு உள்ளூற உவகைதான்; அதோடு கருணையும் பிறந்தது—ஐயோ பாவம்! ‘உத்திபனு’வில் அவள் கதை வெளிவரவில்லை யாக்கும்! இந்த ஸாமான்ய விஷயத்திற்கா இவ்வளவு துக்கம்?—ஏன் இராது? பெண்பிள்ளைகளுக்கு இந்தமாதிரி அற்ப விஷயமே பிரமாதமாகப் பட்டுவிடும்!

நான் வந்ததுபோலவே நிச்சப்தமாகத் திரும்பிப் போய் விட்டேன். ‘உத்திபனு’ காரியாலயத்திலிருந்து துட்டுக்கொடுத்து ஒரு பிரதி வாங்கி வந்தேன். என்னுடைய கதை வந்திருக்கிறதா என்று அதைத் திறந்து பார்த்தேன். அட்டவணையில் பரிசுபெற்ற கதையின் பெயர் ‘விக்ரம நாராயணன்’ என்று போட்டிருக்கவில்லை; ‘நாத்தனூர்’ என்ற தலைப்புடைய கதைதான் அதற்குப் பதிலாக இருந்தது! அதை எழுதினது யார்?—என்ன இது? இதோ நிர்ஜரிணி என்று இருக்கிறதே!

‘வங்காளத்தில் என் மனைவி ஒருத்திதானு நிர்ஜரிணி! வேறு யாருக்கும் அந்தமாதிரிப் பெயர் இராதா?’ என்று எண்ணிக்கொண்டே அதைப் பிரித்துக் கதையைப் படித்தேன். நிர்ஜரிணியின் பெரியப்பா பெண் சங்கதிதான் காது, மூக்கு, கண், கை, கால் வைத்து வர்ணிக்கப்பட்டிருந்தது. பார்க்கப் போனுல் கேவலம் குடும்ப விஷயம்—எளிய நடை. ஆனுலும் ஒரு சித்திரம்போல் காணப் பட்டது. அதைப் படிக்கும்போதே கண்களில் நீர் நிரம்பியது. இந்த நிர்ஜரிணி என் மனைவிதான்; அதில் ஸந்தேகமே இல்லை. அப்போது, படுக்கை அறையில் புஸ்தகம் கொளுத்திய காட்சியும் அவள் விசனம் தோய்ந்த வாடிய முகமும் என் நினைவுக்கு வந்தன. நெடுநேரம் மௌனமாக உட்கார்ந்துகொண்டு அதே சிந்தனையில் மூழ்கியிருந்தேன்.

இரவு படுக்கப் போகும்போது என் மனைவியைப் பார்த்து, "நிர்ஜா, நீ கதைகள் எழுதி வைத்திருக்கிறாயே, அந்த நோட்டுப் புத்தகம் எங்கே?" என்றேன்.

நிர்ஜரிணி : ஏன்? அது உங்களுக்கு எதற்கு?

நான் : அச்சிடப் போகிறேன்.

நிர் : ஏளனம் பண்ணினது போதுமே!

நான் : நான் விளையாடவில்லை. வாஸ்தவமாகத்தான் அச்சிடக் கொடுக்கப் போகிறேன்.

நிர் : அது எங்கே போயிற்றோ எனக்குத் தெரியாது.

நானும் விடாப்பிடியாக, "இல்லை, நிர்ஜர், அதெல்லாம் முடியாது. எங்கே இருக்கிறது? சொல்லு" என்றேன்.

நிர் : சத்தியமாகச் சொல்லுகிறேன்; அது இப்போது என் கிட்டே இல்லை.

நான்: ஏன்? பின்னே அது என்ன ஆயிற்று?

நிர்: அதைக் கொளுத்திவிட்டேன்.

திடுக்கிட்டு எழுந்தேன். "ஆ! எப்போது? எப்போது கொளுத்தினாய்?" என்றேன்.

நிர் : இன்றுதான். எனக்குத் தெரியாதா, நான் எழுதின லக்ஷணம்! அது குப்பைக் கூடைக்கோ சாம்பலாவதற்கோதான் லாயக்கு! பொம்மனாட்டி எழுதிவிட்டாளே என்று என்னவோ எல்லாரும் புகழ்கிறார்கள்.

இதற்குப்பின் எவ்வளவு முயன்றும் அவளை ஓர் அக்ஷரம் எழுதும்படிச் செய்யக்கூட என்னால் முடியவில்லை.

இங்ஙனம்,
ஹரிச்சந்திர ஹால்தார்

* * * *

மேலே எழுதியிருக்கிறது முக்காலே மூணுவீசமும் கட்டுக்கதை. என் கணவருக்கு வங்கமொழியில் எழுதும் ஆற்றல் உண்டா இல்லையா என்பது அவர் எழுதியுள்ள நவீனத்தைப் படித்தால் தெரியும். சீச்சீ! பெண்டாட்டியை வைத்தே இந்த மாதிரி யாராவது கதை கட்டுவார்களா?

இப்படிக்கு,
ஸ்ரீ நிர்ஜரிணி தேவி

* * * *

பெண்களின் திறமையைப் பற்றி நம் நாட்டிலும் பிற நாட்டிலும் உள்ள சாஸ்திரங்களிலும் பிற நூல்

களிலும் அநேக விஷயங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. என்னுடைய எழுத்துப்பிழை முதலியவற்றையார் திருத்தி இருக்கிருர் என்ற விஷயத்தை நான் இங்கே சொல்லப் போவதில்லே. என் மனைவி இதில் எத்தனை வரிகள் எழுதி யிருக்கிருள் என்பதை நான் சொல்லாவிட்டாலும் அறிஞர் களாகிய வாசகர்கள் தாங்களே ஊகித்துக் கொள்வார்கள். அவள் போட்டுள்ள எழுத்துப் பிழைகளைப் பார்த்ததுமே அவை வேண்டுமென்றே போடப்பட்டன என்பதை அறிந்து கொள்வார்கள்; தன் கணவன் வங்கபாஷையில் எவ்வளவு நிபுணன், அவன் கதை எவ்வளவு மோசமாக இருக்கிறது என்பதைக் காட்டவேண்டியே இந்த மாதிரிச் சூழ்ச்சி செய்திருக்கிருள் அவள். இதனுல்தான் காளி தாஸன் 'ஸ்திரீணும் அசிக்ஷித படுத்வம்' (கல்லாமலே பெண் கள் அறிவிற் சிறந்து விளங்குகிருர்கள்) என்று எழுதி யிருக்கிருன். இந்தப் பெண்பாலாரின் இயல்பை அவன் நன்ருக அறிந்திருக்கிருன். இந்த விஷயத்தில் எனக்கும் இப்போதுதான் கண் திறந்தது; வரவர நானும் புரிந்து கொள்ள ஆரம்பித்திருக்கிறேன். நாளைக்கே நானும் காளிதாஸனுகி விடுகிறேன். அவனுக்கும் எனக்கும் ஒரு விதத்தில் ஒற்றுமை உண்டு. விவாகமான புதிதில் அந்த மகா கவி பண்டிதையான தன் ஸஹதர்மிணிக்கு ஒரு கவிதை எழுதிப் படித்துக்காட்டினுனும். அதில் 'உஷ்ட்ர' என்பதில் ரகரத்தை உச்சரிக்காமல் விட்டுவிட்டானும். இக்காலத்திலும் எழுத்தாளர்கள் பலர் உச்சரிப்பு ஸம்பந்த மான இம்மாதிரிப் பிழைகளைச் செய்கிருர்கள். ஆகை யால் எல்லாவற்றையும் ஆர அமர யோசித்துப் பார்க்கும் போது காளிதாஸன் நாளடைவில் எப்படி ஆனுனே அப்படியே நானும் ஆகலாமென்ற ஒரு நம்பிக்கை ஏற் படுகிறது.

இங்ஙனம்,
ஸ்ரீ ஹ :—

* * * *

இந்தக் கதை பிரசுரமானுல் நான் என் பிறந்தகத் துக்குப் போய்விடப் போகிறேன்.

ஸ்ரீமதி நி :—

* * * *

நானும் அப்போதே என் மாமனுர் வீட்டுக்குப் புறப்பட்டுவிடப் போகிறேன்.

ஸ்ரீ ஹ :—

# மீட்சி

கௌரி பரம்பரைப் பணக்காரக் குடும்பத்தைச் சேர்ந்தவள்; சீராட்டிப் பாராட்டிச் செல்வமாக வளர்க்கப் பெற்ற அழகான பெண். அவள் கணவன் பரேச் தரித்திர தசையிலிருந்து சிறிது சிறிதாகத் தன் வயிற்றைக் கழுவிக் கொள்ளப் போதுமான நிலைக்கு வந்திருந்தான். அவன் ஏழையாக இருந்தவரையில் பெண் கஷ்டப் படுவாளே என்று பயந்து மாமனாரும் மாமியாரும் அவளை அவன் வீட்டுக்கு அனுப்பவில்லை. சற்று வயசு அதிகம் ஆன பின்பே அவள் கணவன் வீட்டுக்கு வந்து சேர்ந்தாள்.

இதனாலோ என்னவோ ரூபவதியான இள மனைவி தனக்கே உரியவள் என்று எண்ண அவன் மனம் இடங் கொடுக்கவில்லை. அதோடு, சந்தேகம் என்பது அவன் பிறவிக் குணத்தில் அல்லது குற்றத்தில் ஒன்று.

பரேச் மேற்குப் பிராந்தியத்திலுள்ள ஒரு சிறு பட்ட ணத்தில் வக்கீலாக இருந்தான். வீட்டில் உற்றார் உறவினர் அப்படி எவரும் இல்லை. தன்னந்தனியாக இருக்கும் தன் மனைவி என்ன செய்கிறாளோ என்ற கவலைதான் எப்போதும் அவனுக்கு. நடுநடுவே ஒரோரு தினம் திடீ ரென்று அகாலத்தில் அவன் கச்சேரியிலிருந்து வீட்டுக்கு வந்துவிடுவான். முதலில் அவன் இந்த மாதிரித் திடும் பிரவேசமாக வருவதன் அர்த்தம் கௌரிக்கு விளங்கவில்லை.

அடிக்கடி ஒரு காரணமும் இல்லாமல் பரேச் ஒவ் வொரு வேலைக்காரனைக் 'கல்தா' கொடுத்து வந்தான். எந்த ஆள்காரனிடத்திலும் அவனுக்கு அதிக நாள் பிடித்தம் இராது. எல்லோரும் போய் விட்டால் தனக்கு அசௌ கரியமா யிருக்குமே என்று கௌரி எந்த ஆளையாவது நிரந்தரமாக அமர்த்திக்கொள்ள முயன்றால், பரேச் அக்கணமே அவனுக்குச் சீட்டுக் கொடுத்துவிடுவான். உத்தமி கௌரி இதனால் மிகுந்த மனவருத்தம் அடைவாள்; இதைக் கண்டு அவள் கணவன் பின்னும் ஆத்திரமடைந்து ஒவ்வொரு சமயம் விசித்திரம் விசித்திரமாக நடந்து கொள்வான்.

கடைசியாக, சந்தேகத்தைத் தனக்குள்ளேயே அடக்கிக்கொண் டிருக்க முடியாமல் வேலைக்காரியை மறைவில் அழைத்துக் கௌரியின் நடத்தையைப்பற்றிப் புலன் விசாரிக்க ஆரம்பித்தான். கௌரியின் காதில் இது விழுந்தது. மகா மானியும், அடக்கம் ஒடுக்கம் உடைய வளுமான கௌரி இந்த அவமானம் தாளாமல் புண்பட்ட பெண் சிங்கமென உள்ளூறக் குமுறிக்கொண் டிருந்தாள். இப்படி இந்தப் பெரிய சந்தேகம் தம்பதிகள் இருவரை யும் ஒன்று சேரவொட்டாமல் துண்டித்து எறிவதுபோல் இருந்து வந்தது.

அவளுக்கு யாவும் வெட்டவெளிச்சமாகி விட்டதால் பரேச் அதுமுதல் வெளிப்படையாகவே தினந்தோறும் அவள் மேல் தனக்குள்ள சந்தேகத்தைத் தெரிவித்து, அடிக்கடி அவளோடு சண்டை தொடுத்தான். கௌரி பதில் பேசுவதில்லை; அவனை லக்ஷ்யம் செய்வதும் இல்லை. சில வேளை கூரிய அம்பால் துளைப்பதுபோல் அவனை ஏற இறங்கப் பார்ப்பாள். இவற்றால் அவன் சந்தேகம் வலுக்கத்தான் வலுத்தது.

இவ்வாறு கணவன் செய்யும் கொடுமை தாளாமல் புத்திர பாக்கியம் இல்லாத அந்த யுவதி பாரமார்த்திக விஷ யங்களில் மனம் செலுத்தினள். ஹரிகதா சன்மார்க்க சபையின் புதிய பிரசாரகராக விளங்கிய பிரம்மசாரி பரமானந்த ஸ்வாமிகளை அழைத்து அவரிடம் மந்திரோப தேசம் பெற்றுக் கொண்டாள். அவர் பாகவத வியாக்கி யானம் பண்ணுவதைக் கேட்டுவரலானள். அந்தப் பெண் மணியின் அன்பு முழுவதும் திரண்டு பக்தி வெள்ளமாகப் பொங்கி எழுந்தது; குருவின் பாதாரவிந்தங்களில் தன் பக்தி முழுவதையும் சமர்ப்பணம் செய்தாள்.

பரமானந்தர் மகாசாது என்பதைப் பற்றி எங்கும், எவருக்கும், எள்ளளவும் சந்தேகம் இல்லை. எல்லோரும் அவரைத் தெய்வமாகக் கொண்டாடினர்கள். பரேச் மட்டிலும் அவரைப்பற்றி வாய் திறந்து ஒரு வார்த்தையும் சொல்லாவிட்டாலும் உள்ளுக்குள்ளே அவனை ஒன்று அரித்து வந்தது.

ஒரு நாள் அநாவசியமாக அவன் வாய் விஷத்தைக் கக்கிவிட்டது. மனைவியிடம் பரமானந்தரைக் குறித்து, “லோலாயி, கபட சந்நியாசி” என்று திட்டிவிட்டு, “நீ பூஜை பண்ணுகிற சாலக்ராமத்தைத் தொட்டு அதன்

பேரில் ஆணையாகச் சொல்லடி, அந்தப் போலிச் சந்நியாசி மேல் உனக்கு ஆசை இல்லை என்று!'' என்றான்.

அடியுண்ட நாகம்போல் கௌரி சீறி எழுந்தாள். ஏளனமாக ஒரு பார்வை பார்த்தாள், அவனை எரித்துவிடுவதுபோல். பிறகு தொண்டை அடைக்க, "ஆமாம்; ஆசைதான். உன்னால் ஆனதைப் பண்ணிக் கொள்'' என்றாள்.

பரேசும் அந்த க்ஷணமே பூட்டும் சாவியும் எடுத்து வந்து, அவளை அடைத்து வீட்டைச் சாத்திப் பூட்டிக் கொண்டு கச்சேரிக்குப் போய்விட்டான்.

ரோஷம் தாளாமல் கௌரி எவ்விதமோ கதவைத் திறந்துகொண்டு உடனே வீட்டை விட்டு வெளியே சென்றாள்.

பரமானந்தர் தனிமையான அறையொன்றில் மனித சந்தடி இல்லாத நடுப்பகலில் சாஸ்திர அத்தியயனம் செய்துகொண் டிருந்தார். மேகமில்லா வானினின்று மின்னற்கொடி வீழ்வது போல் திடீரெனக் கௌரி அவர் காலடியில் வந்து வீழ்ந்தாள்.

குரு: என்ன இது!

சிஷ்யை: ஸ்வாமி! இந்த ஸம்ஸாரத்தில் நான் அவமானப்பட்டது போதும்! என்னை இதிலிருந்து மீட்டு அழைத்துக் கொள்ளவேண்டும். உங்கள் ஸேவையிலேயே என் வாழ்நாள் முழுவதையும் அர்ப்பணம் பண்ணி விடுகிறேன்.

பரமானந்தர் அவளைக் கண்டித்துப் புத்திசொல்லி வீட்டுக்கு அனுப்பினார். ஆனால், பாவம், அன்று தடைப் பட்ட சாஸ்திர அத்தியயனத்தை மறுபடியும் தொடர்ந்து நடத்த அவரால் முடிந்ததா?

பரேச் வீட்டுக்கு வந்ததும் கதவு திறந்திருப்பதைக் கண்டான். மனைவியைப் பார்த்து, "இங்கே யார் வந்திருந் தார்கள்?'' என்று கேட்டான்.

மனைவி: யாரும் வரவில்லை; நானே ஸ்வாமிகள் இருப்பிடத்துக்குப் போயிருந்தேன்.

பரேச் கணநேரம் முகம் வெளுத்து நின்றான். மறு கணம் முகத்தில் ரத்தம் தெறிக்க, "ஏன் போயிருந்தாய்?'' என்றான்.

கௌரி: என் இஷ்டம்.

அன்று முதல் மனைவியை உள்ளே பூட்டிவிட்டு வெளியே காவல்காக்க ஆரம்பித்தான்; பலவிதமாக அவளைத் துன்புறுத்தினன். ஊர்முழுவதும் இதைப் பற்றிய பேச்சே !

இந்த அபாண்டமான, அவமானப்படக்கூடிய விஷயத்தால் பரமானந்தருடைய பகவத்தியானமே கலைந்து விட்டது. 'இந்த ஊரை விட்டுப் போய்விடுவதே மேல்' என்று உறுதி கொண்டார். ஆனாலும் சங்கடத்தில் அகப்பட்டுத் தவிக்கும் கௌரியை விட்டு நீங்க அவரால் முடியவில்லை. இந்தச் சில நாட்களாக இரவு பகல் சந்நியாசி படும் துன்பத்தை அந்தப் பகவானே அறிவான் !

கடைசியாக ஒருநாள், அடைபட்டுக் கிடக்கும்போதே கௌரிக்கு ஒரு கடிதம் கிடைத்தது:

அதில், "குழந்தாய் ! தீர யோசனை செய்து பார்த்தேன். இதற்குமுன் பல உத்தமஸ்திரீகள் கிருஷ்ண பக்தியினால் ஸம்ஸாரத்தைத் துறந்திருக்கிறார்கள். குடும்பத்தில் ஏற்பட்ட அவமானத்தால் பகவானுடைய சரண கமலங்களைத் தியானிப்பதில் தடை ஏற்பட்டு மனம் சஞ்சலப்படும் பக்ஷத்தில் எனக்குத் தெரிவி. பகவானுடைய அருளால் பக்தையாகிய உன்னை உத்தாரம் செய்து மகாப் பிரபுவின் பாதார விந்தங்களில் சேர்ப்பிக்க முயல்வேன். பங்குனி 26-ஆம்தேதி, புதன் கிழமையன்று மத்தியான்னம் 3-மணிக்கு நீ இஷ்டப்பட்டால் உங்கள் வீட்டுக் குளத்தங் கரையண்டை என்னைக் காணலாம்" என்று எழுதியிருந்தது.

கௌரி கடிதத்தைத் தன் கொண்டையில் செருகிக் கொண்டாள். பங்குனி 26-ஆம் தேதி மத்தியான்னம் ஸ்நானம் செய்யுமுன் தலைமயிரை அவிழ்க்கும்போது பார்த்தால், கடிதத்தைக் காணவில்லை! அது எப்போதோ படுக்கையில் நழுவி விழுந்திருக்க வேண்டும், தன் கணவன் கையில் அகப்பட்டிருக்கவேண்டும் என்று சட்டென அவளுக்குச் சந்தேகம் மூண்டது. கணவன் அதைப் படித்துவிட்டுப் பொறாமையால் குமுறுவான் என்று எண்ணிக் கௌரி மனசுக்குள்ளேயே ஒருவித ஆனந்தம் அநுபவித்தாள். ஆனாலும் அந்தப் புனிதமான கடிதம் இந்த மகா மூர்க்கன் கைபட்டு அசுத்தமாகிவிடும் என்ற நினைப்பு வந்ததோ இல்லையோ அவளால் சகிக்க முடியவில்லை. வேகமாய் அவன் அறைக்கு ஓடினாள்.

கணவன் தரையில் விழுந்து கிடந்தான். அவனுக்கு மூச்சு வாங்கிக்கொண் டிருந்தது. வாயிலிருந்து நுரை தள்ளியது. விழிகள் எங்கோ செருகிக்கொண்டு போய் விட்டன. வலது கைப்பிடியிலிருந்த கடிதத்தைப் பிய்த்து இழுத்துக்கொண்டு அவசரம் அவசரமாக டாக்டரை அழைத்தாள்.

டாக்டர் வந்து, "அபோப்ளெக்ஸி" என்ருர். அதற்குள் உயிரும் போய்விட்டது.

அன்று வெளியூரில் முக்கியமான வழக்கு ஒன்று இருந்தது. இதை எப்படியோ அறிந்து சந்நியாசி கெளரி யைக் காணத் தயாராக இருந்தார். ஐயோ! எப்படி இருந்தவர் எப்படி ஆனுர்!

விதவையான கெளரி ஜன்னல் வழியாக ஸ்வாமி களைப் பார்த்தாள். திருடனைப்போல் திரு திருவென்று விழித்துக்கொண்டு அவர் குளத்தங்கரையில் நின்றிருந் தார். அவளுக்கு இடி விழுந்ததுபோல் ஆகி விட்டது. கண்ணைத் தாழ்த்திக் கொண்டாள். இருளிடைத் தோன்றும் மின்னெளியில் சுற்றி இருப்பவை புலனுவது போல் அவள் மனத்திலும், 'நம் குரு எப்பேர்ப்பட்ட உன்னத நிலையிலிருந்து வீழ்ந்து விட்டார்!' என்று அப்போது ஓர் எண்ணம் உதயமாகி எல்லாவற்றையும் தெளிவாக்கி விட்டது.

குரு, "கெளரி" என்று கூப்பிட்டார்.

கெளரி, "இதோ வருகிறேன், ஸ்வாமி!" என்ருள்.

பரேச் இறந்த செய்தியைக் கேட்டு அவன் நண்பர்கள் மேலே நடக்கவேண்டிய கிரியைகளைச் செய்யவந்தபோது கணவனின் அருகில் கெளரியும் மரித்திருப்பதைக் கண்டார்கள்.

அவள் விஷம் தின்று இறந்து விட்டாள். இந்தக் காலத்தில் இம் மாதிரி ஸககமனம் செய்வது ஆச்சரியம் அல்லவா? இப்படிப்பட்ட ஸதியின் மகிமையைக் கேட்டு எல்லோரும் வியந்தார்கள்.

# மனைவியின் கடிதம்

சரண கமலங்களை ஸ்மரித்து அடியாள் எழுதிக் கொள்வது:—

இன்று பதினைந்து வருஷங்கள் ஆகின்றன, நமக்கு விவாகமாகி. இதுவரையில் உங்களுக்கு நான் கடிதம் எழுதியதில்லை. நீண்டநாள் அருகிலேயே இருந்தேன். எவ்வளவோ விஷயங்களைப்பற்றி உங்களிடம் பேசியும் இருக்கிறேன்; நீங்களும் என்னுடன் கலந்து பேசியிருக் கிறீர்கள்; ஒருவருக்கொருவர் கடிதம் எழுதிக்கொள்வதற் கான சந்தர்ப்பம் மட்டும் நமக்கு ஏற்படவில்லை.

இங்கே நான் ஸ்ரீ க்ஷேத்திரத்தை* வந்தடைந்தேன். நீங்களோ சொந்த அலுவலில் ஆழ்ந்திருப்பீர்கள். நத்தை எங்காவது அதன் மேலோட்டிலிருந்து பிரிந்து வாழுமா? அதேபோல் கல்கத்தாவை விட்டு அரைக்கணம் நீங்கினால் உங்களுக்கு உயிர் போய்விடுமே! உங்கள் வாழ்க்கை அதோடு ஒட்டிக்கொண்டு விட்டது.

ஆபீஸில் லீவ் என்றைக்காவது வாங்கிக்கொண் டிருக்கிறீர்களா? பகவானுக்கு அந்தமாதிரி நேரவேண்டு மென்ற அபிப்பிராயமே இல்லைபோலும்! நான் இத்தனை நாள் அவரிடம் யாசித்த பிறகு அவர் என் விடுதலையின் விண்ணப்பத்தை ஏற்றுக்கொண்டு விட்டார்.

நான் உங்கள் குடும்பத்தில் வாழ்க்கைப்பட வந்த நடு நாட்டுப்பெண். இந்தப் பதினைந்து வருஷகாலம் சென்ற பின்பே, இந்தக் கடற்கரையில் நிற்கும் பொழுது, ஒரு பேருண்மையைக் காண்கிறேன்; எனக்கும் இந்த உலகத் தைப் படைத்த கடவுளுக்கும் உள்ள ஸம்பந்தம் முற்றும் வேறானது. அதனாலேயே இன்று இந்தக் கடிதத்தை எழுதத் துணிந்தேன். இது உங்கள் வீட்டு நடு நாட்டுப் பெண்ணின் கடிதமன்று.

உங்களுடன் நான் வாழ்க்கை நடத்த நேரிடுமென்று என் தலையில் எழுதிவைத்தவனைத் தவிர வேறு யாருக்கும்

---

*ஜகந்நாத க்ஷேத்திரம்

தெரியாத காலத்தில்-அதாவது சிறு வயசில்-நானும், என் தம்பியும் ஒரே சமயத்தில் ஸந்நிபாத ஜுரம் கண்டு படுக்கையாகக் கிடந்தோம். என் தம்பி இறந்துபோய் விட்டான்; நான் - பின்னர் இதையெல்லாம் அநுபவிக்க வேண்டுமே! - பிழைத்து எழுந்தேன். எங்கள் அண்டை அயலாரெல்லாம், "மிருணாளினி பொண்ணோ இல்லையோ, அதுதான் பிழச்சா! பிள்ளையாயிருந்தால் விடுவானா யமன்-" என்று சொல்லிக் கொண்டார்கள். களவாடுவதில் யமன் கை தேர்ந்தவன்; உயர்ந்த பொருளின் மீதே அவன் நாட்டமெல்லாம்.

எனக்குச் சாவே வராது. இதைத் தெளிவாக உங்களுக்கு அறிவிக்க வேண்டியே இந்தக் கடிதத்தை எழுத முற்பட்டேன்:

அன்று உங்கள் மாமாவும், நண்பர் நீரதரும் பெண்ணைப் பார்க்க எங்கள் வீட்டிற்கு வந்திருந்த சமயம், எனக்கு வயசு பன்னிரண்டு. மிகவும் அசௌகரியமுள்ள உள் நாட்டிலே ஒரு குக் கிராமத்தில் எங்கள் வீடு. அந்த ஊரில் பகல் வேளையிலேயே நரி ஊளையிடும். ரெயிலடியி லிருந்து ஏழு காததூரம் கட்டை வண்டியில் வந்து, அப்பால் மூன்று மைல் புழுதி நிறைந்த வழியில் பல்லக்கில் ஏறி எங்கள் ஊருக்கு வரவேண்டும். அன்று உங்களைச் சேர்ந்தவர்களுக்கு எவ்வளவோ கஷ்டம் பாவம்! போதாக் குறைக்கு நாட்டுப்புற ரீதியில் அன்று வந்தவர்களுக்கு விருந்து நடந்தது. உங்கள் மாமா சாப்பிட்டுவிட்டு, அந்தச் சமையலின் ருசியைப் புகழ்வதுபோல் இகழ்ந்ததை இன்னும் அவர் மறக்கவில்லை என்று எண்ணுகிறேன்.

உங்கள் வீட்டுப் பெரிய நாட்டுப் பெண்ணுக்கு அழகு இல்லாக் குறையை நடு நாட்டுப் பெண்ணின் மூலமாக அகற்றவேண்டுமென்று பெருமுயற்சி எடுத்துக் கொண் டாள், உங்கள் தாய். இல்லாவிட்டால் இவ்வளவு கஷ்டங் களையும் பொறுத்துக்கொண்டு, அந்தப் பட்டிக் காட்டில் என்னைத் தேடிப்பிடிக்க வருவீர்களா? வங்காளத்தில், மகோதரம், மலேரியா, பித்தபாண்டு, விவாகமாகாத பெண்கள், இவைகளுக்காகத் தேடி அலையவேண்டிய அவசியமே இல்லை. தாமாகவே அவை எதிர்ப்படும்; பிடித்துக்கொண்டால் விடவே விடா!

அப்பாவின் இருதயம் திக் திக்கென்று அடித்துக் கொண்டது; அம்மா, துர்க்கையின் நாமங்களை உச்சரித்துக்

கொண்டே இருந்தாள். நகரத்திலிருந்து வந்திருக்கும் தெய்வத்தைப் பட்டிக்காட்டுப் பூசாரி எந்த மாதிரித் திருப்தி செய்வது? எங்களைச் சேர்ந்தவர்களுக்கு இருந்த நம்பிக்கையெல்லாம், நான் நல்ல அழகியென்ற ஒரு விஷயமே. இந்த அழகை மட்டும் படைத்திருக்காத பக்ஷத்தில், பெண்ணைப் பார்க்க வந்தவர்கள் இடும் மதிப்பே முடிவானதாகிவிடும். ஆகவே, அழகும் குணமும் ஆயிரம் இருந்தாலும், 'பிள்ளை வீட்டார் என்ன நினைப்பார்களோ' என்ற பெண்டுகளுக்கு இயல்பான கவலை மட்டும் எளிதில் போகாது.

எங்கள் வீட்டாருக்கு இருந்த ஒரு திகில் ஏன், ஊர் முழுவதுமே திகில் கொண்டிருந்தது - என் உள்ளத்தையும் பெரும் பாறைபோல் அழுத்தியது. அன்று ஆகாயத்திலிருந்த வெளிச்சமனைத்தும், உலகில் திகழும் சக்திகள் யாவும் பன்னிரண்டு வயசுடைய ஒரு நாட்டுப்புறப் பாவையைப் பரிக்ஷகர்கள் இருவர் கண்ணெதிரே ஈவு இரக்கமின்றி கொண்டு நிறுத்தியதுபோல் இருந்தது. ஓடி ஒளிந்து கொள்வதற்கு எனக்கு இடமே அகப்படவில்லை.

வீடும் வெளியும் புலம்ப மேளம் கொட்டியது. விவாகம் முடிந்ததும் புக்ககம் வந்து சேர்ந்தேன். எனக்கு எங்கேயாவது சொட்டையா சொள்ளையாவென்று ஆய்ந்து பெரியவர்களெல்லாரும் முடிவில் நான் அழகியென்றே தேர்ந்தனர். அதைக் கேட்டதுமே என் ஓரகத்தியின் முகம் திமுதிமுவென்ருகிவிட்டது. எதற்கு உபயோகம் இந்த அழகு என்பதைத்தான் யோசிக்கிறேன்! அழகென்ற பொருளை, பழையகாலத்து அறிஞர் யாராவது கங்கை மண்ணைக் கொண்டு உருவாக்கி யிருந்தால், அதற்கு எவ்வளவோ ஆதரவு ஏற்பட்டிருக்கும்; ஆனல், அழகென்பதைப் பிரம்மா, தாம் பார்த்து இன்புறுவதற்காகவே படைத்தார் அல்லவா? நீங்கள் பின்பற்றும் ஓர் உலக தர்மத்தில் அதற்கு ஒரு மதிப்பாவது, விலையாவது இல்லை.

நான் ரூபவதி யென்பதை நீங்கள் அறவே மறந்து போக நெடுநாட்கள் ஆகவில்லை; ஆனல் எனக்கு இருந்த புத்திமட்டும், அடிக்கடி என்னைப்பற்றி உங்களுக்கெல்லாம் கவனப்படுத்திக்கொண் டிருந்தது. என்னுடன் பிறந்த அந்தப் புத்தி உங்கள் குடும்பத் தொல்லையில் இத்தனை நாட்கள் உழன்றும், இன்றைவரையில் குலையாமல் நிற்கிறது. என் தாய் எனக்குள்ள இந்தப் புத்தியின் பொருட்டே கவலை கொள்வாள். 'மாமியார் வீட்டாருக்கும் இவளுக்கும் ஒத்துப் போகுமா?' என்பதே அவள் அஞ்சிய

தெல்லாம். ஓர் இடத்தில் அடங்கி ஒடுங்கி நடந்துகொள்ள வேண்டியவள் தன் புத்தி ஏவியபடியே சென்றால், அடிக்கு அடி தடுக்கி விழ வேண்டியதுதான். ஆனால் என்ன செய்வேன் நான்? உங்கள் வீட்டு நாட்டுப் பெண்ணாய் வருபவளுக்கு அறிவு, இருக்கவேண்டிய அளவுக்கு அதிகமாகவே ஈசுவரன் கவனப் பிசகாகக் கொடுத்துவிட்டான். அதை இப்போது திருப்புவது எவ்வாறு? நீங்களெல்லாரும் என்னை அடங்காப் பிடாரியென்று நித்தியம் இரண்டுதரமாவது ஸ்மரிக்காமல் இருக்கமாட்டீர்கள். கையாலாகாதவர்களுக்கே பிறர் மனம் வாடும்படிக் கடுத்துப் பேசுவதில் ஒருவிதத் தென்பு. அதையெல்லாம் மன்னித்துவிட்டேன்.

வீட்டுக்காரியங்களின் தொல்லைகளை மீறித் தனியாக என்னிடம் ஒன்று வளர்ந்து வந்தது. அதை நீங்கள் ஒருவருமே அறியவில்லை. நான் மறைவில் கவிதை இயற்றி வந்தேன். நான் எழுதியது குப்பையோ கூளமோ, உங்கள் கட்டுக்காய்தா அந்த இடத்தில் பலிக்கவில்லை. என் முழு உரிமையையும் அங்கேதான் பெற்றேன். அவ்விடத்தில் அனைத்தும் நானே. நடு நாட்டுப்பெண்ணிடம் இருக்கவேண்டிய அளவுக்குமேலாக என்னிடம் இருந்த சில அதிசய குணம் உங்களுக்குப் பிடிக்கவும் பிடிக்காது. அவ்வாறு இருப்பதாக நினைக்கவும் மாட்டீர்கள். பதினைந்து வருஷங்கள் பழகியும், நான் கவி என்பதை உங்களிடம் காட்டிக் கொள்ளவில்லை, பாருங்கள்!

உங்கள் வீட்டைப்பற்றி நினைக்கும்போது, எல்லா இடத்தையும்விட எனக்குப் பளிச்சென மனத்துள் தோன்றுவது அந்த மாட்டுத் தொழுவமே. பின் கட்டிற்குப் போகும் வழியிலுள்ள அறையொன்றில் பசு மாடுகளைக் கட்டிவைப்பார்கள். எதிரே சிறு முற்றத்தைத் தவிர்த்து அவை காலாற உலவ வேறு இடமே இல்லை. அந்த முற்றத்தின் ஒரு மூலையில் மாடுகளுக்காகக் கழுநீர் கொட்டிவைக்கும் மரத்தொட்டி உண்டு. காலையில் ஆள்காரன் ஏதாவது வேலையைக் கவனிக்கப் போய்விடுவான். வயிறு சுண்டி வாடும் பசுக்கள், காலித்தொட்டியின் விளிம்பை 'வர் வர்' என்று நக்கிச் சுரண்டும். அப்போது என் மனசு துடிக்கும். நான் நாட்டுப் புறமல்லவா? உங்கள் வீட்டிற்கு வந்த புதிதில் அவ்விரண்டு பசுக்களும் அவற்றின் கன்றுகளுமே எனக்கு மிகவும் அறிமுகமான நண்பர்களாக இருந்தன. புது நாட்டுப் பெண்ணாக

உங்கள் வீட்டில் இருந்தவரை நான் என் பசியைக்கூடக் கவனியாமல் யாருக்கும் தெரியாதபடி மறைவாகப் பசுக்களுக்கு வயிருறத் தீனி போட்டுத் தண்ணீர் காட்டுவேன். வீட்டாருக்கு நான் பழைய மனுஷியாக மாறியபின், மாடு கன்றுகளிடத்தில் எனக்குள்ள பற்றைக் கண்டு கேலி செய்வதே காரியமாகக் கொண்ட உங்களைச் சேர்ந்தவர்கள் என் குலம் கோத்திரத்தைப் பற்றிக்கூடச் சந்தேகப் பட்டார்கள். எனக்கு ஒரு பெண் குழந்தை பிறந்து உடனேயே இறந்துவிட்டது. என்னையும் யமன் அந்தச் சிசுவுடன் கொண்டு போவதாக இருந்தான். அதுமட்டும் உயிருடன் இருந்திருந்தால் என் வாழ்க்கையில் நான் எதைச் சிறந்ததெனப் போற்றி வந்தேனோ, எதை உண்மையெனக் கருதினேனோ அதையெல்லாம் அக் குழந்தை பின்பற்றி இருக்கும். அந்தமாதிரி நேரிடுமானல் நான் அற்பமான ஒரு நாட்டுப் பெண்ணிலிருந்து ஓர் அன்னையின் கௌரவத்தை அல்லவோ பெற்றிருப்பேன்! தன் சிறு இல்லறத்தின் நடுவே இருந்தாலும், தாய் உலகமென்னும் பேரில்லறத்திற்கும் ஒப்பற்ற அன்னையாவள். ஒரு குழந்தைக்குத் தாயாகும் துன்பத்தை அடைந்தேனே ஒழிய அன்னையாகும் விடுதலையையும் பெற்றிலேனே!

ஆங்கில டாக்டர் ஒருவன் வந்து, உங்கள் வீட்டில் பெண்கள் இருக்கும் விடுதியின் அழகைப் பார்த்துத் திடுக்கிட்டுப் போனான். பிரசவ அறை இருக்கும் ஆபாசத்தை இகழ்ந்து கூறிச் சென்றான். பார்வைக்கு, வீட்டிற்கு வெளிப்புறம் தோட்டமென்ன, உள்ளே பெரிய அறைகளில் நாகரிகமான சாமான்களென்ன, அங்கே செய்திருக்கும் ஆடம்பரங்கள் என்ன! ஆனல் பின்கட்டோ, பகட்டான ஜரிகைச் சேலையின் மறுபக்கம்போல் இருந்தது. அந்த இடத்தைச் சீர்படுத்த யாருக்கு அக்கறை? பாழடைந்து, அலங்காரமற்று இருந்தது. விளக்கொன்று மினுக் மினுக்கென்று எரியும். காற்று, தாராளமாக உள்ளே வீசாமல், திருடனைப்போல் பதுங்கி எப்போதாவது நுழையும். எந்த மூலையைப் பார்த்தாலும், எத்தனை நாளைக் குப்பையோ மலையளவு சேர்ந்திருக்கும். சுவரிலும் தரையிலும் அழுக்குக் கறை ஏறியிருக்கும். அந்த வெள்ளைக்காரன், இவைதாம் எங்களையெல்லாம் இரவும் பகலும் துன்புறுத்துவன என்று தவருக நினைத்துக்கொண்டான். ஆனல் நேர்மாருனதே அதற்குக் காரணம்! ஆதரவு இன்மையே நீறெனப் பூத்திருந்தது. அதனுள்ளே கவிந்து கொண்டிருந்தது நெருப்பு. வெளியி

லிருந்து பார்த்தால் அதன் வெம்மையை எவ்வாறு உணரக் கூடும்? தன் இடத்தில் மதிப்பு ஒருவனுக்குக் குறைவாக ஆக வீட்டில் உள்ளோர் காட்டும் இந்த அலக்ஷியம் அநீத மாகவே படாது. அதனால் வேதனையும் இராது. இந்தப் பெண் பிறவி துயர்கொள்ளவும் நாணுகின்றது. அதனால் தான் சொல்லுகிறேன், பெண்பாலார் துன்பத்தை அநுப விக்க வேண்டுமென்று உங்களுக்கு இருந்தால் அதற்குத் தடை ஒன்றும் அவர்கள் சொல்லவில்லை, ஆனால் கூடிய வரையில் அவர்களுக்கு ஆதரவு காட்டவேண்டாம்; ஏனென்றால் அந்த ஆதரவே துயரின் வேதனையைப் பன்மடங்காக ஆக்கிவிடுகிறது.

எப்படி வேண்டுமானாலும் வைத்துக்கொள்ளுங்கள்; துக்கம் உண்டென்பதை நினைக்க ஒரு நாளாவது என் மனம் தூண்டவில்லை. பிரசவ அறையில் தலைமாட்டண்டை யமன் வந்து நின்றபோதுகூட மனத்தில் பயமே தோன்ற வில்லை. வாழ்வு நிலையுள்ளதா என்ன, மரணத்தைக் கண்டு அஞ்சுவதற்கு? ஆதரவைப் பெற்றவர்களுக்குத்தான் பிரிவு கஷ்டமாக இருக்கும். அன்று யமன் மட்டும் என்னைக் கொண்டுபோவதாக இருந்தால் நான் எளிதாகவே, தரை யில் படர்ந்திருக்கும் புல்லைப்போல், வேருடன் பெயர்ந்து வந்திருப்பேன். வங்காள தேசத்துப் பெண்களே ஒவ்வொரு வார்த்தைக்கும் 'சாவு வராதா?' என்கிறார்கள். 'ஆனால் இந்த மாதிரி மரிப்பதில் என்ன இன்பமோ! உயிர் விடுவதென்றால் வெட்கமா யில்லையா?' என்றால் எங்களால் எளிதில் ஆகக்கூடிய காரியம் அதுதான்!

என் வயிற்றில் பிறந்த சிசு அந்தி வானில் ஒரு தாரகைபோல் தோன்றி மறைந்து விட்டது. அப்புறம் என்றும்போல் வீட்டு வேலையிலும் மாடு கன்றுகள் பேரிலும் கவனம் செலுத்தலானேன். என் வாழ்நாள் இவ்வாறே முடிவடைவதாக இருந்தால் உங்களுக்கு இந்தக் கடிதத்தை வரையவேண்டிய அவசியமே ஏற்பட் டிராது. ஆனால் காற்று கண்ணுக்குத் தெரியாமல் ஒரு சிறு விதையைக் கெட்டித் தரையில் எப்படியோ ஊன்றி விடுகிறது. ஓர் அரசங்கன்று சிறிது நாளைக்கெல்லாம் தலை காட்டுகிறது. முடிவில், செங்கற் சுவரையும் பிளந்து கொண்டு கட்டிடத்தையே அழித்துவிடுகிறது. என் வாழ்விலும் பலமான கட்டுத் திட்டங்களுக்கிடையே சுதந்திரத்தின் பொறியொன்று எங்கிருந்தோ பறந்து வந்தது. அதற்குப் பிறகே ஆரம்பித்தது இந்தச் சிதைவு.

என் ஓரகத்தியின் தங்கை பிந்து; அவளுடைய விதவைத்தாய் இறந்த பின்பு, சிறிய தகப்பனார் வீட்டில் சிலகாலம் இருந்தாள். அங்கே உள்ளவர் செய்யும் துன்பங்களைத் தாளமுடியாமல் தமக்கையிடம் வந்தடையும்போது நீங்களெல்லாரும், 'இதென்ன ஸங்கடம்' என்று எண்ணிக் கொண்டீர்கள். என் பாழும் சுபாவம் வெறுமே இருக்கவில்லை. நீங்களெல்லாரும் வெறுப்படைந்திருப்பதைப் பார்த்து, அந்தத் திக்கற்ற பெண்ணின் பக்கம் என் மனம் கச்சை கட்டிக்கொண்டு எழுந்தது. பிறர் அகத்தில் அவர்களது விருப்பமின்றி அடைக்கலம் புகுவது பெரிய மானக்கேடான காரியம் அல்லவா! வேறு வழியில்லாமல் தமக்கையின் ஆதரவை நம்பி வந்தவளை உதைத்துத் தள்ளிவிடுவதா தர்மம்?

அப்புறம் என் ஓரகத்தியின் நிலையைக் கவனிக்கலானேன். அவளும், தன் தங்கையை வேறு வழியில்லாமல் தன்னிடம் அழைத்துக்கொள்ள வேண்டியதாயிற்று. ஆனால் அவளுடைய கணவனுக்கு அது இஷ்டமில்லையென்பது தெரிந்தவுடன் அவளும் பெருத்த சங்கடத்துள் ஆழ்ந்தாள்; தங்கையை அப்புறப்படுத்தினால் போதும் என்றாகிவிட்டது அவளுக்கு. திக்கற்ற தன் தங்கையை மனமார்ந்த அன்புடன் ஏற்றுக்கொள்ளும் துணிவு அவளிடத்தில் இல்லையே! பாவம், அவள் அகமுடையானுக்கு அடங்கியவள் அல்லவா, பதிவிரதை!

ஓரகத்தி படும் அல்லலைப் பார்த்து என் மனம் கேட்கவில்லை. அவள் வீட்டில் எல்லோரையும் சற்று அதிகமாக உபசரிக்கத் தொடங்கினாள். தன் தங்கைக்குத் தின்பதற்கு மிகுந்த சோற்றையும், உடுப்பதற்கு மட்டரகச் சேலையையும் கொடுத்து, வீட்டில் வேலைக்காரி செய்யும் வேலைகளையெல்லாம் அவளுக்கே இட்டாள். இதையெல்லாம் பார்த்த எனக்குத் துக்கம் மட்டும் அல்ல, அவமானமும் உண்டாயிற்று. இந்த மாதிரிச் செய்தாவது தன் தங்கையின் சுமையை வீட்டார் உணராமல் மழுப்பலாமென்று நினைத்தாள், பாவம்! தாராளமாக அக்கா வேலையிடுவாள். அந்தப் பெண்ணின் பாடு நாய் உழைப்புத்தான். அவள் பதிலுக்குப் பெறுவதென்னவோ மிகவும் அற்பமானது: சோறு, துணி. அன்புக்கு எங்கே போவது?

என் பெரிய ஓரகத்தி நல்ல வம்சத்தில் வந்தவளென்பதைத் தவிர வேறு ஒன்றும் இல்லை. பரம ஏழை; அழகிலும் உயர்வல்ல. என் மாமனாரின் காலைக் கீழைப் பிடித்துக்

கொண்டதன்பேரில், உங்கள் வீட்டில் ஒரு நாட்டுப் பெண்ணாக அவள் வரமுடிந்தது. அவளுக்கும் தெரியும் அது. இந்தப் பெரிய இடத்தில் தனக்கு விவாகமானதே விலக்க முடியாத பெருங்குற்றமென அவளே நெடுநாட்களாக எண்ணிக்கொண் டிருக்கிருள். அதனாலேயே வீட்டு விஷயங்களில் மேலாக ஓங்கி நிற்காமல் ஒடுங்கியிருக்கிருள்.

ஆனால் அவள் இப்படி இந்த ஸாத்விகமாக நடந்து கொள்வது எங்களுக்கெல்லாம் பெருந் துன்பத்தை விளைவித்தது. எந்த விஷயத்திலும் என்னை இழிவுபடுத்திக் கொள்ள எனக்கு விருப்பம் இல்லை. நல்லதென்று தோன்றியதை வேறு யாருக்காவது பயந்து அது நல்லதல்ல என்று சொல்வது என் சுபாவத்திலேயே இல்லை. இதற்கான அத்தாட்சியை எவ்வளவோமுறை நீங்கள் பார்த்திருப்பீர்கள்.

பிந்துவை-அந்த அநாதைப் பெண்ணை - நான் அழைத்துக்கொண்டேன். அப்போது நாத்தனர், "பாவம், இவளுக்கு அந்த ஏழை வீட்டுப்பெண்மேல் ஆசை சொட்டி வழிகிறது!" என்ருள். நான் என்னவோ வீட்டிற்குப் பெரிய ஆபத்தைக் கொண்டுவைத்துவிட்ட மாதிரி அவள் எல்லாரிடமும் இந்த ஸமாசாரத்தை விதைக்க ஆரம்பித்து விட்டாள்.

இப்போது தப்பெல்லாம் என் ஒருத்தி தலையில் வடிந்தது. தன் சொந்தத் தங்கைமேல் பகிரங்கமாக அன்பு செலுத்தாத என் ஓரகத்தி என் மூலமாக அந்த ஏக்கத்தைக் கொண்டவுடன் அவள் மனம் லேசாகியது. என் ஓரகத்தி பிந்துவின் வயசை இரண்டு மூன்று வருஷங்கள் குறைத்தே சொல்லுவாள். ஆனால் அந்தப் பெண்ணுக்கு என்னவோ பதினாலுக்கு மேலே இருக்குமே ஒழியக் குறைவில்லை. அதைச் சில காரணம்பற்றி அவள் ஒளித்துக் கூறுவதிலும் தப்பில்லை. பார்வைக்கு அப்படிக் கோரமில்லை அந்தப் பெண். உங்களுக்கும் தெரியும். ஆனால் அவள் தவறிக் கீழே விழுந்து தலையை உடைத்துக் கொண்டால், "ஐயோ, பட்டான தரை பிளந்து போய் விட்டதே" என்று வீட்டு மனிதர்களுக்கெல்லாம் ஆத்திரம் வரும். ஓர் இடத்தில் கட்டிக் கொடுத்துவிடலாமென்ருல், அப்பாவோ, வேறு யாருமோ இல்லை அவளுக்கு. தானே வலிய வந்து அவளை மணந்துகொள்பவன் யார்?

பிந்து, அதிகக் கூச்சத்துடனேயே என்னிடம் வந்தாள். தன் உடம்பு என்மேல் பட்டால் நான் சகிப்பேனே

மாட்டேனே என்ற தயக்கம் அவளுக்கு. இந்த விசாலமான உலகில் பிறக்கக்கூடத் தனக்கு யாதோர் அதிகாரமும் இல்லையோ வென்று அவள் தன் நிழல் எவர்மீதும் படாமல் கண் மறைவாகவே இருந்து வந்தாள். வீட்டின் ஒரு மூலை குப்பை நாள்கணக்காகக் குவிந்து இருந்தால் அதை யாரும் கவனிப்பதில்லை; ஆனால் அந்தத் திக்கற்றபெண் யாருக்கும் கஷ்டம் கொடுக்காமல் ஒரு பக்கமாக விழுந்து கிடப்பதுதான் எல்லாருடைய கண்களையும் உறுத்தியது. குப்பைக்கு இருந்த இடங்கூட அவளுக்கு இல்லையே! அவள் சிற்றப்பா பிள்ளைகளான ஒன்றுவிட்ட சகோ தரர்கள் மட்டும் உலகத்தில் என்ன சாதித்துவிடப் போகிறார்களோ தெரியவில்லை? அவர்களுக்கு ஒரு கேடும் இல்லை; பச்சென்றுதான் இருக்கிறார்கள்.

பிந்துவை என் நிழலில் அழைத்துக்கொண்டபோது, அவளுடைய மார்பு படபட வென்று அடித்துக் கொண்டது. அவ்வளவு பீதி, பாவம்! அதைப் பார்த்து எனக்குத் துக்கம் பொங்கி எழுந்தது. "அம்மா, நிற்பதற்கு உனக்கு எங்கேயும் துளி நிழல் இராது போனாலும் நான் இருக்கும் வரையில் உனக்கு ஒரு குறைவும் இல்லை. என் இடத்தில் இரு" என்று ஆறுதல் கூறினேன்.

ஆனால் என் வீடு என் ஒருத்திக்குச் சொந்தமில்லையே! இதனால் நான் துணிந்து செய்வது சற்றுக் கடினமாகவே இருந்தது. நாலைந்து நாட்கள் என் அருகிலேயே இருக்கும் போது பிந்துவின் கன்னங்களில் தழும்புபோல் செக்கச் சேவேலென என்னவோ தோன்றியது. ஏதாவது கட்டி வெடிப்பாக இருக்கும். உங்கள் வீட்டாரெல்லாம், அதைப் பெரியம்மை யென்றே வைத்துவிட்டார்கள். கற்றுக்குட்டி வைத்தியனொருவனை அழைத்து வந்து காண்பித்தீர்கள். இன்னும் இரண்டொரு நாட்கள் போனால்தான் தெரியு மென்று அவன் சொல்லிவிட்டான். அந்த இரண்டு நாட்கள் தாம் ஏன் பொறுத்துக்கொண்டு இருக்கப் போகிறீர்கள்? தனக்கு நோய்வந்து விட்டதே என்று பிந்து மானக் குறைவினால் வெந்து போனாள். "பெரியம்மை வந்தால் தான் என்ன, நான் அவளைப் பிரசவ அறையில் தனியாக வைத்துக்கொள்ளுகிறேன். அவளால் உங்கள் யாருக்குமே தொந்தரவு வேண்டாம்" என்று அவள் பக்கமாக நான் பேசியபோது என்னை எல்லாரும் மூஞ்சியால் அடித்தீர்கள்; பிந்துவின் தமக்கைகூட மிகவும் வெறுப் புற்றவள்போல், "இந்தச் சனியனை ஆஸ்பத்திரிக்குக் கொண்டுபோய்

தொலைத்து விடுகிறேன்" என்றாள். இப்படி இருக்கும் போது பிந்துவின் கன்னங்களில் இருந்த சிவப்புத் தழும்பு திடீரென்று மறைந்துபோய்விட்டது. அதைப் பார்த்ததும் நீங்கள் பின்னும் முணு முணுத்தீர்கள். "நிச்சயமாக, அம்மைதான் வந்து அப்புறம் இறங்கிவிட்டது!" என்றீர்கள். அவள் பிந்து அல்லவா? ஏழைக்குத் தெய்வமே துணை!

ஆதரவின்மையின் நடுவில் வளர்வது ஒரு விசேஷ குணமென்றே சொல்லவேண்டும். அந்நிலையில் உள்ளவரின் சரீரம் எதையும் சகித்துச் சகித்து வயிரமாகி விடுகிறது. அவர்களை நோய்நொடி அண்டுவதில்லை. யமலோகத்திற்குப் போகும் வாசல்கூட அவர்கள் வரையில் அடைபட்டு விடுகிறது. பிந்துவுக்கு நோய் மேலாக வந்து பய முறுத்திவிட்டுப் போய்விட்டது. இதிலிருந்து எனக்குப் புதிய ஞானம் உதயமாயிற்று. உலகத்தவர்கள் கிள்ளுக்கீரையாக நினைக்கும் ஓர் ஆத்மாவைக் காப்பது எவ்வளவு கடினமான காரியம், அப்பா! இடங் கொடுத்து ஆதரிக்க நாம் எவ்வளவு முயற்சிகள் செய்கிறோமோ அவ்வளவு பிரதிகூலங்கள் இழைப்பாரும் இருக்கிறார்கள், இந்தப் புண்ணிய பூமியில்.

என்னிடத்தில் பிந்துவுக்குப் பயம் தெளிந்துவிட்டது. என்மேல் அவள் அதிகப் பற்றுதல் கொள்வதைப் பார்த்து எனக்குத் திகில் மூண்டது. அம்மாதிரி ஓர் ஆசையின் உருவை நான் இதுவரையில் கண்டதேயில்லை. புஸ்தகங்களில் படித்திருக்கிறேன், கணவன் மனைவி யரிடையே தான் அவ்வாறு தோன்றும் என்று. என் அழகைக் கண்டு நானே மயல்கொள்வதற்கு அவகாசமே ஏற்படவில்லை. என் சுந்தர வடிவமே, இந்தக் குரூபியின் மனத்தைக் கவர்ந்துவிட்டது. 'அக்கா, உன் முகத்தை என்னைத் தவிர வேறு யாராவது கண்டு இன்புற்று இருக்கிறார்களா?' என்பாள் அவள். என் கூந்தலை நானே வாரி முடிந்து கொள்ளும்போது அவளுக்கு என்மேல் ஊடல் உண்டாகி விடும். என் கூந்தலின் சுருளை இரண்டொரு தரம் தொட்டுத் தடவிப் பார்த்த பிறகுதான் அவளுடைய மனம் சமாதானம் அடையும். எங்காவது போவதாயிருந்தால்தான் நான் அலங்காரம் செய்துகொள்வது வழக்கம். ஆனால் பிந்து ஒருநாள் விடாமல் என்னைப் பலவிதமாகச் சிங்காரித்து அழகு பார்ப்பாள். வெறி பிடித்தவள்போல் என்னை நேசித்தாள் அந்தப் பேதை.

உங்கள் வீட்டின் பின்கட்டில் பேருக்கு ஒரு துண்டு மண் தரைகூட இல்லை. சுவர் ஓரமாகச் செல்லும் சாக்கடையின் பக்கத்தில் தப்பித் தவறிப் புல்லாந்திச்செடி ஒன்று வளர்ந்திருந்தது. அது செந்தளிர் விட்டுப் பூமியில் வஸந்த காலத்தின் வருகையை அறிவித்தது. என் வீட்டு வேலைக்கிடையில் எல்லோருடைய இகழ்ச்சிக்கும் இலக்கான அந்தப் பேதை, பிந்துவின் மனத்துள்ளும் இளவேனிலின் சாயல் படிந்தது. புற உலகைத் தவிர்த்து அக உலகிலும் இளந்தென்றல் உலவுமென்பதை அன்றுதான் அறிந்தேன். எந்த ஸ்வர்க்கத்திலிருந்து அந்தப் புளகம் மெல்ல வருமோ? எங்கள் வீட்டுச் சாக்கடைச்சந்து வழியாக வரவில்லை; அது மட்டும் நிச்சயம். பிந்து காட்டிய அன்பின் வேகம் என்னைச் சஞ்சலத்திற்கு உள்ளாக்கியது. சிற்சில சமயம் அவள்மீது எரிச்சல்கூட வரும் எனக்கு; அதை மறைப்பானேன்? ஆனால் அந்தப் பேரன்பின் மூலமாக என் வாஸ்தவமான உருவத்தை நான் கண்டறிந்தேன்: என் வாழ்வில் ஒருநாளும் தோன்றாத ஓர் உருவம் - என் விடுதலையின் உருவம்!

இந்தப் பக்கம், பிந்துவைப் போன்ற ஓர் அநாதைப் பெண்ணுக்கு நான் பரிவது உங்களுக்கெல்லாம் விரஸமாக இருந்தது. இதற்காகப் புருவத்தைச் சுளித்துக் கொள்ளுவது, வெடுக்கெனப் பேசுவது, இன்னும் எவ்வளவோ கூத்து! என் வங்கி களவு போனபோது, பிந்துவுக்குத்தான் கை நீளமென்று அவள் மேல் அடாப்பழி சுமத்தினீர்கள்! தேசிய இயக்கத்தின்போது உங்கள் வீட்டைப் போலீஸார் சோதனை போட வருகிறார்களென்று வைத்துக் கொள்வோம். பிந்துவை அவர்கள் ஏவிய வேவுகாரியென்றுகூட வாய்கூசாமல் சொல்லி யிருப்பீர்களே! அதற்கு அத்தாட்சி வேண்டியதே இல்லை; பிந்து அநாதை அல்லவா? அவள் எந்தப் பழியையும் ஏந்திக் கொள்ளக் கூடியவள்!

பிந்து ஏதாவது காரியம் செய்யச் சொன்னால் உங்கள் வீட்டு வேலைக்காரிகள் உடனே மறுத்து விடுவார்கள். அவள் அதற்குமேல் அவர்களுக்கு வேலையிடத் துணிய மாட்டாள். இந்தக் காரணங்களினால் அவள் பொருட்டு எனக்குச் செலவு சிறிது அதிகரித்தது. தனியாக ஒரு பணிப்பெண்ணை அமர்த்திக் கொண்டேன். அது உங்களுக்கு ஸம்மதப் படவில்லை. பிந்துவுக்கு இரண்டு துணிமணி வாங்கித் தருவதைக் கவனித்ததும், நீங்கள் எனக்குக் கைச் செலவுக்காகக் கொடுக்கும் பணத்தையும் நிறுத்தி

விட்டீர்கள். இதற்கு அடுத்த நாளே நான் விலை குறைவுள்ள மோட்டாப் புடைவையையே உடுத்த ஆரம்பித்து விட்டேன். என் எச்சில் இலையை நானே எடுத்து வெளியே கொண்டுவந்து பசு மாட்டுக்குப் போடுவேன். குழாயின் பக்கம் போய் என் பாத்திரங்களை நானே துலக்கிக் கொள்வேன். ஒரு நாள் தற்செயலாக நீங்கள் என்னிடத்தில் இந்தப் புது மாறுதலைக் கண்டு சந்தோஷம் கொள்ளவில்லை. என்னைப் பார்த்து நீங்கள் சந்தோஷம் அடையாது போனாற் போகிறீர்கள் — உங்களை மகிழ்விக்க வேண்டுமென்ற நற்புத்தி இதுவரையில் எனக்குத் தோன்றவில்லையே! என்ன செய்வேன்?

உங்களுக்கெல்லாம் கோபம் என்மேல் மிகுதியாக ஆக, பிந்துவுக்கு வயசும் வளர்ந்துகொண்டே வந்தது. இயற்கையின் செயலைப் பார்த்து மானிட இயல்பிற்கு மாறான துவேஷம் கொண்டீர்கள். பிந்துவை நீங்கள் பலவந்தமாக வீட்டைவிட்டு அப்புறப் படுத்தியிருக்கலாம்; ஆனால் ஏனோ அவ்வாறு செய்யவில்லை? அதுதான் இன்றளவும் எனக்கு அதிசயமாயிருக்கிறது. என்னிடத்தில் உங்களுக்கெல்லாம் உள்ளூற அச்சமென்பதை அறிவேன். பிரம்மா எனக்குப் புத்தியும் தந்திருக்கிறார்; மனசினுள்ளாவது அதை நீங்கள் பாராட்டாது போனால் மண்டை வெடித்து விட்டிருக்குமே!

கடைசியில், பிந்துவை உங்கள் சொந்தச் சக்தியினால் கிளப்ப முடியாமல் போகவே, விவாகதேவதையிடம் சரண் புகுந்தீர்கள். பிந்துவுக்கு வரன் நிச்சயமாகிவிட்டது. பெரிய ஓரகத்தி ஆறுதலுடன் பெருமூச்செறிந்து, "பிழைத்தேன்! அந்த ஈசுவரிதான் எங்கள் வம்சத்தின் மானத்தைக் காப்பாற்றினாள்" என்றாள்.

மணமகன் பார்வைக்கு எப்படி இருப்பானோ, எனக்குத் தெரியாது. நல்ல ஸம்பந்தமென்று சொல்லிக் கொண்டீர்கள். பிந்து என் கால்களைப் பிடித்துக்கொண்டு விக்கி விக்கி அழத் தொடங்கினாள்; "அக்கா, எனக்கு எதற்காக, இந்தக் கல்யாணம்?" என்றாள்.

"பிந்து! பயப்படாதே, அம்மா. உனக்கு வாய்க்கும் புருஷன் நன்றாக இருப்பானாம்" என்று அவளுக்கு நான் எவ்வளவோ சொல்லிப் பார்த்தேன்.

"அவர் நன்றாக இருந்தால் என்ன? அவர் கண்களுக்குப் பிடித்திருக்கும்படி என்னிடத்தில் என்ன இருக்கிறது?" என்று கூறியதும் அவள் மார்பு விம்மியது.

பிள்ளைவீட்டார் ஒப்புக்காவது பெண்ணைப் பார்க்க வரவேண்டாமா? வரவே இல்லை! இதனால் அவளுடைய அக்காவுக்கு நிம்மதி ஏற்பட்டது. பிந்துவைப் பார்த்து விட்டு அவர்கள் சம்மதிக்காது போனால் என்ன செய்வ தென்ற திகிலே!

பிந்து இரவு பகலாய்க் கண்ணீர் பெருக்கியவாறே இருந்தாள். அவளை வருத்திய கஷ்டம் என்னவென்பது எனக்குத் தெரியும். பிந்துவின் பொருட்டு நான் உங்கள் வீட்டாருடன் எவ்வளவோ சச்சரவு இட்டிருக்கிறேன். அவளுடைய விவாகத்தை நிறுத்தி வைக்க எனக்குத் துணிவு உண்டாகவில்லை. எந்த அதிகாரத்தைக் கொண்டு நான் இதைச் செய்வது? நான் இறந்து போனபின் அவளுடைய நிலை என்னவாகும்?

அவளோ பெண் - அதனுடன் குரூபி; நிறம் கறுப்பு - எந்த இடத்தில் வாழ்க்கைப்படுகிறாளோ? அவள் கதி என்ன ஆகுமோ? - இதையெல்லாம் நினைத்து என்ன பயனென்று சும்மா இருந்தேன். ஆனால் என் இருதயம் மட்டும் அநுதாபத்தால் அடித்துக்கொண்டது.

'அக்கா, கல்யாணத்துக்கு இன்னும் ஐந்தே நாள் இருக்கிறது; அதற்குள் எனக்குச் சாவு வராதா?'' என்பாள் பிந்து. பாவம்! அவளை நான் கோபித்துக்கொண்டேன். ஆனால் என் நெஞ்சில் நிறைந்தவனுக்குத்தான் இது தெரியும்; பிந்துவுக்கு அதற்குள் சுகமரணம் ஏற்பட்டிருக்கும் பக்ஷத்தில் கட்டாயம் பரம திருப்தியையே அடைந் திருக்கும் என் மனம்.

விவாகத்திற்கு முந்தினநாள் பிந்து தன் சகோதரி யிடம், "அக்கா, உன் வீட்டில் மாட்டுத் தொழுவத்தி லாவது விழுந்து கிடக்கிறேனே! எந்த ஈன வேலை இட் டாலும் செய்கிறேனே! காலில் விழுந்து கேட்கிறேன்; இப்படி என்னைத் தள்ளிவிடாதேயேன்'' என்று வேண்டிக் கொண்டாள்.

சில நாட்களாகவே தமக்கையும் மறைவாகக் கண்ணீர்விட்டு அழுதுகொண் டிருந்தாள். அன்றும் அவ் வாறே கண்ணீர் பெருக்கினாள். உள்ளம் என்பதைத் தவிர, சாஸ்திரம் என்று ஒன்று இருக்கிறதே! என்ன செய்வாள் பாவம், என் ஓரகத்தி?

"அம்மா பிந்து, கணவனால்தானே பெண்களுக்குக் கதிமோக்ஷம் - தலை எழுத்து, துக்கம் அநுபவிக்கவேண்டு மென்று இருந்தால் யாரால் தடுக்கமுடியும், அம்மா!''

என்று புத்தி புகட்டினாள். இதன் முடிவென்ன? பிந்து மீள்வதற்கு ஒரு வழியும் இல்லை; பிந்து விவாக பந்தத்துள் சிக்கித்தான் ஆகவேண்டும். அதற்குமேல் விதிப்படி எல்லாம் நடக்கும்.

என்னால், முடிந்தவரையில் அவளுடைய கல்யாணத்தை நம் வீட்டிலேயே நடத்தப் பாடுபட்டேன். "அது சரியல்ல ; பிள்ளையின் வீட்டிலேதான் நடக்கவேண்டும்" என்று நீங்களெல்லாரும் முரணாகப் பேசினீர்கள்.

பிந்துவின் விவாக நிமித்தம் நீங்கள் பணம் செலவழித்திருந்தால், கட்டாயம் உங்கள் குலதெய்வம் கோபித்துக் கொண்டு மலையேறிவிட்டிருக்கும். நல்ல காலம், அப்படி ஒன்றும் நிகழவில்லை. என் ஓரகத்திக்குத் தெரிவித்திருந்தால் அவள் நடுங்கிப் போய்விட்டிருப்பாள் ; என் நகைகளில் சிலவற்றைப் பிந்துவுக்கு அணிவித்தேன். அவள் கண்ணில் அவை படாது போயிருக்குமா? கவனித்தாலும் கவனியாததுபோல் இருந்துவிட்டிருப்பாள். உங்கள் சனாதன தர்மத்தின்மீது ஆணையிட்டுச் சொல்லுகிறேன்! அந்தக் குற்றத்திற்காக அவளை மன்னித்து விடுங்கள்.

போகும்போது பிந்து என்னை அணைத்துக்கொண்டு, "அக்கா, என்னை என்றென்றும் துறந்து விடுவாயா?" என்றாள்.

"அப்படி ஒன்றும் இல்லை, என் பிந்து! உனக்கு எந்தக் கஷ்டம் வந்தாலும் உன்னைக் காட்டிக்கொடுப்பேனா?" என்றேன்.

மூன்று நாட்களாயின. உங்கள் ஜமீன் குடிமக்கள் சிலர் யஜமானர்களைப் பேட்டி காண வந்திருந்த சமயம் காணிக்கையாக ஓர் ஆட்டுக்கடாவை ஸமர்ப்பித்தார்கள். அகாதமான உங்கள் வயிற்றுப் பசியைப் போக்கவந்த அந்த ஜீவனைக் காப்பாற்றிக் கட்டை, கரி நிரப்பிவைக்கும் அறையில் மறைத்துவிட்டேன். காலையில் எழுந்ததுமே முதல் காரியம் அதற்குத் தழை கொண்டு போடுவேன். இரண்டொருநாள் உங்கள் வேலைக்காரர்களை நம்பியிருந்தேன். அவர்களோ தினி போடுவதைவிட அதைத் தின்றுவிடுவதிலேயே கருத்தாய் இருந்தனர்.

ஒருநாள் அதிகாலையில் அவ்வறையில் நுழையும்போது பிந்து, ஒரு மூலையில் சுருட்டிக்கொண்டு உட்கார்ந்திருப்பதைக் கண்டு திடுக்கிட்டேன். என்னைப் பார்த்த மாத்திரம் கால்களை இறுகப் பிடித்துக்கொண்டே எதுவும் பேசாமல் தேம்பித் தேம்பி அழுதாள்.

பிந்துவின் கணவன் பைத்தியம்!

"நிஜமாகச் சொல்லு, பிந்து ?" என்றேன்.

"நான் உன்னிடத்தில் பொய் சொல்லுவேனா, அக்கா? அவருக்குப் பைத்தியந்தான்! - மாமனாருக்கு இந்த விவாகத்தில் துளிக்கூட இஷ்டமில்லை; ஆனால் என்ன செய்வார்? யம காதகியான என் மாமியாரிடத்தில் அவருக்குப் பயம். கல்யாணத்திற்கு முன்பே காசிக்குப் போய் விட்டார். தன் பிடிவாதத்தைச் சாதிக்க மாமியார் பிள்ளைக்கு விவாகம் செய்தே முடித்தாள்" என்றாள்.

நான் கரிக்குவியல்மீது உட்கார்ந்துவிட்டேன். பெண்களுக்குத் தம் இனத்தாரிடத்திலேயே கருணை இல்லை. கேட்டால், ஸ்திரீ ஜன்மந்தானே என்கிறார்கள். தன் பிள்ளை பைத்தியமா யிருந்தாலும் ஆண் மகன் அல்லவா?

பிந்துவின் கணவன் எப்போதுமே பைத்தியம் பிடித்து அலைகிறானென்று சொல்வதற்கில்லை. ஒவ்வொரு நாள் யாருக்குமே அடங்காமல் வெறி மூளும். அப்போது அவனை ஓர் அறையில் தள்ளிப் பூட்டிவிடுவார்கள். விவாக தினத்தன்று இரவு அவன் தன் ஸ்வாதீனத்தில்தான் இருந்தான். இரவு கண் விழித்ததன் பயனாக மறுநாள் மூளை கலங்கிவிட்டது. பிந்து மத்தியான்னம் சாப்பிட உட்கார்ந்த சமயம் அவன் வெறிகொண்டு அவள் புசிக்க இருந்த சோற்றை அது வைத்திருந்த பித்தளைத் தட்டோடு வெளியே வீசி எறிந்துவிட்டான். திடீரென்று, பிந்து பெரிய ராணியென்றும் அவள் தங்கத் தட்டைப் பரிசாரகன் திருடிக்கொண்டு வேறு ஏதோ ஒன்றை அவளுக்கு வைத்துவிட்டானென்றும் தோன்றிவிட்டது அவன் மனசில்; அதனால்தான் அவ்வளவு கோபம். பிந்து அதைக் கண்டு நடுநடுங்கிப் போனாள். மூன்றாவது நாள், மாமியார் அவளைக் கணவனுடைய அறையில் படுத்துக் கொள்ளும்படி உத்தரவிட்டதைக் கேட்டதும் உயிரே ஒடுங்கியது போல் ஆயிற்று. மாமியாரோ காளி! கோபம் வந்துவிட்டால் தன்னையே மறந்துவிடுவாள். அவளும் பைத்தியந்தான்; அரைகுறை ஆனதால் பின்னும் பயங்கரமானது; பிந்து அறையில் நுழைய வேண்டியதாயிற்று. அன்று அவள் கணவன் சற்றுத் தணிந்தே இருந்தான். ஆனால் திகிலினால் பிந்துவின் சரீரம் கட்டையைப் போல் உணர்வை இழந்தது. கணவன் நன்றாகத் தூங்கும் சமயமாகப் பார்த்து அவள் வெகு சாமர்த்தியமாக ஓடி வந்து விட்டாள். அதை விவரிப்பது இங்கே அநாவசியம்.

அருவையும் கோபமும் கலந்து வரவே என் உடல் கொதிக்கத் தொடங்கியது ; "உன்னை ஏமாற்றி நடத்திய இந்த விவாகம் விவாகமே அல்ல. பிந்து, நீ முன்பு எப்படி இருந்தாயோ அதே மாதிரி என்னிடமே இரு. உன்னை அழைத்துப்போக எவனுக்கு அவ்வளவு மண்டை உறுதி இருக்கிறதோ பார்க்கலாம் !" என்றேன்.

"பிந்து சொல்வது அவ்வளவும் பொய்" என்று நீங்கள் எல்லாரும் சேர்ந்துகொண்டு சொன்னீர்கள்.

"அவள் பொய் சொல்லுவாளென்றால் நான் நம்பவே மாட்டேன்" என்றேன்.

"எப்படி உனக்குத் தெரியும்?" என்று குறுக்குக் கேள்வி கேட்டீர்கள்.

"எனக்குத் தெரியும்; அதுவே போதும்" என்றேன் உறுதியை விடாமல்.

அப்புறம் பிந்துவின் கணவன் வீட்டார் போலீஸ் கேஸ் தொடுப்பார்கள் என்று பயமுறுத்திப் பார்த்தீர்கள்.

"ஏமாற்றி, ஒரு பைத்தியக்காரனுக்கு அவளைக் கொண்டு மடுத்தார்களே, அது நியாயமா ? கோர்ட்டு அவர்களுக்கு மாத்திரமா இருக்கிறது ?" என்றேன்.

"இதற்காகக் கோர்ட்டுக்குப் போய் நாலு பேர் சிரிக்க வேண்டுமா? அவளைப்பற்றி நாம் தலையை உடைத்துக் கொள்வானேன் ?" என்றெல்லாம் வாது செய்தீர்கள்.

"என் சொந்த நகைகளை விற்றுச் செலவு செய்து, இது நியாயமா, அநியாயமா என்பதைப் பார்த்துவிடுகிறேன்" என்றேன்.

"வக்கீல் வீட்டுக்குப் பத்துத் தடவை நீ நடந்து எங்கள் மானத்தை வாங்க வேண்டுமா ?" என்று கூறினீர்கள்.

இதற்குப் பதில் தரவில்லை நான். நெற்றியில் படீர் படீரென அறைந்து கொள்வதை விட வேறு எதைச் செய்வது ? பிந்துவின் புக்ககத்திலிருந்து அவளுடைய பெரிய மைத்துனர் வந்து வெளிப்பக்கம் பலத்த கூச்சல் போட்டுக் கொண்டிருந்தார். "இதோ பார், போலீஸாரை அழைத்து வருகிறேன்" என்று மிரட்டினார்.

அப்போது எனக்கு எங்கிருந்துதான் அப்பேர்ப்பட்ட தைரியம் வந்ததோ ? கசாப்புக்கடைக் கத்திக்கு உயிர் தப்பி என்னை அடைந்த ஒரு ஜீவனை, மிரட்டல் உருட்டலுக்குப்

பயந்து மறுபடியும் கசாப்புக்காரனிடமே கொடுத்துவிடுவேனு? எதற்கும் சளைக்காமல் நான், "உங்கள் சாமர்த்தியத்தைத்தான் பார்க்கிறேனே! போய்ப் போலீஸாரை அழைத்து வாருங்கள்" என்றேன். இதைக் கூறிவிட்டு, பிந்துவை என் அறையிலேயே பாதுகாப்புடன் வைக்க யோசனை செய்துகொண்டு அவளைத் தேடப்போனேன். ஆனல் அவள் காணவில்லை. உங்களுடன் நான் விவாதித்துக் கொண்டிருந்த சமயம் பார்த்து, அவள் தானுகவே வெளியே வந்து மைத்துனரிடம் அகப்பட்டுக் கொண்டாள். இந்த வீட்டில், தான் இருந்தால் எல்லாருக்கும் கஷ்டம் விளையுமென்று அறிந்தாள். நடுவில் ஓடிவந்து பிந்து தன் துன்பத்தைப் பின்னும் பெருக்கிக் கொண்டாள். "என் பிள்ளை ராக்ஷஸனு என்ன, அப்படி அவளைக் கடித்துத் தின்றுவிட? உலகத்தில் எவ்வளவோ குடும்பங்களில் கெட்ட பிள்ளைகள் இருக்கிறுர்கள். அவர்களுக்கு என் பிள்ளை மாணிக்கமென்று சொல்ல வேண்டும்."—இது அவளுடைய மாமியாரின் வாதம்.

"அவளுடைய அதிருஷ்டம் சப்பை. அதற்காக வருந்தி என்ன பலன்? பைத்தியமோ பிசாசோ, அவன் எப்படி யிருந்தாலும் கணவனல்லவா?" என்று தன் கருத்தை வெளியிட்டாள் என் பெரிய ஓரகத்தி.

குஷ்டரோகியான தன் கணவனை ஒருத்தி வேசி வீட்டிற்குத் தானே அழைத்துச் சென்றுளாம். பெண்களெல்லாரும் அந்தமாதிரி ஸதிமணிகளாக இருக்கவேண்டும் என்பதுதானே உங்கள் கொள்கை. உலகத்திலேயே இதைவிடப் பேராண்மை என்ன இருக்கிறது? இந்தப் புண்ணிய கதையைப் பரவச்செய்யும் இந்த ஆடவர்களுக்குத்தான் வெட்கம், மானம் இல்லையோ? மிக உயர்வான மனிதப்பிறவி எடுத்த உங்களுக்குப் பிந்துவின் விஷயத்தைப் பார்த்துக்கோபந்தானே வருகிறது; வெட்கத்தால் தலை தரையோடு கவிழ்ந்து போகவில்லையே? பிந்துவுக்காக என் இருதயம் பிளந்தே போயிற்று. உங்களுக்காக நான் பட்ட லஜ்ஜைக்கு ஓர் எல்லையே இல்லை. அசல் நாட்டுப்புறத்துப் பெண் நான்; உங்கள் வீட்டில் புகுந்தேன். பகவான் கவனப் பிசகாக எனக்குச் சிறிது மூளையை வைத்துவிட்டார். நீங்கள் ஓதின தர்ம நீதிகள் எனக்குச் சிறிதும் சகிக்கவில்லையே!

பிந்து செத்தாலும் இந்த வீட்டு வழி வரமாட்டாளென்று எனக்கு நன்றுகத் தெரியும். நான் அவளுக்குக்

கொடுத்திருந்த வாக்குறுதியை எப்படி மறப்பேன்? அவளைத் துறப்பதில்லை; கடைசி வரையில் பார்த்துவிடுவது என்ற உறுதிக்கு வந்தேன். என் சிறிய தம்பி சரத் கல்கத்தாவில் படித்துக்கொண் டிருந்தான்; உங்களுக்கும் தெரியுமே அவன் விஷயமெல்லாம். தொண்டர் படையில் சேர்ந்து தேச சேவையில் ஈடுபடுவது, காலரா கண்ட இடத்திற்குச் சென்று உதவிசெய்வது, வெள்ளச்சேதம் ஏற்பட்ட காலத்தில் ஜனங்களுக்கு உழைப்பது-இந்த மாதிரி ஸேவைகளில் வெகு உத்ஸாகத்தோடு உழைத்ததால் பரீக்ஷயில் எத்தனையோதரம் தவறியிருக்கிறான். அவனைக் கூப்பிட்டு நான், "பிந்துவைப்பற்றி எனக்கு அடிக்கடி சமாசாரம் எட்டும்படியான வழியைத் தேடவேண்டும்; சரத்! எனக்குக் கடிதம் எழுதக்கூடிய துணிவு அவளிடத்தில் இல்லை. எழுதினாலும் என் கைக்கு வந்து சேராது" என்று பொறுப்பை அவன்மேல் போட்டுவிட்டேன்.

ஆனால் இதைவிடப் பிந்துவைக் களவாடிக்கொண்டு வந்துவிடு அல்லது அவளுடைய பைத்தியக்காரக் கணவனின் குரல்வளையை அழுத்திவிடு என்றால் அவன் வெகு உத்ஸாகத்துடன் சட்பட்டென்று முடித்துவிட்டிருப்பான்.

சரத்துடன் நான் இதைப்பற்றியெல்லாம் யோசனை செய்துகொண் டிருக்கையில் நீங்கள் என் அறைப் பக்கமாக வந்து, "மறுபடியும் எந்த விபரீதத்தைச் செய்யச் சதி செய்கிறீர்கள்?" என்று சொன்னது கவனம் இருக்கும் என்று எண்ணுகிறேன்.

"பிந்துவை எங்கேயாவது ஒளித்து வைத்து விட்டீர்களா என்ன?" என்று வினவினீர்கள். அதற்கு நான், "அவள் வருவதாக இருந்தால் கட்டாயம் மறைத்து வைக்கவே உத்தேசம்; ஆனால், அவள் வரமாட்டாளே. நீங்கள் திகிலடைந்து போவதற்கு ஒன்றும் இல்லை" என்றேன்.

சரத் என்னோடு இருப்பதைக் கண்டு உங்களுக்குச் சந்தேகம் தட்டியதுபோலிருக்கிறது. மேலும் சரத் அடிக்கடி வந்து என்னைக் கண்டு பேசிப் போவதே உங்கள் வீட்டாருக்கு ஆகவில்லை. போலீஸார் அவன்மேல் கவனமாயிருந்ததே இதற்குக் காரணம். ஏதாவது அரசியல் வழக்கில் மாட்டிவிடப் போகிறானே என்ற பயந்தானே! இதற்காகவே சுபதினங்களில் சகோதரனுக்கு நான் இட வேண்டிய மங்கள திலகத்தைக்கூட யார்மூலமாவது

அனுப்பி வைப்பேன். உங்கள் வீட்டுக்குள் அழைக்கும் வழக்கமே இல்லை!

பிந்து மீண்டும் ஓடிவிட்ட செய்தி உங்கள் மூலமாகத் தெரியவந்தது; அதனால் அவர்கள் உங்கள் வீட்டில் அவளைத் தேடிப்பிடிக்க வந்தார்கள். இதைக் கேட்டதும் என் மார்பில் அம்பு பாய்ந்த மாதிரி இருந்தது. அந்த நிர்ப் பாக்கியவதிக்குப் பொறுக்கமுடியாத கஷ்டம் என்னவெல் லாம் ஏற்படுகிறது! இது தெரிந்தும் அவளுக்கு உதவி செய்ய ஒரு வழியும் தென்படவில்லையே?

சமாசாரத்தை அறிந்து வர, சரத் ஓடினான். அன்று சாயந்தரமே என்னிடம் வந்து விஷயத்தை அவிழ்த் தான்:

"பிந்து அவள் சிற்றப்பா வீட்டுக்குப் போனாளாம்; அவள் வந்ததைப் பார்த்து அவர்கள் ஆத்திரம் மூண்டவர் களாய்ப் பழையபடி அவளது புக்ககத்திலேயே கொண்டு போய் விட்டார்களாம்; அவளால் ஏற்பட்ட வண்டிச் சத்தம் போன்ற தண்டச் செலவுகளை நினைத்துக்கொண்டு இன்னும் உறுமிக்கொண் டிருக்கிறார்கள்."

உங்கள் சித்தியம்மா ஸ்ரீ க்ஷேத்திரத்திற்குத் தீர்த்த யாத்திரையாகப் போகவேண்டி அகத்தில் வந்து இறங்கி னாள்; "நானும் போகட்டுமா?" என்று உங்கள் உத்தரவைக் கேட்டேன். திடீரென எனக்குத் தர்மத்தில் இவ்வளவு பற்றுதல் உண்டானதைக் கண்டு வீட்டாரெல்லாம் ஆனந்தத்தில் ஆழ்ந்தனர். குறுக்கே ஒன்றுமே பேசவில்லை. நான் கல்கத்தாவில் இருந்தால் திரும்பவும் இந்தப் பிந்துவின் விஷயத்தில் தலையிடக் கூடுமென்ற எண்ணத்தாலும் என்னை வேறு இடத்தில் சில நாட்கள் அனுப்பி வைக்க உத்தேசித்தீர்கள்; அதுவும் தெரியாமல் போகவில்லை.

நான் உங்களுக்கெல்லாம் பெரிய முள்ளாக உறுத்திக் கொண்டிருந்தேன். புதன்கிழமை நான் புறப்படவேண்டிய நாள். ஞாயிற்றுக் கிழமை தொடங்கியே மூட்டை முடிச்செல்லாம் கட்டிச் சித்தமாகிவிட்டது. சரத்தை வரவழைத்து, "எப்படியாவது பிந்துவை புதன்கிழமை யன்று, புரிக்குப் போகும் வண்டியில் ஏற்றிவிடு" என்று கூறினேன்.

சரத்தின் முகம் இந்த யுக்தியைக் கேட்டதும் மலர்ந்து விளங்கியது; "அக்கா, உனக்குக் கவலையே வேண்டாம்; அவளை வண்டியில் ஏற்றுவதோடு, கூடவே புரி வரைக்கும் கொண்டு விடுவதும் என் பொறுப்பாகும்" என்றான்.

அன்று விளக்கு வைக்கும் சமயம். சரத் மறுமுறை என்னைக் காண வந்தான். அவன் முகத்தில் பொலிவே இல்லாததைக் கண்டு சாம்பியது என் உள்ளம்.

"என்னடா சரத், சௌகரியப்படவில்லையா?" என்று பரபரப்புடன் வினவினேன்.

"இல்லை" என்றான்.

"அவள் இதற்கு இணங்கவில்லையா?" என்றேன்.

"அதற்கு அவசியமே இல்லை; நேற்று இரவே அவள் தன் புடைவையைக் கொளுத்திக்கொண்டு தற்கொலை பண்ணிக் கொண்டாள். அவர்கள் வீட்டில் ஒரு பையனைத் தட்டிக் கொடுத்துக் கேட்டதில் உன் பேருக்கு அவள் ஒரு கடிதம் எழுதி வைத்துவிட்டுச் சென்றாளாம்; ஆனால் அந்தக் கடிதத்தை அவர்கள் சாம்பராக்கி விட்டிருப்பார் கள்" என்றான்.

போகட்டும்! — என் மனம் அமைதியுற்றது.

"இந்தக் காலத்திலேயே புடைவையைக் கொளுத்திக் கொண்டு பிராணனை விடுவது ஒரு 'பாஷன்' ஆகிவிட்டது" என்று ஊரெங்கும் வம்பளந்தார்கள். நீங்களெல்லாரும் "இதெல்லாம் வெறும் நாடகம்" என்று இழிவாகக் கூறினீர்கள். இந்த நாடகம் வங்காளிப் பெண்களின் புடைவையை மட்டுமா பிடித்துக் கொள்ள வேண்டும்! ஆடவர்களின் வேஷ்டிக் கொசுவத்தைப் பற்றாதது ஏனோ? இதன் உண்மையை ஆராய்வது உசிதம்.

பிந்து நிர்ப்பாக்கியவதியே! உயிருடன் இருந்த வரையில் ரூபத்தாலோ குணத்தாலோ யாதொரு புகழையும் அடையவில்லை. சாவதற்குத் துணிந்தாளே, அதையாவது ஆடவர்களெல்லாரும் வியந்து போற்றும் படிப் புதுவிதமாக நடத்தியிருக்கக் கூடாதா? இறந்தும் உலகத்தவரின் இகழ்ச்சிக்கு ஆளாகிவிட்டாளே!

அவள் தமக்கை தன் அறையிலேயே புலம்பலானாள். அந்த அழுகையில் ஓர் ஆறுதல் இருந்தது. எப்படியோ அவள் குலத்தின் பெயர் கெடவில்லை; அவள் இறந்ததால் ஒழிந்தது ஒரு துக்கம். உயிரோடு இருந் திருந்தால் என்ன அவதூறெல்லாம் விளையுமோ?

புண்ணிய ஸ்தலத்தை அடைந்தேன். அங்கே பிந்து வரவேண்டிய பிரயோஜனமே இல்லை; எனக்கு மட்டும் இருந்தது.

துக்கமென்று உலகத்தவர் சொல்லுகிறார்களே, உங்களுடைய குடும்பத்தில் அது எனக்குச் சிறிதாகிலும் ஏற்படவில்லை. உங்கள் வீட்டில் சோற்றுக்கும் துணிக்கும் என்றுமே பஞ்சமில்லை. உங்கள் அண்ணாவின் நடத்தை எப்படியோ தெரியாது. உங்களிடத்தில் கோளாறு எதுவும் இல்லாததைப்பற்றி நான் தெய்வத்தைத்தான் துதிக்கவேண்டும். அப்படி உங்கள் சுபாவமும் பெரிய வருடையது போலவே இருந்திருக்குமானால் என் வாழ் நாளும் அதன் வழியே சென்றிருக்கும். சதியான பெரிய என் ஓரகத்தியைப் போல நான் கணவனென்னும் தெய்வத்தைத் தூற்றாமல், உலகத்தின் கர்த்தாவைத்தான் திட்டியிருப்பேன். ஆகையால் உங்களைப்பற்றிக் கடவுளிடம் நான் முறையிடுவதற்கு ஒன்றுமில்லை. நான் எழுதும் இந்தக் கடிதம் அதைச் சொல்வதற்கல்ல.

நான் மாகன் படால் சந்தில், 27-ஆம் எண் உடைய உங்கள் இல்லத்திற்கு இனித் திரும்பமாட்டேன். பிந்துவைப் பார்த்தாகிவிட்டது. இல்லறத்தில் சில நாள் பழகியதில் பெண்கள் எத்தன்மையோர் என்பது தெளிவாகிவிட்டது. இனி என்னைப்பற்றி உங்களுக்கு அக்கறை இல்லை.

இதையும் உணர்ந்தேன்; பிந்து ஈனமான பெண் ஜன்மம் எடுத்தாலும் அவளைப் பகவான்மட்டும் துறக்கவில்லை.

அவள்மீது நீங்கள் தொடுத்த சமூக பாணம் சிறிது ஆழமே அவளைப் பாதித்தது. மழுங்கிப் போகும் நிலை அதற்கும் ஒருநாள் ஏற்படாதா? இந்தப் பாழும் மனித வர்க்கத்தவரின் கைக்கு எட்டாத உயர்ந்த இடத்தில் இருக்கிறாள் பிந்து. அவளை என்றென்றும் காலின் கீழே நசுக்கிவிட உங்களால் முடியாதே. மறலி உங்களைக் காட்டிலும் கெட்டிக்காரன்! துர்மரணமானாலும் அவள் செய்த காரியம் மகத்தான தியாக மென்றே கூறுவேன். இந்த இடத்தில் பிந்து, வங்க தேசத்தில் தோன்றிய ஒரு பெண் மட்டுமல்ல; அவளை நிராகரித்த சிறிய தந்தைவீட்டுப் பிள்ளைகளின் தங்கையாக இருந்ததோடு அவள் நிற்கவில்லை; ஒரு பைத்தியக்காரனுக்கு வாழ்க்கைப் பட்ட மனைவி மாத்திரமா? அவள் உலகின் உறவை ஒழித்து முக்தி பெற்ற ஒரு பெரிய ஆத்மா.

மறலியின் குழலிசை பிந்துவின் உடைந்த உள்ளத்தின் மூலம் என் இருண்ட வாழ்வின் யமுனைக் கரையில் ஒலித்த

போது என் நெஞ்சத்தில் வேல் பாய்ந்தது. உலகத்தில் மிகவும் அற்பமான விஷயம், ஏன் எல்லாவற்றையும் விடக் கடினமாக இருக்கிறதென்று கடவுளை வினவினேன்.

ஒரு சந்திலே சுவர் மறைவில் நிரானந்தமே குடி கொண்ட ஓர் அற்பமான நீர்க்குமிழிக்கு ஏனோ இந்த இடையூறுகளெல்லாம்? பருவ காலங்கள் தம் நிறை கலசங்களிலிருந்து இன்னமுதைப் பொழியும்போது, ஏனோ என்னால் அதை உட்கொள்ள முடியாமல் போய்விட்டது? கடவுள் படைத்த இவ்வழகிய மேதினியில், என்னைப் போன்ற ஜீவன் கூட்டில் அடைபட்ட பறவைபோல் துளித் துளியாக ஏன் வெம்பிச் சாகவேண்டும்? நான் நடத்திய ஓர் இல்லறம் எவ்வளவு அற்பமானது! இவ் வுலகத்தவர் விதிக்கின்ற கட்டுத் திட்டம் எவ்வளவு இழி வானது; முடிவில், இழிவான இந்த நாகபாசத்திலிருந்து மீண்டு வெற்றிபெறவேண்டும்; இல்லாவிட்டால் உயிரைப் போக்கிக்கொண்டு அழியா ஆனந்த உலகிற்குப் போவதே உத்தமம்.

மறலியின் குழலிசை இன்னும் என் செவியுள் ஒலித்துக்கொண் டிருக்கிறது. எந்தப் பாபத்தைச் செய்தோமென்று எங்களை நீங்கள் இவ்வாறு கடுமையான வாழ்க்கையில் அடைத்து வைக்கிறீர்கள்? அதோ மரண தேவதையின் கரங்களில் விடுதலையின் வெற்றிக்கொடி பறக்கிறது! அடி பேதாய்! இனிப் பயமில்லை. உன் துக்கம் ஒழிந்துவிட்டது, நாட்டுப் பெண்ணென்ற இந்தச் சட லத்தைப் பிளந்துகொண்டு வெளிக் கிளம்புவதற்கு உனக்கு அரைக்கணங்கூட ஆகாதே!

உங்கள் வீட்டிற்கு ஒரு நமஸ்காரம்; அதன் அச்சம் அறவே நீங்கியது, என் மனத்தைவிட்டு. என்னெதிரே அலைக்கிற நீலக்கடல், என் தலைக்குமேல் வெண்முகில் உலவும் ஆகாயம்!

உங்களுடைய பழக்க வழக்கம் என்ற அந்த காரம் என்னை இதுவரையில் மறைத்துக் கொண்டிருந்தது. நொடிப்பொழுது பிந்து என் வாழ்வில் தோன்றி அந்தத் திரையைச் சிறிதே விலக்கிச் சென்றாள். அவளுடைய மரணத்துடன் அந்தத் திரை முழுவதுமே கிழிந்துவிட்டது. இன்று வெளியே வந்ததும் பார்க்கிறேன்; என் கௌர வத்தைக் காப்பாற்றிக்கொள்ள ஓர் இடமும் இல்லையே? எனக்கு அழகு இருந்தும் அலக்ஷ்யம் செய்தீர்கள். எந்தப் பொருளுக்கு என்னைப் பிடித்திருந்ததோ அதன் திவ்ய

நேத்திரம் இந்நீல ஆகாயத்தின் மூலமாக என்னை அழைக்கிறது.

நான் சாகத் துணிந்து விட்டேன் என்று எண்ண வேண்டாம் நீங்கள்; அந்தப் பயம் இல்லை. மீராபாய் என்னைப்போல் ஒரு பெண்தான். அவளைப் பிணைத்த பாசமும் அற்பமானதல்ல. அவள் உயிரைப் போக்கிக் கொள்ளவில்லையே! ஒரு பாட்டில் அவள் சொல்லுகிறாள்:

**"பாபே சாடே, மாயே சாடே, சாடே ஸஹாஸஹி**
**மீரா ப்ரபு லகனலகி ஜோ ந ஹோயே ஹோயி."***

இந்தப் பெருமுயற்சி இருந்தால் போதும்; உயிர் வாழலாம். நானும் அவளைப்போல் உயிரை வைத்துக் கொள்ள விரும்புகிறேன்; பிழைத்துப் போனேன்!

உங்கள் திருவடியிலிருந்து விலகிய
**மிருணாள்.**

---

* தந்தை, தாய், நண்பர்கள் யாவரும் விட்டொழித்தாலும் பிரபுவை மீரா அடைய முற்பட்டுவிட்டாள்; இனி நடக்கிறது நடக்கட்டும்.

# சந்தேகம் தீர்ந்தது!

## 1

ஜிங்க்டாகோடா ஜமீன்தார் கிருஷ்ண கோபால் ஸர்க்கார் மூத்த பிள்ளையிடம் தம் ஜமீனையும் குடும்ப பாரத்தையும் ஒப்பித்துவிட்டுக் காசிக்குப் போய்விட்டார். ஊரிலுள்ள ஏழைகளும் அநாதைகளும் இச்செய்தியைக் கேட்டு 'ஓ' என்று அழுது கண்ணீர் சிந்தினர்கள். "இந்த மாதிரி, தானசீலனையும் தர்மிஷ்டனையும் இந்தக் கலி யுகத்தில் காணமுடியாது; ஆஹா!" என்று எல்லோரும் பேசிக்கொண்டார்கள்.

அவருடைய மகன் விபின்விஹாரி இந்தக் காலத்து ஆசாமி. பி. ஏ., படித்தவன். தாடி வைத்திருப்பான்; மூக்குக் கண்ணுடி அணிந்திருப்பான்; யாரோடும் அதிக மாகப் பழகமாட்டான்; நல்ல நடத்தை உள்ளவன்; புகையிலைகூடப் போட மாட்டான்; சீட்டாட்டமும் ஆட மாட்டான். பார்வைக்கு மிகவும் நல்ல மாதிரியாகத்தான் இருப்பான்; ஆனால் அழுத்தம்.

குடிகள் விரைவிலேயே இதை உணர்ந்தார்கள். கிழ ஜமீன்தாரிடமிருந்து ஏதோ சாக்குப் போக்குச் சொல்லித் தப்பலாம்; ஆனல் இவனிடத்தில் எதுவும் பலிக்காது; கொடுக்கிற வரிப் பணத்தில் பைசா கூடத் தள்ளுவான் என்று எதிர்பார்க்கவே வேண்டாம்.

விபின் விஹாரி ஜமீன் காரியத்தைத் தானே ஏற்றுக் கொண்டதும், தன் தந்தை பல பிராம்மணர்களுக்குப் பிரம்மத்ரமாகத் தீர்வையில்லாமல் நிலம் விட்டிருப்பதை யும், இத்தனை பேருக்கு என்று கணக்கிடமுடியாதபடி பல பேருக்கு வரிவஜா செய்திருப்பதையும் கண்டான். கிருஷ்ணகோபால் பாபுவிடம் யாரேனும் வந்து ஏதாவது செய்ய வேண்டுமென்று கெஞ்சிக் கேட்டால் அவர்கள் விருப்பத்தை நிறைவேற்ருமல் போகமாட்டார். இது அவரிடத்திலுள்ள ஒரு பெரிய குறை.

விபின், 'இப்படியெல்லாம் இனி ஒரு போதும் நடக்க விடமாட்டேன் பாதி ஜமீனுக்குத் தீர்வையில்லாமல்

இந்தமாதிரி விட்டுவிட என்னல் முடியாது!' என்று தன்னுள்ளே முடிவுசெய்து கொண்டான். கீழ்க்கண்டவை இரண்டும் அவன் மனசில் இருந்த தீர்மானங்கள்.

முதலாவதாக:— வேலையின்றி வீட்டில் வெறுமே குந்திக்கொண்டு ஜமீன் வரும்படியை அநுபவித்துக் கொழுப்பவர்கள் பெரும்பாலும் உதவாக்கரைகள்; ஆகையால் இவர்கள் விஷயத்தில் கொஞ்சங்கூடத் தயாதாக்ஷிண்யம் காட்டக் கூடாது. இப்படிப் பட்டவர்களுக்குத் தானம் செய்தால் நாட்டில் சோம்பேறித்தனத்தை வளர்த்ததாகத்தான் அர்த்தம்.

இரண்டாவதாக:—நம்முடைய தந்தை, பாட்டன் காலத்திற்கும் இந்தக் காலத்திற்கும் எவ்வளவோ வித்தியாசம் இருக்கிறது. இப்போது வாழ்க்கை நடத்துவதே சிரமமான காரியம்; சில சாமான் கிடைப்பதே குதிரைக் கொம்பாய் இருக்கிறது. விலைவாசியோ ஏறிவிட்டது. அதோடு, இப்போதை வாழ்க்கைக்கு இன்றியமையாத பொருள்கள் பல வேண்டியிருக்கின்றன. ஒரு பெரிய மனிதன் தன் கௌரவத்தைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டுமானல் முன்னிலும் நாலுமடங்கு அதிகமான செலவு ஏற்படுகிறது. நம் தகப்பனர் யோசனையே செய்யாமல் இரண்டு கையாலும் வாரி வாரி இறைத்ததுபோல் செய்தால் ஒன்றும் நடக்காது; அவர் கொடுத்ததை இனிப் பிடுங்கிக்கொண்டு இன்னும் அதிகமாக்கி வீட்டில் கொண்டுவந்து சேர்க்கவேண்டும்.

மனசில் இவையே தன் கடமை என்று அவனுக்குப் பட்டது; அப்படியே அவன் செய்யவும் ஆரம்பித்தான். ஒரு திட்டமான கொள்கையைக் கடைப்பிடித்து அதன்படி நடப்பவன் அவன்.

வீட்டைவிட்டு வெளிச் சென்றன வெல்லாம் சிறிது சிறிதாக மீண்டும் வந்து சேரத் தொடங்கின. தன் தந்தை சொற்பமாகத் தானம் செய்திருந்த இடத்திலும் அதை நிறுத்திவிட்டான். தானே தர்மம் நடத்தின போதிலும் அது நிரந்தரமானதாக இராதபடி பார்த்துக் கொண்டான்.

கிருஷ்ணகோபால் பாபு, காசியிலிருந்தபடியே கடித மூலம் தம் பழைய குடிகளின் முறையீட்டை அறிந்து அவர்கள் இடும் ஓலத்தையும் கேட்டார். சிலர் அவரிடம் நேரில் சென்றுகூட அவர் காலில் விழுந்து

அழுதார்கள். அவர் விபின்விஹாரிக்கு ஒரு கடிதம் எழுதினார். அவன் செய்வது தவறு என்று அதில் குறிப்பிட்டிருந்தார். அதற்கு விபின் எழுதிய பதில் இதுதான்:

"முன்னே தானம் செய்ததற்கு ஏற்றபடி வரவும் இருந்தது. அப்போது ஜமீன்தாரும் குடிகளும் ஒருவருக்கொருவர் உதவியா யிருந்தார்கள். இப்போதோ புதிய புதிய சட்டம் அமுலுக்கு வந்துவிட்டதால் நியாயமான தீர்வையைத் தவிர மற்றவித வரும்படியெல்லாம் நின்றுவிட்டன. அதோடு, இந்தக் காலத்திலோ, வரி வசூலிப்பதைத் தவிர இன்னும் பல கௌரவ வேலைகளையும் ஜமீன்தார் ஏற்றுக்கொள்ளவேண்டியிருக்கிறது. ஆகையால், இந்த நாளில் நியாயமாகக் கிடைக்கும் வரும்படி விஷயத்தில் சற்றுக் கறாராகக் கண்ணோட்டம் செலுத்தாவிட்டால் என்ன பிரயோஜனம்? இப்போதோ குடிகளும் அதிகமாக ஒன்றும் கொடுத்துவிடப் போவதில்லை; அவர்களுக்கு அதிகமாகக் கொடுக்கவும் என்னால் முடியாது. கொடுக்கல் வாங்கலோடு எங்கள் சம்பந்தம் சரியாகிவிடுகிறது. எல்லாவற்றையும் இப்படியே தானத்துக்கு விட்டுவிட்டால் நாம் திவாலாக வேண்டியதுதான்; சொத்து அழிவதோடு கௌரவமும் போய் விடும்."

"காலம் தலைகீழாக மாறிப் போய்விட்டது. இந்தக் காலத்துப் பசங்கள் அதற்கேற்றபடி நடந்து கொள்கிறார்கள். அந்தக் காலத்துக் கேற்றாப்போல் நடந்தால் இப்போது ஒன்றும் செல்லாது. நான் இங்கே எங்கோ தூரத்தில் உட்கார்ந்துகொண்டு இதில் தலையிட்டேனானால் அவர்கள், 'அப்படியானால் உன் சொத்தை நீயே கவனித்துக் கொள்; எங்களால் முடியாது' என்று சொல்லிவிடுவார்கள். நமக்கென்ன வந்தது! ஏதோ இந்தக் கடைசிக் காலத்தை, கிருஷ்ண ராமா என்று கழித்துவிட்டுப் போனால் நம் பாடு தீர்ந்தது !" என்று எண்ணினார் கிருஷ்ணகோபால் பாபு.

## 2

இவ்விதம் ஜமீன்காரியம் நடந்துகொண் டிருந்தது. அநேகம் வழக்கு, வியாஜ்யம் தொடுத்து எல்லாவற்றையும் ஒருவாறாகத் தன் மனசுக்குப் பிடித்த விதத்தில் முடித்துக் கொண்டான் விபின்.

அநேகமாக எல்லோரும் பயந்துபோய் அவனுக்கு அடங்கி ஒடுங்கி நடக்கும் குடிகளாய் விட்டார்கள். ஆனால் மிர்ஜா பிபியின் மகன் அசிமத் என்பவனை மட்டும் அசைக்க முடியவில்லை.

'பிராம்மணர்களுக்கு மானியம் விட்டதிலாவது ஏதோ அர்த்தம் இருக்கிறது. இந்தத் துலுக்கப்பயல், தீர்வை வரி ஒன்றும் இல்லாமல் நம் அப்பா சொத்தை அநுபவிக்க வேண்டிய காரணம் என்ன? ஒரு சாமானியத் துலுக்க விதவையின் பிள்ளை இவன்! கிராமப் பள்ளிக்கூடத்தில் துட்டு இல்லாமல் ஏதோ இரண்டு எழுதப் படிக்கக் கற்றுக் கொண்டுவிட்டான். இதற்கே தலைக் கிறுக்கு அதிகமாகி யாரையும் மதிக்க மாட்டேன் என்கிறான்' என்று விபின் விஹாரிக்கு அவன்மேல்தான் அதிகக் கோபம்.

பல காலமாக ஜமீனில் வேலை பார்த்துவந்தவர்களிட மிருந்து, "பெரிய எஜமான் நாளிலிருந்தே இவர்களுக்கு இந்தச் சலுகை உண்டு. ஆனாலும் இதற்கு என்ன காரணமோ தெரியாது. ஒருவேளை இவள் அநாதை யாகையால் தன் துக்கத்தைச் சொல்லி அழுதிருக்க லாம். அதனால் பெரியவர் மனசு இளகி இருக்கும்" என்று தெரிய வந்தது.

ஆனால் இவர்கள் விஷயத்தில் அவர் பெரிய மனசு பண்ணினது சிறிதும் ஏற்றதாகப் படவில்லை விபினுக்கு. அதோடு இவர்கள் முன்னே தரித்திர நிலையில் இருந்து அவன் பார்த்ததில்லை. இப்போது செல்வச் செருக்குடன் மிகவும் டம்பமாக இருப்பதைப் பார்த்து விபின், 'நம் தகப்பனார் அதிகக் கோழை மனசுள்ளவர். அவர் கண்ணில் பொடி தூவிவிட்டு இவர்கள் அவர் சொத்தில் ஒரு பங்கை அபகரித்துக்கொண் டிருக்கவேண்டும்' என்று எண்ணினான்.

அசிமத் எதற்கும் துணிந்த இளங்காளை. "உயிர் போனாலும்போகட்டும். எங்கள் உரிமையை இம்மியளவும் விட்டுக் கொடுக்க மாட்டேன்" என்றான் அவன். இப்படி இருதரத்தாருக்கும் சச்சரவு மூண்டது.

அசிமத்தின் விதவைத் தாய், "அப்பா, ஜமீன் தாரோடு சண்டை போட்டு ஒரு பலனும் இல்லை. இத்தனை நாள் யார் தயவில் வாழ்ந்தோமோ அவரை நம்பித்தான் உயிர் வாழ வேண்டும்; ஜமீன்தார் சொல்வதுபோல் கொஞ்சம் விட்டுக் கொடுக்க வேண்டியதுதான்" என்று தன் மகனுக்கு அடிக்கடி புத்தி சொன்னாள்.

அசிமத், "அம்மா, உனக்கு இந்த விஷயமெல்லாம் ஒன்றும் தெரியாது" என்றான்.

ஒவ்வொரு வழக்காக அவன் தோற்றுக்கொண்டே வந்தான். ஆனால் தோல்வி ஏற்பட ஏற்பட அவன் பிடிவாதம் அதிமாகிக்கொண்டுதான் வந்தது. தன்னுடைய வாழ்க்கை உரிமையை நிலைநாட்ட அவன் தன் சொத்து முழுவதையுங்கூடப் பணயம் வைக்கத் துணிந்து விட்டான்.

மிர்ஜா பிபி ஒரு நாள் சாயந்தரம் தங்கள் தோட்டத்துக் காய்கறி வகையில் கொஞ்சம் எடுத்துக்கொண்டு யாருக்கும் தெரியாமல் விபினைக் காண வந்தாள். கிழவி, அன்னையின் அன்பு கனியும் பார்வையுடன் அவனைப் பருகி விடுவதுபோல் நோக்கி, "எங்க அப்பன் அல்லவா நீ! ஆண்டவன் உன்னை நல்லா வைக்கணும். என் மகன் அசிமை அதோகதி ஆக்காதே! உனக்கு இது தருமமா? அவனை உன் கையில் ஒப்பித்துவிடுகிறேன். அருமையாக வளர்க்கிற உன் இளைய தம்பிபோல் அவனை எண்ணிக் கொள்; உன்னுடைய சொத்தோ அளவற்றது; அதில் பிடி அளவு இவன் எடுத்துக் கொண்டானே என்று முகம் சிணுங்காதே, அப்பனே!" என்று மொழிந்தாள்.

வயசானவள் என்று உரிமை கொண்டாடிக்கொண்டு அவள் பேச வந்ததைக் கண்டு விபின் மிகவும் வெறுப் படைந்தான். அவன், "நீயோ பெண்பிள்ளை; இந்த ஸமாசாரமெல்லாம் உனக்கு ஒன்றும் விளங்காது. ஏதானாலும் சொல்ல வேண்டுமானால் உன் மகனை இங்கே அனுப்பிவை" என்றான்.

தன் வீட்டுப் பிள்ளையிடமிருந்தும் சரி, பிறர் வீட்டுப் பிள்ளையிடமிருந்தும் சரி அவளுக்குக் கிடைத்தது, "உனக்கு விஷயம் ஒன்றும் தெரியாது" என்ற இந்த ஒரே பதில்தான். ஆண்டவன் பெயரைச் சொல்லிக்கொண்டே கண்ணை அடிக்கடி துடைத்தவண்ணம் அவள் தன் வீட்டிற்குத் திரும்பிப் போனாள்.

### 3

கிரிமினல் கோர்ட்டிலிருந்து ஸிவில் கோர்ட்டு, அங்கிருந்து ஜில்லா கோர்ட்டு, அதிலிருந்து ஹைகோர்ட்டு வரையில் வியாஜ்யம் நடந்தது. ஓர் ஒன்றரைவருஷ காலம் இப்படிக் கழிந்தது. கடன்பளு மென்னியைப் பிடித்து

இருக்க ஆரம்பித்த சமயத்தில் அப்பீல் கோர்ட்டில் அவன் பக்கம் ஏதோ சிறிது ஜயம் ஏற்பட்டது.

ஆனால், கரையிலிருந்த புலிவாயிலிருந்து தப்பி ஜலத்தி லிருக்கும் முதலை வாயில் சிக்குவதுபோல் ஆகிவிட்டது அவன் நிலைமை. கடன் கொடுத்தவர்கள் சமயம் பார்த்துக் கோர்ட்டில் டிக்ரி வாங்கிக் கொண்டார்கள். அசிமத்துக்கு இருந்த கொஞ்ச நஞ்சம் சொத்தையும் ஏலம் போடும் தினம் நெருங்கிவிட்டது.

அன்று திங்கட்கிழமை; சந்தை கூடும் நாள். ஒரு சிற்றாற்றங்கரையில் சந்தை கூடியது. மழைக்கால மாதலால் ஆறு நிறைய ஜலம். படகிலே சிறிது வியா பாரம் நடந்தது; கரையிலே கொஞ்சம் நடந்தது. அந்த ஆடிமாசத்தில் விற்பனைக்கு வந்திருந்தவற்றுள் பலாப் பழமும் மீனுந்தான் விசேஷம். மப்பும் மந்தாரமுமாக இருந் தது. வியாபாரிகள் பலர், மழை வருமோ என்று அஞ்சி மூங்கில் கொம்புகளை மேலே பரப்பி அதன்மேல் கோணி இணி போட்டு மூடியிருந்தார்கள்.

அசிமத்தும் வியாபாரம் செய்யத்தான் வந்திருந்தான். ஆனால் அவன் கையில் பைசாக்கூட இல்லை. இப்போ தெல்லாம் அவனுக்கு யாரும் கடனாக ஒன்றும் கொடுப்ப தில்லை. அவன் ஒரு கட்டாரியையும் பித்தளைத் தட்டையும் அடகு வைக்க எடுத்து வந்திருந்தான்.

விபின் சாயந்தரமாகச் சற்றுக் காற்று வாங்கிவிட்டு வர வெளியில் கிளம்பியிருந்தான். அவனுக்குத் துணையாகத் தடியும் கையுமாய் இரண்டு மூன்று ஆட்கள் வந்திருந் தார்கள். சந்தை இரைச்சல் பலமாகக் கேட்கவே அவன் அதைப் பார்க்கத் திரும்பினான்.

சந்தையில் நுழைந்ததும் வாசலில் இருந்த கலு என்பவனோடு அவன் இதுவரையில் நடத்தின வியா பாரத்தைப்பற்றி வேடிக்கையாக விசாரித்துக்கொண் டிருந்தான். அப்போது அசிமத், கட்டாரியைக் கையில் ஏந்திக்கொண்டு புலிபோல் உறுமி விபினை நோக்கி வேக மாகப் பாய்ந்தான். சந்தையில் இருந்தவர்கள் அவனைப் பாதி வழியிலேயே மடக்கி உடனே நிராயுதபாணியாக்கிப் போலிஸ் வசமயில் ஒப்பித்துவிட்டார்கள். மறுபடியும் பழையபடி வியாபாரம் நடக்கத் தொடங்கியது.

நடந்த விஷயம் விபினுக்குக் கவலையை உண்டு பண்ணியது; அவன் அதோடு திருப்தி அடையவில்லை. வேட்டைதேடிவந்த நம்மையே விலங்கு மடக்கினால் அதன்

திமிரையும் கொழுப்பையும் என்னவென்று சொல்வது? நமக்கு வரும் ஆத்திரத்தை அடக்க முடியாது அல்லவா? 'இருக்கட்டும், இருக்கட்டும். இந்தச் சோதாப் பயலுக்கு ஏற்ற தண்டனை விதிக்க ஏற்பாடு செய்கிறேன்' என்று குமுறினான் விபின்.

விபின் வீட்டுப் பெண்களெல்லாரும் அன்று நடந்த சமாசாரத்தைக் கேட்டு நடுநடுங்கினார்கள். எல்லோரும், "அடியம்மா! எப்படிப்பட்ட காவாலிப் பயலடி அவன்!" என்று அசிமை வைதார்கள். அவனுக்கு உரிய தண்டனை கிடைக்கும் என்று தெரிந்ததும் 'அப்பாடா' என்று பெரு மூச்சு விட்டார்கள்.

ஆனால் அன்று இரவு அந்த முகம்மதிய விதவையின் வீட்டில் அடுப்பு எரியவில்லை. அவள் மகன் அங்கே இல்லை; செத்த வீடுபோல் அது இருளடைந்து வெறிச்சென்று இருந்தது. ஊரிலே அன்று நடந்த விஷயங்களை மறந்து விட்டு எல்லோரும் சாப்பிட்டார்கள்; படுக்கப் போனார்கள்; நன்றாகத் தூங்கவும் தூங்கினார்கள். ஆனால் ஒரு கிழவியின் கண்ணுக்குமட்டும் உலகத்தில் எல்லாவற்றையும்விட இந்த விஷயந்தான் பிரமாதமாகத் தோற்றியது; அவளுடைய கவலையில் பங்கெடுத்துக்கொண்டு அதற்கு ஈடு கொடுக்க இந்த உலகத்தில் எவரும் இல்லை. விளக்கு இல்லாத அந்தக் குடிசை மூலையில் எலும்புந் தோலுமாக அந்த ஒரு கிழ ஆத்மாமட்டும் குன்றிப் பயந்து கிடந்தது.

4

இது நடந்து மூன்று தினங்கள் ஆகிவிட்டன. மறு நாள் டெபுடி மாஜிஸ்டிரேட் முன்பு விசாரணை. விபின் சாக்ஷிக்கு அழைக்கப்பட்டான். இதுவரையில் எந்த ஜமீன் தாரும் சாக்ஷிக் கூண்டில் நின்றதில்லை; ஆனால் விபின் அப்படி வந்து நிற்பதற்கு யாதொரு தடையும் சொல்ல வில்லை.

மறுநாள் வழக்கு ஆரம்பிக்கும் சமயம் தலைப்பாகை, கடிகாரச் சங்கிலி எல்லாம் அணிந்துகொண்டு பல்லக்கில் ஏறி ஆடம்பரத்துடன் விபின் கச்சேரிக்கு வந்து சேர்ந்தான். டெபுடி மாஜிஸ்டிரேட் மிகுந்த மரியாதை யுடன் தமக்கருகிலுள்ள ஆசனத்தில் அவனுக்கு இடங் கொடுத்தார். அன்று கச்சேரியில் இடங் கொள்ளவில்லை கூட்டம். இவ்வளவு பெரிய வழக்கு அங்கே நடந்து நெடுநாட்கள் ஆகின்றன.

வழக்கு விசாரணை தொடங்க இன்னும் சிறிது நேரந்தான் இருக்கும்; அப்போது ஒரு சேவகன் வந்து காதோடு காதாக விபினிடம் ஏதோ சொன்னான். விபின் திடுக்கிட்டுப் போய் முக்கிய அலுவல் ஒன்று இருக்கிறது என்று சொல்லி வெளியே வந்தான்.

அங்கே வந்து பார்த்தபோது, சிறிது தூரத்தில் ஓர் ஆலமரத்தடியில் அவன் கிழத்தந்தை நின்றிருந்தார். அவர் காலில் ஒன்றும் போட்டுக்கொள்ளவில்லை. உடம்பில் நாமாவளி எழுதிய அங்க வஸ்திரம்; கையில் துளசி மாலை. அவரது வற்றிய மேனி சங்கென ஒளிர்ந்தது. அவர் நெற்றியிலிருந்து சாந்தமும் கருணையும் கலந்து சுற்றிலும் பரவி நின்றன.

விபின், கோட்டும் ஜிப்பாவும் இறுக்கிப் பிடிக்கும் நிஜாரும் உடுத்திருந்ததால் மிகச் சிரமப்பட்டு அவரை நமஸ்கரித்தான். தலைப்பாகை சரிந்து மூக்கண்டை வந்து விட்டது; கடிகாரம் ஜேபியிலிருந்து நழுவி வெளியில் வந்துவிட்டது. இவற்றை அவசரம் அவசரமாகச் சரிப் படுத்திக்கொண்டு, அவரை அருகில் இருந்த வக்கீல் வீட்டிற்கு வரும்படி கேட்டுக்கொண்டான்.

கிருஷ்ணகோபால் பாபு, "வேண்டாம்; சொல்ல வேண்டியதை இங்கேயே சொல்லிவிடுகிறேன்" என்றார்.

வேடிக்கை பார்க்க அங்கே கூடியவர்களைத் தூரத்தில் போகும்படி விபினுடைய ஆட்கள் அதட்டினார்கள்.

**கிருஷ்ணகோபால் பாபு:** அசிமை விடுதலை செய்ய ஏற்பாடு செய்; அவனிடமிருந்து பிடுங்கிக்கொண்டதைத் திருப்பிக் கொடுத்துவிடு.

விபின் ஆச்சரியம் அடைந்து, "இதற்காகவா நீங்கள் காசியிலிருந்து இவ்வளவுதூரம் வந்தீர்கள்? இவர்கள் விஷயத்தில்மட்டும் நீங்கள் இவ்வளவு அக்கறை காட்டுவானேன்?" என்று கேட்டான்.

**கிருஷ்ணகோபால் பாபு:** அதை அறிந்து உனக்கு ஒன்றும் ஆகப்போவதில்லை, அப்பனே.

விபின் அதோடு விடவில்லை; "தகுதியற்ற பலபேரிடமிருந்து இம்மாதிரித் திரும்ப வாங்கிக்கொண்டிருக்கிறேன். அவர்களில் அநேகம் பேர் பிராம்மணர்கள்; அப்படியிருந்தும் தாங்கள் அந்த வியவகாரங்களில் தலையிடவே

யில்லை. இப்போதோ இந்தத் துலுக்கப் பையனுக்காகப் பரிந்துகொண்டு வருகிறீர் ! விஷயம் என்னவோ இவ்வளவு தூரத்திற்கு வந்துவிட்டது. சரி; அசிமை விடுதலை செய்யச் சொல்லி அவன் சொத்தையும் திருப்பிக் கொடுத்து விடுகிறேன்; ஆனாலும் ஊர் வாயை மூடி விடமுடியுமா? சொல்லும்'' என்றான்.

கிருஷ்ணகோபால் பாபு சிறிதுநேரம் சும்மா இருந்தார். பிறகு விரல்கள் நடுங்கத் துளசி மாலையை உருட்டிக்கொண்டே, குரலில் சற்று நடுக்கம் தோன்ற, "ஊராருக்கு எல்லாவற்றையும் ஒளிக்காமல் சொல்வதா யிருந்தால் சொல்லிக் கொள்: அசிம் உன் தம்பி; என் பிள்ளைதான்'' என்றார்.

விபின் திடுக்கிட்டுப் போய், "அந்தத் துலுக்கச்சி வயிற்றில் பிறந்த பிள்ளையா?'' என்றான்.

கிருஷ்ணகோபால் பாபு: ஆமாண்டாப்பா!

விபின் நெடுநேரம் அப்படியே நின்றிருந்தான். பிறகு, "அதெல்லாம் அப்புறம் ஆகட்டும். நீங்கள் வீட்டுக்கு வாருங்கள்'' என்றான்.

கிருஷ்ண கோபால் பாபு, "இல்லை; நான் மறுபடியும் வீடு திரும்ப மாட்டேன். இப்போதே இங்கிருந்து புறப் பட்டுவிட்டேன். உனக்கு எது சரியென்று படுகிறதோ அதைச் செய்'' என்று சொல்லி அவனை ஆசீர்வதித்து விட்டு, கண்ணீரைச் சமாளித்துக்கொள்ளச் சிறிது தடுமாற்றத்துடன் திரும்பிச் சென்றார்.

விபினுக்கு என்ன சொல்வது, செய்வது என்று ஒன்றும் தோன்றவில்லை. மௌனமாக நின்றிருந்தான். ஆனால் அவன் மனசில் மட்டும், அந்தக் காலத்து ஆசார அநுஷ்டானம் எல்லாம் இவ்வளவுதான் போல் இருக் கிறது என்று ஓர் எண்ணம் எழுந்தது. படிப்பிலாகட்டும், நடத்தையிலாகட்டும், தன் தந்தையைவிடத் தான் எவ்வளவோ மேல் என்று அவனுக்குப் பட்டது. 'திட்ட மான ஒரு கொள்கை இராததால் ஏற்பட்ட விபரீதம் இது!' என்ற முடிவுக்கு வந்தான்.

கச்சேரிக்குத் திரும்பினான். உதடு ஒட்டி உலர்ந்து வெளுத்திருக்க, கண்ணிலிருந்து நெருப்புப் பொறி பறக்க, அசிம் இரண்டு சேவகர்களின் கையில் கைதியாக வெளியில் நிற்பதைக் கண்டான் விபின். அழுக்கடைந்த ஒரு கந்தலைக் கட்டியிருந்தான் அசிம்—அவன் விபினின் தம்பி!

டெபுடி மாஜிஸ்டிரேட்டுடன் விபினுக்கு நெருங்கிய நட்பு உண்டு. ஏதோ ஒருவிதமாக வழக்கு அதோடு குழப்பி மெழுகப்பட்டது. அசிமும் சில தினங்களுக்குள்ளாகவே பழையபடி ஆகிவிட்டான். ஆனல் இதெல்லாம் எந்தக் காரணத்தால் என்று அவனுக்கும் விளங்கவில்லை; மற்றவர் களும் புரியாமல் விழித்தார்கள்.

வழக்கின்போது கிருஷ்ணகோபால் பாபு வந்திருந்த செய்தி பரவுவதற்கு அதிக நேரம் பிடிக்கவில்லை. பலரும் பலவிதமாகப் பேசிக் கொண்டார்கள்.

சூக்ஷ்மபுத்தியுள்ள வக்கீல்களோ, சங்கதி என்ன வென்பதை ஊகித்துக் கொண்டார்கள். வக்கீல் ராம தாரணைக் கிருஷ்ணகோபால் பாபு தம் செலவில் படிக்க வைத்து முன்னுக்குக் கொண்டு வந்திருந்தார். ‘இவர் இப்படிப் பரோபகாரமாய் ஏன் நடந்து கொள்ள வேண்டும்?’ என்று அவனுக்கு அடிக்கடி சந்தேகம் தோன்றுவதுண்டு. ‘துருவித் துருவிப் பார்த்தால், ஸாது ஸாது என்பவர்கள் குட்டு வெளியாகி விடும். என்னதான் ஜபமாலை உருட்டட்டும், உலகத்திலே எல்லோரும் நம்மைப் போலத்தான். ஸாதுக்கள் கபடிகள்; துஷ்டர்களோ கள்ளங்கவடற்றவர்கள்: இதுதான் இரண்டு பேருக்கும் இடையேயுள்ள வித்தியாசம். எதுவாக இருந்தாலென்ன, கிருஷ்ணகோபால் பாபுவின் தர்மசிந்தனை யெல்லாம் வெறும் புருடா’ என்று அவனுக்கு இன்றுதான் பட்டது. இதுவரையில் விளங்காதிருந்த ஒரு புதிருக்கு இத்தனை நாள் கழித்து விடை கிடைத்துவிட்டது. அதோடு, எக் காரணத்தாலோ, அவரிடத்தில் நன்றி செலுத்தவேண்டிய பாரமும் தலையிலிருந்து நீங்கினமாதிரி இருந்தது அவனுக்கு. இப்போதுதான் அவனுக்கு நிம்மதி ஏற்பட்டது.

# ஏமாற்றம்

நிலக்கும் வாலுக்குமோ, ராகுவுக்கும் கேதுவுக்குமோ பரஸ்பர விரோதம் ஏற்பட்டால் எப்படி இருக்கும்?– அப்படி இருந்தது ஹால்தார் குடும்பத்துச் சங்கதியும். புராதனமான அந்தக் குடும்பம் இரண்டாகப் பிரிந்து விட்டது. பாகம் பிரித்துக்கொண்டு, தங்கள் பெரிய வீட்டுக்கு நடுவே ஒரு சுவர் எழுப்பிக் கொண்டார்கள்; முகாவலோகனம் இல்லை.

நவகோபாலனுடைய பிள்ளை நளினனும், நனீ கோபாலன் மகன் நந்தனும் ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவர்கள்; ஒரே வயசு; ஒரே பள்ளிக்கூடத்தில் படிப்பவர்கள்; குடும்பத் தகராறு விஷயத்திலும் சரி, போட்டி பொறாமையிலும் சரி, இரண்டுபேரும் ஒருவருக் கொருவர் சளைத்தவர்கள் அல்ல.

நளினனுடைய தந்தை முரட்டு ஆசாமி. பிள்ளைக்கு மூச்சுவிடக்கூட அவகாசம் தரமாட்டான்; பையன் சதா படித்துக்கொண்டே இருக்கவேண்டும்; விளையாடுவது, சாப்பிடுவது, நல்ல ஆடை உடுத்துவது இவையெல்லாம் முக்கியமல்ல; பாட புஸ்தகமும் கையுமாகப் பையன் கிடக்கவேண்டும்.

நந்தனுடைய தகப்பனோ இந்த விஷயத்தில் மிகவும் தாராள மனசுள்ளவன். தாய் ஒழுங்காக ஆடை உடுத்து அவனைப் பள்ளிக்கூடத்துக்கு அனுப்புவாள். மத்தியான்னம் சிற்றுண்டிக்கும் ஒரு மூன்றணுக் கொடுப்பாள். நந்தன் வறுத்த பொரி, ஐஸ் கிரீம், பம்பரம், கோலிக்குண்டு இவைகளை வாங்கித் தாராளமாக விநியோகம் செய்து பெயரெடுத்தான்.

'அவனுக்கு நாம் தாழ்ந்துவிட்டோமே!' என்று மனசுக்குள்ளே நளினன் குமுறுவான். 'நந்தனுடைய அப்பா நம் அப்பாவாகவும், நம் அப்பா நளினன் அப்பாவாகவும் இருக்கக் கூடாதா? அப்போது இந்த நந்தனுக்கு ஆட்டம் காட்டுவேனே!' என்று எண்ணுவான்.

ஆனால் அப்படிப்பட்ட அரிய சந்தர்ப்பம் கிடைக்கு முன்னரே நந்தன் வருஷந்தோறும் பள்ளிக்கூடத்தில் பரிசு வாங்க ஆரம்பித்துவிட்டான்; நளினன் வெறுங்கையோடு வீட்டுக்கு வந்து பள்ளிக்கூட அதிகாரிகள் பேரில் குறை கூறுவான். இதனால் நளினன் தந்தை அவனை வேறு ஒரு பள்ளிக்கூடத்தில் கொண்டு சேர்த்தான்; வீட்டில் புது உபாத்தியாயர் ஒருவரைப் பையனுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்க ஏற்பாடு செய்தான். தான் தூங்குகிற நேரத்தைக் குறைத்துக்கொண்டு, அந்த ஒரு மணி காலம் பையன் படிக்கும்போது அவனை மேற்பார்வை இடுவான். அப்படி இருந்தும் ஒரு பலனும் காணவில்லை. நந்தன் பரீக்ஷைகளில் தேறிக்கொண்டே பி. ஏ., க்கு வந்து விட்டான்; ஆனால் நளினனோ அடிக்கடி தேருமல் பிரவேச வகுப்பு வரையில் வந்து பொறியில் அகப்பட்டு மீள முடியாமல் தத்தளிக்கும் எலிபோல அதிலேயே நின்றுவிட்டான்.

இந்தச் சமயத்தில் அவன் தகப்பன் பையன் விஷயத்தில் மனம் இளகியோ என்னவோ சட்டென்று இறந்து விட்டான். மூன்று வருஷகாலம் தப்ப வழியின்றி இருந்து விட்டு ஒருவிதமாகப் பிரவேச வகுப்பிலிருந்து விடுபட்டான் நளினன். இப்போது அவன் யதேச்சையாக மோதிரம், பித்தான், கடிகாரச் சங்கிலி எல்லாம் மேனியில் ஒளிர, நந்தனை எல்லார் கண்ணெதிரிலும் மங்கும்படிச் செய்ய வேண்டுமென்று பார்த்தான். பிரவேச வகுப்பில் பல்டி, குண்டாகர்ணம் எல்லாம் போட்டுவிட்டு இப்போது பி.ஏ., வகுப்பு என்ற ஒற்றைக் குதிரை பூட்டிய வண்டியில் நிதானமாகச் சவாரி பண்ணிக்கொண் டிருந்தான்; ஆனாலும் சர்வகலாசாலைப் பட்டத்தை எட்டிப் பிடிக்க முடியவில்லை.

இதற்குள் நளினன், நந்தன் இவர்கள் இரண்டு பேருக்கும் வீட்டில் பெண் தேடிக்கொண் டிருந்தார்கள். தான் கல்யாணம் செய்துகொள்ளும் பெண் அபூர்வ ரம்பையாக இருக்க வேண்டும், அந்த ஸம்பந்தத்தையும் அவள் அழகையும் பார்த்து நந்தன் தலை குனிய வேண்டும் என்று நளினன் தீர்மானித்துக்கொண்டான்.

அதிகமாய் நூற்று நூற்றுப் பார்த்தால் ஒன்றும் கிட்டாது போய்விடுவது உலகத்தில் சகஜந்தானே! சட்டுப்பட்டென்று ஏதோ ஒரு பெண்ணைப் பிடித்து முடிபோட்டுக் கொள்ள நளினன் விரும்பவில்லை. பின்னால் ஒரு வேளை இன்னும் நல்ல இடமாக வந்து தான் ஏமாந்து

நிற்க, வேறு எவனுக்காவது அந்த அதிருஷ்டம் அடித்து விட்டால் என்ன செய்வது?

கடைசியாக ராவல்பிண்டியில் வசிக்கும் ஒரு வங்காளி பாபுவுக்கு அதிரூபவதியான பெண் ஒருத்தி இருக்கிறாள் என்ற செய்தி கிடைத்தது. கிட்ட இருக்கும் அரம்பையரை விடத் தூரத்து அணங்குகள்மேல்தான் எப்போதும் நாட்டம் அதிகம் செல்லும். நளினன் உடனே பெண் வீட்டாருக்கு வழிச் செலவுக்குப் பணம் அனுப்பினான். பெண்ணைக் கல்கத்தாவிற்கு அழைத்து வந்தார்கள். அவள் நல்ல அழகிதான். "இருந்தாலும் இப்படிக் கூப்பிட்ட நாழிகைக்கு ராவல்பிண்டியை விட்டு வந்துவிடுவதென்றால் ...ஸமாசாரம் எனக்கு விளங்கவில்லை...அதோடு முன் பின் பார்த்தவர்கள் யாராவது, 'நாங்கள் அப்போதே பார்த்த பெண்தான் இவள்; சரிப்படவில்லை என்று ஸம்பந்தம் பண்ணவில்லை' என்று சொல்வார்களோ என்னவோ?"— இப்படித் தனக்குள்ளேயே எண்ணிக் கொண்டான் நளினன்.

கல்யாணப் பேச்சு ஒருவாறு தீர்ந்தது. லக்கின பத்திரிகை வைக்க ஏற்பாடு நடந்துகொண் டிருந்தது. இப்படி இருக்கும் போது, ஒரு நாள் காலை நனி கோபாலன் வீட்டிலிருந்து பூவேலை செய்த தட்டில் பலவித வரிசைகளை எடுத்துக்கொண்டு அவர்கள் வீட்டு வேலைக் காரர்கள் எங்கோ புறப்பட்டுப் போனார்கள்.

**நளினன்:** (ஆள்காரனைப் பார்த்து) அடேடே! இதோ வந்து பாருடா! அவர்கள் வீட்டில் என்னடா விசேஷம்?

நந்தனுக்கு நிச்சயம் செய்திருந்த பெண் வீட்டிற்கு லக்கின பத்திரிகை வைக்கத்தான் இந்தத் தடபுட லெல்லாம் என்று தெரிய வந்தது.

இதைக் கேட்டவுடன் நளினன் திகைத்துப் போய் ஹுக்காப் பிடிப்பதை நிறுத்தி, "போய் முழு ஸமாசாரத் தையும் அறிந்து கொண்டு வா!" என்று ஆளை அனுப்பினான்.

விபின் என்ற அந்த ஆளும் அப்போதே ஒரு வண்டியை வாடகைக்கு அமர்த்திக்கொண்டு மட மட வென்று அவர்கள் பின்னால் புறப்பட்டு விட்டான். திரும்பி வந்து, "கல்கத்தா பெண்தான். ஆனாலும் ஜோரான பெண்" என்றான்.

நளினனுக்கு இருதயம் நின்று விடும்போல் ஆகி விட்டது. அவன், "என்ன? என்ன சொன்னாய்?" என்றான்.

ஆள், "ஜோரான பெண்" என்று மட்டும் சொன்னான்.

**நளினன்:** அப்படியானால் இந்தப் பெண்ணைத்தான் பார்க்கவேண்டும்.

"இது இல்லாது நடக்குமா?" என்று சொல்லிச் சுட்டு விரலையும் கட்டைவிரலையும் சேர்த்து ரூபாயைத் தட்டுவது போல் அபிநயித்து, கற்பனையாக ஒரு தொகையைக் குறித்தான் ஆள்.

ஒரு சுப வேளையில் நளினன் இந்தப் பெண்ணைப் போய்ப் பார்த்தான். 'நந்தனுக்கு இவளை நிச்சயித்திருக்கிறார்கள்' என்று எண்ண எண்ண 'ராவல்பிண்டிப் பெண்ணைவிட இவள் அதிக அழகாயிருக்கிறாள்' என்று பட்டது நளினனுக்கு. இப்படித் தர்மசங்கடத்தில், அகப்பட்டுக்கொண்டு, அவன் ஆளைப் பார்த்து, "எப்படி?" என்றான்.

**ஆள்:** சாமி! எங்கள் கண்ணுக்கு நல்லாத்தான் இருக்கிறது.

**நளினன்:** அவள் நன்றாயிருக்கிறாளா? இவள் நன்றாயிருக்கிறாளா? அதைச் சொல்லடா.

**ஆள்:** இந்த இடந்தான் நல்லது.

நளினனுக்கு இந்தப் பெண்ணின் கண்ணிதழ் அந்தப் பெண்ணினுடையதைவிடப் பின்னும் நேர்த்தியாக இருப்பதாக அப்போது தோன்றிற்று. 'அவள் இவளைவிட அதிக வெளுப்புத்தான்; என்றாலும் சற்றுப் பசுமை கலந்த பொன்மேனி இவளுடையது. இவளைக் கை நழுவ விடக் கூடாது' என்று எண்ணினான்.

இன்னது செய்வது என்று தெரியாமல் தத்தளித்தான் நளினன். ஹுக்காப் புகையை இழுத்துக்கொண்டே, "ஏண்டா, என்ன பண்ணுவது? சொல்லேன்" என்றான்.

ஆள், "இது இல்லாது முடியுமா?" என்று சொல்லி மறுபடியும் சுட்டு விரலையும் கட்டை விரலையும் சேர்த்து ரூபாயைத் தட்டுவதுபோல் அபிநயித்துக் கற்பனையாக ஒரு தொகையைக் குறித்தான்.

வாஸ்தவமாகவே அவ்வளவு தொகையும் டங்டங் என்று கையில் ஏறியதும் எண்ணிய காரியம் சித்தியாவதற்கு அதிகநேரம் பிடிக்கவில்லை. பெண்ணின் தகப்பன் ஏதோ அநாவசியமான ஒரு சாக்கைக்கொண்டு வரனுடைய தந்தையோடு சண்டைபோட ஆரம்பித்து விட்டான். நந்தனுடைய தந்தை, "உன் பெண்ணுக்கு என் பிள்ளையைக் கொடுத்தேனானால் பார்; நான்—" என்று என்னவெல்லாமோ எடுத்தான்.

பெண்ணின் தந்தை அதற்குமேல் உரத்த குரலில், "உன் பிள்ளைக்கு என் பெண்ணைக் கொடுத்தேனானால் பார்; நான்—" என்று பதிலுக்கு ஏதோ சொன்னான்.

அப்புறம் சிறிது கூட நாழிகையாக்காமல் நளினன் நந்தனுக்குப் பூச்சி காட்டிவிட்டுச் சுப லக்கினத்தில் விவாகத்தை முடித்துக்கொண்டான். சிரித்துக்கொண்டே அவன் தன் ஆளைப் பார்த்து, "இதுதான் பி. ஏ., பாஸ் பண்ணின லக்ஷணம்! என்னடா சொல்கிறாய்? இந்தப் பரீக்ஷையிலே அந்த வீட்டு எஜமான் தவறிவிட்டார் பார்த்தாயா?" என்று சொல்லிக்கொண்டான்.

சில தினங்களுக்குள்ளாகவே ஒரு நாள் நவகோபாலன் வீட்டிலும் மேள சப்தம் கேட்டது. நந்தனுக்குக் கல்யாணம்.

நளினன், "அடே! பெண் யார் என்று பார்த்து வா!" என்று ஆளை அனுப்பினான்.

அவன் போய்வந்து, "அந்த ராவல்பிண்டிப் பெண் தான்" என்று தெரிவித்தான்.

"ராவல்பிண்டிப் பெண்ணா! ஹா ஹா ஹா!" என்று நளினன் உரக்கச் சிரித்தான்; "அந்த வீட்டு ஐயாவுக்கு வேறு பெண் கிடைக்கவில்லைபோல் இருக்கிறது! நாம் வேண்டாமென்று கழித்துவிட்ட பெண்ணைத்தான் கல்யாணம் பண்ணிக்கொள்கிறான்!" என்றான். ஆள்காரனும் கூட நகைத்தான்.

ஆனால் அதற்குமேல் நளினனுக்குச் சிரிக்க உற்சாகம் இல்லை. ஏதோ ஒன்று புழுவைப்போல் அவன் மனசைத் துளைக்கத் தொடங்கியது. ஒரு சிறிய சந்தேகம் தோன்றி அவன் காதோடு காதாக, "ஆஹா! கைதவறிப் போயிற்றே! கடைசியாக நந்தனுக்கு அந்த அதிருஷ்டம் வாய்த்ததே!" என்று அவனை இடித்துக் காட்டியது. அது கொஞ்சம் கொஞ்சமாக ரத்தம் உறிஞ்சும் அட்டைபோல்

பெரிதாகிக்கொண்டே வந்து இன்னும் உரக்க, "இனி எந்த விதத்திலும் இவளை அடைய உன்னல் முடியாது. உண்மையில் இவளே அழகி. நன்ருக ஏமாந்துபோனுய்!" என்று கூறுவதுபோல் இருந்தது.

பின்கட்டிற்கு நளினன் சாப்பிடப் போனுன். அப்போது அவன் மனைவியிடம் காணப்பட்ட சிறு குறைகள் கூடப் பெருந்தவறுகளாக அவனுக்குத் தோன்றின. தனக்கு வாய்த்தது பொருத்தமற்ற விபரீதமான சம்பந்தம் என்று அவனுக்குப் பட்டது. ராவல்பிண்டிப் பெண்ணேடு சம்பந்தம் செய்து கொள்ளப் பேச்சு நடந்தபோது அவனுக்கு அவள் போட்டோ ஒன்று கிடைத்திருந்தது. அதை அவன் இப்போது வெளியில் எடுத்துப் பார்த்தான். "ஆஹா! என்ன அபூர்வ ரூபலாவண்யம்! இப்படிப்பட்ட லக்ஷ்மி வலிய வந்தும் உதறித் தள்ளினேனே! நான் எப்பேர்ப்பட்ட கழுதை!" என்று தன்னையே நொந்து கொண்டான்.

முகூர்த்த தினத்தன்று அஸ்தமனமானதும், விளக்கு வெளிச்சத்தில் வாத்தியங்கள் முழங்க, கோச்சு வண்டியில் ஏறி மணமகன் நந்தன் புறப்பட்டான். நளினன் படுத்த படி ஹுக்கா குடித்துக்கொண்டிருந்தான். இதனுல் மனக் கவலை ஒருவாறு நீங்குமென்று பார்த்தும் பிரயோஜனம் இல்லை. அப்போது ஆள்காரன் விபின் மலர்ந்த முகத்துடன் அங்கே வந்து, மணமகனைப் பார்த்து ஏதோ விளையாட்டாகச் சொல்ல வாயெடுத்தான்.

அதே சமயம் நளினன், "தர்வான்!" என்று வாயிற் காப்போனை அழைத்தான்.

அவன் குரலைக் கேட்டு விபினுக்குத் தூக்கி வாரிப் போட்டது. அவன் காவலாளைக் கூப்பிட்டான். நளினன் அவனுக்கு விபினைக் காட்டி ஹிந்துஸ்தானியில், "இப்போதே காதைத் திருகி இவனை வெளியே பிடித்துத் தள்ளு" என்று உத்தரவிட்டான்.

## "இடம் இருக்கிறது"

எனக்கு வயசு இருபத்தேழுதான். வருஷக் கணக்கிலாவது அபார குணத்திலாவது எனது வாழ்க்கை உயர்வானதல்ல. ஆனாலும் அதற்குச் சற்று மதிப்பு உண்டு. மலர்போல் மெல்லிய ஓர் உள்ளத்தை நோக்கி வண்டு பறந்துவர, அது கால் வைத்த விளைவு அம்மலர் அகாலத்தில் பக்குவமான கனியாக மாறியது.

அந்தக் கதையின் விஷயம் மிகவும் சிறியது. அதைச் சுருக்கமாகவே எழுதுவேன். சிறியதாகையால் சாதாரணமானதென்று தவருன எண்ணம் கொள்ளாதவர்களே அதன் சுவையை உணர்வார்கள்.

கல்லூரியில் படித்துத் தேர்ச்சிபெற வேண்டிய பரீக்ஷைகள் யாவற்றிலும் தேறிவிட்டேன். சிறு பிள்ளையாக இருக்கும்பொழுது என் அழகிய முகத்தைச் சிமூல புஷ்பத்தோடும், கள்ளாப் பழத்தோடும் ஒப்பிட்டு எங்கள் உபாத்தியாயர் வேடிக்கையாகக் கூறுவார். அது எனக்கு அதிக லஜ்ஜையாக இருக்கும். வயசு ஆக ஆக, "மறுபிறப்பிலும் (அப்படி ஒன்று இருக்கும் பக்ஷத்தில்) என் அழகான முகமும் வாத்தியார் அதைக் கேலியாக வர்ணிப்பதும் திரும்பி வருமா ?" என்று சில சமயம் நினைத்துக் கொள்வேன்.

என் தந்தை ஒரு சமயம் பரம ஏழை. பின்னுல் வக்கீல் தொழிலில் ஏராளமான பணம் சம்பாதித்தார். ஆனுல் அதை அநுபவிக்கக் கொடுத்து வைக்கவில்லை. உயிர் விடும்போதுதான் அவருக்கு ஒழிவு ஏற்பட்டது.

எனக்கு அப்போது வயசு மிகவும் குறைவு. அம்மாவின் கையில் வளர்ந்து மனிதனுனேன். தான் எளிய குடும்பத்துப் பெண், நாங்கள் பணக்காரர் என்பதை அவள் மறக்கவில்லை; நானும் அதை மறக்காமல் இருக்கும்படிச் செய்தாள். குழந்தைப் பருவம் தொட்டு என்னைத் தரையில் விடாமலே எடுத்து வளர்த்தார்கள். அதனுலேயே கடைசி வரையில் நான் அரைகுறையாக நிற்கிறேன். என்னை இன்றைத் தேதிக்குப் பார்த்தால்கூடப் பார்வதியின்

மடியில் வீற்றிருக்கும் செல்வப் பிள்ளையாகத் தோன்றும் உங்களுக்கு.

எனக்கு முக்கிய வாரிசுதார் என் மாமாவே. அவர் என்னைவிட ஆறேழு வருஷம் பெரியவராக இருப்பார். ஆனால் புதை மணலைப்போல் எங்களுடைய குடும்பத்தைத் தம்முள்ளே இழுத்துக்கொண்டு விட்டார். அவர் அறியாமல் எதுவுமே நடக்காது. இக்காரணத்தால், எதன்பேரிலும் எனக்கு அக்கறையே விழவில்லை.

பெண்ணைப் பெற்றவர்கள்மட்டும் நான் நல்ல பிள்ளையென்பதை அறிவார்கள். கெட்ட பழக்கம் எதுவுமே என்னை அணுகவில்லை. பெரிய மனிதனுகை வேஷம் போடும் பிரமேயமும் இல்லை. உண்மையில், பெருந்தன்மை என்னிடத்தில் இருந்தது. தாயின் கட்டளைப்படி நடக்க எனக்கு ஆற்றல் உண்டு. அந்தப்புரத்திற்கு அடங்கிச் செல்லும்படியே என்னைத் தயாரித்துவிட்டார்கள். அப்படிச் சுயமாக வரனைத் தேடும் கன்னிகை யாராவது இருந்தால் எனக்குள்ள இந்தச் சிறந்த லக்ஷணத்தைக் கவனத்தில் வைத்துக்கொள்ளட்டும்.

பெரிய இடங்களிலிருந்து சம்பந்தத்திற்குப் பெண்கள் வந்தனர். ஆனால் மாமா இருக்கிறாரே, இந்த உலகத்தில் என்னுடைய பாக்கிய தசைக்கு அவர் பிரதான ஏஜெண்டானபடியால், விவாக சம்பந்தத்தைப்பற்றித் தனியான அபிப்பிராயங்கள் உடையவர். பணக்காரவீட்டுப் பெண்ணென்றால் அவருக்குப் பிடிக்காது. அகத்துக்கு வருகிற நாட்டுப்பெண் குனிந்த தலையுடன் வரவேண்டும் என்பார். ஆனால் பெண்ணின் ரூபத்தைப்பற்றி அவருக்குள்ள ஆசை அவர் எலும்புவரையில் ஊறியிருந்தது. ஏமாந்தவரையில் பணத்தைக் கறந்துகொள்ள வேண்டும்; அதைக் கொடுக்கும் பெண்ணைப் பெற்றவன்மட்டும் முகத்தைச் சுளித்துக் கொள்ளக்கூடாது; இதுதான் அவர் அபிப்பிராயம்.

என்னுடைய நண்பன் ஹரிசனுக்குக் கான்பூரில் வேலை. லீவுக்காக அவன் கல்கத்தாவுக்கு வந்திருந்தபோது என் மனசைக் கிளறிவிட்டான். "அடே! பெண் என்றால் அந்தமாதிரிக் குட்டி கிடைக்கவேணும்!" என்றான்.

நான் எம். ஏ., பரீக்ஷையில் தேர்ச்சிபெற்றுச் சில நாட்களே ஆயின. எனக்கு ஓய்வு நேரம் யதேஷ்டமாக இருந்தது. பரீக்ஷையின் கவலை இல்லை. எதையாவது

சாதிக்க வேண்டும் என்ற ஊக்கமும் இல்லை; வேலை இல்லை; எதன் மேலும் இச்சை இல்லை. எனக்கு இருந்தவர்களெல்லாரும் உள்ளே ஓர் அம்மாவும் வெளியே ஒரு மாமாவுமே.

அளவற்ற அவகாசமென்னும் பாலையின் நடுவில் என் உள்ளம் பெண்களின் உருவம் என்னும் கானல் நீரையே பார்த்து மயங்கி நின்றது. ஆகாயத்தில் அவர்களுடைய கருவிழிகள் தோன்றின; காற்றில் அவர்கள் விடும் மூச்சை உணர்ந்தேன்; இலைகளின் ஓசையில் அவர்களுடைய ரகசியப் பேச்சைக் கேட்டேன்.

இந்த நிலையில் ஹரிசன் வந்து, "பெண்ணென்றால் அப்படி இருக்கவேண்டும்" என்று சொல்லும்போது என் மனம், வஸந்தமாருதம் அணைந்த மகிழந்தளிரைப் போல் துடிதுடித்தது. ஒளியும் நிழலும் புனைந்து இன்பக் கனவு கண்டது என் மனம். ஹரிசன் ரஸிகன்; எதையும் சுவையோடு வர்ணிக்கும் சக்தி அவனுக்கு உண்டு. அவன் அந்தப் பெண்ணைப்பற்றிப் பேசப் பேச எனக்கு அதிக வேட்கை மூண்டது. "இதை மாமாவிடம் மெல்ல விட்டுப் பாரேன்" என்றேன் ஹரிசனோடு. வளையக் கட்டுவதில் அவனுக்கு யாரும் இணையே இல்லை. அவனுக்கு எங்கேயும் நல்ல பேர். அவன் அகப்பட்டுவிட்டால் அவனை விடவேமாட்டார் மாமா. என்னுடைய விவாகத்தைப் பற்றி வார்த்தை வந்தது. பெண்ணைக் காட்டிலும் பெண்ணின் தகப்பனுரே அவருக்கு முக்கியம். ஒரு காலத்தில் அவர்கள் வீட்டில் லக்ஷ்மி தாண்டவம் ஆடினுளாம்; இப்பொழுது அவ்வளவு இல்லையாம். தம் ஊரில் பழைய வம்ச கௌரவத்துடன் வாழமுடியாதெனக் கண்டு அவர் மேற்குப் பிரதேசத்தில் வீடுவாசல் அமைத்துக்கொண்டு எளிய வாழ்க்கையையே நடத்துகிறாராம். ஒரே பெண்ணைத் தவிர வேறே பிள்ளைகுட்டி இல்லையாம். அதனால் மீதியுள்ள ஆஸ்தி சட்டெனக் கரைவதற்கு ஹேது இல்லை.

எல்லாம் நன்றாகத்தான் இருக்கிறது. பெண்ணுக்குப் பதினைந்தாவது பிராயமென்று கேட்டவுடன் மாமாவுக்குச் சப்பிட்டுவிட்டது. வம்சத்தில் ஏதாவது தோஷம் இருக்குமோ? அதுவும் இல்லை. தேடிப் பார்த்தும் தகுந்த வரன் கிடைக்கவில்லையாம். இப்போது கல்யாணச் சந்தையில் பிள்ளைகள் கிடைப்பதே குதிரைக் கொம்பாய் இருக்கிறது; அதற்குமேல் வரதக்ஷிணை. இவற்றையெல்லாம் உத்தேசித்துப் பெண்ணின் தகப்பனுர் கல்

யாணத்தை ஆறப்போட்டுவிட்டார். ஆனல் பெண்ணின் வயசு நில்லென்ருல் நிற்குமா?

ஏதுவானுல் என்ன? ஹரிசன் பேச்சுப் பேசிக் காரியத்தைச் சாதிப்பதில் கெட்டிக்காரன். மாமாவை வழிக்குக் கொண்டுவந்துவிட்டான். விவாகத்தின் பூர்வாங்கங்கள் யாவும் தடையின்றி நடந்தேறின. கல்கத்தாவைத் தவிர உலகத்திலுள்ள மற்ற எல்லா இடமும் அந்தமான் தீவைச் சேர்ந்தவையென்பது மாமாவின் எண்ணம். வாழ்வில் ஒரு தடவை ஏதோ காரியமாகக் கோன்நகர்வரை அவர் போயிருந்தார். மாமா மட்டும் மனுவாய் இருந்திருந்தால் ஹாவ்ரா பாலத்தைக் கடப்பதே சாஸ்திரத்துக்கு விரோதமென்று எழுதிவிட்டிருப்பார். என் கண்ணுலேயே பெண்ணைப் பார்த்துவிட்டு வரவேண்டுமென்று எனக்கு ஆவல். அதை வெளியிட எனக்குத் தைரியம் இல்லை. பெண்ணைப் பார்த்துவிட்டு வரவேண்டுமென்ற சம்பிரதாயத்துக்காகப் பினு அண்ணவை அனுப்பினர்கள். அவனுடைய திறமையிலும், அவன் சொல்லிலும் எனக்கு நம்பிக்கை உண்டு. பினு அண்ண திரும்பி வந்ததும், "சுமாராக இருக்குமென்று நினைத்தேன். பத்தரைமாற்றுத் தங்கந்தான்!" என்ருன். பினு அண்ண எதையும் மிகைப்படுத்திக் கூறவே மாட்டான். ஒன்றை நாம், "முதல்தரம்" என்ருல் அவன், "என்னவோ இருக்கிறது ஒரு மாதிரியாக" என்பான். அவனே இப்படிச் சொல்லும்போது முடிபோடும் பிரம்மாவுக்கும், மயிலை எழுப்பும் மாரவேளுக்கும் இடையே முரண் ஒன்றும் இராமல் காரியம் முடிவது என் அதிருஷ்டமென்றே கருதினேன்.

* * * *

விவாக சுபமுகூர்த்தத்திற்குப் பெண்வீட்டாரே கல்கத்தாவுக்கு வந்தார்களென்று கூறவேண்டியதில்லை. பெண்ணின் தகப்பனுரான சம்புநாத பாபு, ஹரிசனின் வார்த்தையை நம்பினுரென்பதற்கு அத்தாட்சியாக, அவர் விவாகத்திற்குச் சில தினங்களுக்கு முன்பு என்னை நேரே வந்து பார்த்துவிட்டுத் திருப்தியுடன் சென்ருர். கிட்டத்தட்ட அவருக்கு வயசு நாற்பது இருக்கும். தலைமயிர் நரைக்கவில்லை. மீசையில் மட்டும் நரை தென்பட்டது. கண்ணுக்கு நன்ருக இருந்தார். ஒரு கூட்டத்தின் நடுவில் பார்த்தால் அவருடைய கம்பீரமான தோற்றம் தனியே எடுப்பாகத் தெரியும். அவருக்கு என்னைப் பிடித்திருக்குமென்று நம்புகிறேன். ஆயினும் அதை அறிவதுதான்

சற்றுக் கடினம். ஏனென்றால் அவர் வாயே திறவாத மனிதர். அவர் சொல்லும் இரண்டொரு வார்த்தையைக்கூட அழுத்திச் சொல்வதில்லை. ஆனால் மாமாவின் வாயில் வளவளவென்று பேச்சுப் பொரிந்துகொண்டிருந்தது. பணத்திலாகட்டும், கௌரவத்திலாகட்டும், இந்தப் பெரிய நகரில் தமக்கு நிகரானவர் எவரும் இல்லை என்பதை ஸம்பந்திவீட்டாருக்கு நினைவுறுத்திக்கொண்டேயிருந்தார். சம்புநாத பாபு அந்தச் சம்பாஷணையில் கலந்து கொள்ளவே இல்லை. "உம்" என்றுகூட எப்போதாவது மறந்துபோய்ச் சொல்லவில்லை. மாமா பேசச் சளைக்கவே இல்லை. சம்புநாத பாபு கப்சிப்பென்று இருப்பதைக் கவனித்து, உணர்ச்சி இல்லாத ஆசாமியாக இருக்கிறானே என்று மாமா எண்ணினார். பெண்ணைக் கொடுப்பவர்களிடத்தில் எந்தக் குறை இருந்தாலும் பாதகமில்லை, உணர்ச்சியோடு இருப்பதுதான் பெருங்குற்றமாகும். அது இராதுபோகவே மாமாவுக்கு மனத்துள் சந்தோஷமே. சம்புநாத பாபு எழுந்து போகும்போது, மாமா சுருக்கமாய் மாடியில் இருந்தபடியே அவருக்கு விடை கொடுத்தாரே தவிர வாசல்வரையில் வந்து வழியனுப்பவே இல்லை.

வரதக்ஷிணை விஷயம் இருதரத்தாருக்கும் மனஸ்தாபம் இல்லாமல் இனிது நிறைவேறியது. இந்தமாதிரி விஷயங்களில் மாமா தம் சாமர்த்தியத்தைத் தாமே மெச்சிக் கொள்வது வழக்கம். அவர் பேசினால் எதிரில் பேசுபவன் முன்னுக்கேறச் சிறிதுகூட இடம் இராது. பணம் எவ்வளவென்று ஸ்திரமாகிவிட்டது. அதற்குமேல் பெண்ணுக்கு என்ன என்ன நகைகள் போடுவார்கள், எத்தனைச் சவரனில் வளையல்கள், வெள்ளிப்பாத்திரங்கள் எவ்வளவு ரூபாய் எடையில், இந்தக் கணக்கு வழக்கெல்லாம் தீர்ந்ததோ இல்லையோ எனக்குத் தெரியாது. இவை விவாகத்தின் முக்கிய அம்சங்கள் என்பதைமட்டும் அறிவேன். மாமா ஒன்றையும் விடமாட்டார்; அவர் மிகவும் பக்காப் பேர்வழி என்று எங்கள் குடும்பத்தார் சிலாகித்தனர். எங்களுக்கு அளவற்ற பொருள்கள் இருந்தாலும், சம்பந்திக்கு மேலும் செய்வதற்குச் சக்தியில்லையென்று தெரிந்தும் கடைசி வரையில் வாட்டி எடுத்துவிடுவார். பிடித்தால் குரங்குப் பிடிதான்.

எனக்குப் 'பச்சை பூசுதல்'* தடபுடலாய் நடத்தினர். அவர் எடுத்த சீரை மதிப்பிட முடியாது; வரிசையைத்

---

* காயே ஹாலுத்; அம்மான் பொங்கல் போன்றது.

தூக்கிய ஆட்களைக் கணக்கிடவே ஓர் ஆளைப் போட வேண்டும். "சம்பந்தி வீட்டார் இதையெல்லாம் பார்த்து வெட்கிப் போகவேண்டியே செய்தோம்" என்று சொல்லும்போது அம்மாவும் மாமாவுடன் கலந்துகொண்டு நகைத்தாள்.

பாண்டு வாத்தியம், மேளம் இவற்றின் ஆரவாரமும் ஜனசந்தடியும் சேர்ந்து மதம்பிடித்த யானைக் கூட்டம் தாமரைப்பூ நிரம்பிய தடாகத்தை அலைத்துக் குழப்புவது போல் இருந்தது. இந்தத் தடபுடல்கள் புடைசூழ விவாக விடுதிக்கு விஜயம் செய்தேன். மோதிரங்கள், மாலைகள், ஜரிகை ஜாலர்கள் இவற்றால், நடந்து செல்லும் என் சரீரம் ஒரு நகைக் கடையாகவே காட்சி அளித்திருக்கும். மாப்பிள்ளையாக வரப்போகிறவன் எவ்வளவு தாங்குவான் என்பதை ஸம்பந்திகளுக்கு நிரூபிக்கவா இந்தக் கூத்து?

கல்யாண வீட்டில் நுழைந்தவுடன் மாமாவின் முகம் வாட்டமுற்றது. பிள்ளை வீட்டார் எல்லோரும் அமருவதற்குப் போதுமான வசதி இல்லை. அதற்குமேல், ஏற்பாடெல்லாம் நடுத்தரமாகத்தான் இருந்தன. சம்புநாதபாபு ஸம்பந்திகளை நன்றாக வரவேற்கவில்லையாம். அவர் வாயைத் திறக்கவே இல்லை. கச்சை இழுத்துக் கட்டிக்கொண்டு, கத்திக் கத்திக் குரல் கம்மிப்போய், நடுத்தலை வழுக்கையாகி, கரியைவிடக் கறுப்பாய்ப் பிரம்மாண்டமான தேகமுடைய அவருடைய நண்பர் கைகுவித்து வணங்கிச் சிரித்த முகத்துடன் வினயமாக, மேளகாரன் முதல் ஸம்பந்தி வரையில் எல்லாருக்கும் மரியாதை செய்து உபசரிக்காமல் இருந்திருந்தால், ஆரம்பத்திலேயே எல்லாம் விரஸமாக முடிந்திருக்கும்.

மணப்பந்தலில் நான் உட்கார்ந்த சிறிது நேரத்திற்கெல்லாம் மாமா சம்புநாத பாபுவைத் தனியாக அழைத்து என்னவோ பேசினார். சம்புநாத பாபு என்னிடம் வந்து, "அப்பா, இந்தப் பக்கம் வர முடியுமா?" என்றார்.

விஷயம் இதுதான்: உலகத்தில் ஒவ்வொருவருக்கும் ஏதாவது லக்ஷ்யம் இராமற் போகாது. மாமாவின் ஒரே லக்ஷ்யம் எந்த விஷயத்திலும் ஏமாந்து போகாமல் இருப்பது. ஸம்பந்தி, பொன்னால் ஆன நகை என்று சொல்லிக் கில்டு நகையைப் போட்டிருந்தால் என்ன செய்வது? விவாக முடிச்சு ஏறிவிட்டால், அப்புறம் சண்டை போடுவதில் சுகமில்லை. இதற்காகவே எங்களுக்குத் தெரிந்த நகை வியாபாரி ஒருவரை அழைத்து

வந்திருந்தார். அடுத்த அறையில் மாமாவும் அந்த நகை வியாபாரியும் தராசு, உரைகல் யாவற்றையும் சித்தமாக வைத்துக்கொண் டிருப்பதைக் கவனித்தேன்.

சம்புநாத பாபு என்னை நோக்கி, "உன் மாமா சொல்லு கிறார்: விவாகம் ஆரம்பிக்கு முன்பே நகைகளை யெல்லாம் காட்ட வேண்டுமாம். நீ என்ன சொல்லுகிறாய்?" என்றார்.

நான் என்ன சொல்லுவது? தலை குனிந்து கொண்டேன்.

"அவனைக் கேட்பானேன்? நான் சொல்லுகிறேன்" என்றார் மாமா.

சம்புநாத பாபு என் பக்கமாகத் திரும்பி, "அவர் சொல்லுகிறபடியே நடக்கவேண்டுமா? நீ சொல்லவேண் டியது ஒன்றும் இல்லையா?" என்றார்.

எனக்கு இந்த விஷயத்தில் ஓர் அதிகாரமும் இல்லை யென்பதைக் காட்டத் தலையை அசைத்தேன்.

"சரி, சற்று இருங்கள். குழந்தையின் உடம்பி லிருந்து நகை நட்டுக்களைக் கழற்றிக்கொண்டு வருகிறேன்" என்று கூறிவிட்டு அவர் உள்ளே சென்றார்.

மாமா என்னைப் பார்த்து, "அனுபா! இங்கே நீ இருக்க வேண்டியதில்லை. பந்தலில் போய் உட்கார்" என்றார்.

அப்போது சம்புநாத பாபு, "வேண்டாம், இங்கேயே இரு அப்பா" என்றார்.

பெரிய துவாலை முடிச்சிலிருந்து நகைகளை ஜமக் காளத்தின்மீது ஒவ்வொன்றாக எடுத்து வைத்தார். எல்லாம் பழைய மோஸ்தர் நகைகள்; தற்கால நாகரிக வேலைப்பாடு உள்ளவை அல்ல. எவ்வளவு தடிமனோ அவ்வளவு பளுவாக இருந்தன.

நகைப் பரிக்ஷகர் ஒவ்வொன்றையும் எடுத்து எடை போட்டு மதிப்பிட்டார். "அரக்குப்பொடி, மட்டப்பொன் இவற்றின் கலப்பே இல்லை. அசல் தங்கமென்பதில் கொஞ்சங்கூட ஸந்தேகமே இல்லை" என்று சொல்லிக் கொண்டு மகர முகம் வைத்த ஒரு கெட்டிக் கொலுசை மாதிரிக்கு நசுக்கிக் காண்பித்தார்.

மாமா தம் நோட்டுப் புஸ்தகங்களில் நகையின் வகைகளையும் அவற்றின் எடையையும் குறித்துக் கொண்டார். பின்னால் ஏதாவது கோளாறு நடந்தால் சரி பார்க்க இது மிகவும் உதவியாய் இருக்கும் அல்லவா? கணக்குப் போட்டதில் பெண் வீட்டார் சொன்னதற்கு அதிகப்படியாக நகைகளைப் போட்டிருந்தார்கள்.

மாமா வைரக் கடுக்கனை எடுத்து நகை வியாபாரியிடம் கொடுத்து, "இதையும் பார். 'இமிடேஷன்' ஏதாவது..........." என்று இழுத்தார்.

பூதக் கண்ணாடியின் மூலம் பார்த்துவிட்டுப் பரிக்ஷகர், "ஸ்வாமி, இதற்கென்ன சொட்டை! சீமைச் சரக்கு அல்லவா?" என்றார்.

மாமாவுக்கு எல்லாம் திருப்தியாகி விட்டது. என்னைப் பார்த்து, "போயேண்டா பந்தலுக்கு" என்றதும், "முகூர்த்தத்தை ஆரம்பிக்கலாமே, ஸம்பந்திவாள்" என்றார் சம்புநாத பாபுவை நோக்கி.

"வேண்டாம். முதலில் சாப்பாடு ஆகட்டும். இலை போட்டிருக்கிறது" என்றார் சம்புநாத பாபு.

"சாப்பாட்டிற்கு இப்போது என்ன அவசரம்? முகூர்த்தம் நடக்க வேண்டாமோ?" என்றார் மாமா.

"அதற்கென்ன அவசரம்? வாருங்கள் போகலாம்" என்றார் சம்புநாத பாபு.

வெளிக்கு ஒன்றும் அறியாதவரைப்போல் தோன்றினாலும், அவர் உள்ளழுத்தம் உடையவர் என்பது அப்போது தான் புரிந்தது. எழுந்திருக்காது வேறு என்ன செய்வது? பிள்ளை வீட்டாருக்கெல்லாம் ஸகல உபசாரத்துடனும் போஜனம் ஆயிற்று. எல்லோரும் சாப்பிட்ட பிறகு சம்புநாதபாபு என்னையும் ஓர் இலையில் உட்கார வைத்தார். மாமா அதைப் பார்த்து, "என்ன, முகூர்த்தம் இன்னும் நடக்கவில்லையே? விரதத்தோடு இருப்பவனாயிற்றே, அவன் எப்படிச் சாப்பிடுவான்?" என்றார்.

மாமாவின் சொல்லுக்குக் குறுக்கே நடப்பது என்னவோ என்னால் முடியாத காரியம். நான் சாப்பிடவில்லை.

அப்போது சம்புநாத பாபு மாமாவிடம், "ஸ்வாமி, உங்களுக்கு மிகவும் தொந்தரவு கொடுத்து விட்டேன். நாங்கள் பணம் படைத்தவர்கள் அல்ல. உங்களுக்கு

ஏற்றபடி மரியாதை செய்யச் சக்தி அற்றவன் நான். மன்னிக்கவேண்டும். நாழி யாகிவிட்டது. இன்னும் உங்க ளுக்கெல்லாம் கஷ்டம் கொடுக்க எனக்கு இஷ்டமில்லை. நமஸ்காரம். இப்போது—" என்றார் நிதானமாகவே.

"நாங்களெல்லாரும் தயாராகத்தானே இருக்கிறோம்? ...........ஆரம்பிக்கலாமே" என்றார் மாமா.

"—ஆனால் போய் வண்டி ஏற்பாடு பண்ணிவிட்டு வருகிறேன்" என்றார் சம்புநாத பாபு.

"தமாஷ் பண்ணுகிறீர்களா என்ன?" என்றார் மாமா; அவருக்குச் சிறிது சிறிதாகக் கோபம் ஏறியது.

"இதுவரையில் தாங்களே தமாஷ் பண்ணினீர்கள்" என்றார் சம்புநாத பாபு.

மாமாவின் முகம் பெரிதாகி விட்டது ; வாயடைத்து நின்றார்.

"சொந்தப் பெண்ணுக்குப் போட்ட நகையில் சூது இருக்குமோ வென்று சந்தேகிக்கும் ஒரு குடும்பத்தாருக்கு என் ஒரே குழந்தையைப் பறிகொடுக்க நான் தயாராக இல்லை, ஸ்வாமி" என்றார் சம்புநாத பாபு.

அதற்குமேல் அங்கே என்ன நடந்ததென்பதை உரைக்க எனக்குப் பிடிக்கவில்லை. லஸ்தர் குளோப்கள், வாழைமரம், பந்தற்கால்கள் யாவும் எகிறின. தக்ஷ யக்ஞத்தில் மூண்ட அமர்க்களத்தைப் பிள்ளை வீட்டார் அங்கே நடத்திவிட்டு வெளியே வந்தனர். நான் தனியாக வீடு திரும்பும்போது மேளதாளம் ஒன்றுமே கோஷிக்க வில்லை. தீவட்டி விளக்கெல்லாம் ஆகாயத்தில் மினு மினுக்கும் நக்ஷத்திரங்களை ஏளனம் செய்துவிட்டு இருக்கிற இடம் தெரியாமல் அணைந்து இருளில் மறைந்தன.

* * * *

வீட்டில் எல்லோரும் கொதித்துக்கொண் டிருந்தார் கள். "பெண்ணைப் பெற்றவனுக்கா அவ்வளவு திமிர்? கலிகாலம் அல்லவா? பார்க்கலாம்! அவன் பெண்ணை வேறு இடத்தில் எப்படிக் கட்டிக் கொடுக்கிறான்?" என்றனர் யாவரும். பெண்ணுக்குக் கல்யாணமாகாது போனால், சனி விட்டதென்று இருக்கும் மனிதனுக்கு இந்த மிரட்டல் எம்மாத்திரம்?

இந்த வங்காள தேசமுழுவதும் நான் ஒருவனே விவாக தினத்தன்று பெண்ணைப் பெற்றவரால் தள்ளப்பட்டவன்.

மேளங்கள் கொட்டி மணக்கோலம் பூண்டும் எனக்கு நேர்ந்த இந்த அவமானத்திற்குக் காரணம் ஏதாவது கெட்ட கிரகத்தின் சேஷ்டையாகத்தான் இருக்க வேண்டும் என்று ஊகித்தார்கள்.

மானநஷ்டத்திற்குப் போவதாக மாமா எகிறிக் குதிக்கத் தொடங்கினர். ஆனல் அவர் மீசையை முறுக்கி விட்டுக்கொண்டதுதான் மிச்சம்.

என் மனத்துள் ஏமாற்றமும் அவமானமும் உண்டாயின. கலங்கிய இந்தச் சிந்தனையின் ஓட்டத்திற்குப் பக்கத்தில் மற்றொன்று தெளிந்து சென்றுகொண்டிருந்தது. என் அந்தக்கரணம், நான் கண்ணால் பார்த்தறியாத அவளையே நாடியது. இன்றளவும் என்னல் அவளை என்னிடம் அழைத்துக்கொள்ள முடியவில்லை.

தூணின் மறைவில் நின்றுகொண் டிருப்பாள் அவள். பிரகாசமான நெற்றியில் அழகான குங்குமப் பொட்டு. உடலில் அருணவர்ணமான கூறைப் புடைவை. நாணத்தினல் சிவந்த முகம். அவள் இருதயத்தில் என்ன வேதனை உண்டாயிற்றோ யார் அறிவார்? என் மானஸ லோகத்தில் உலவும் அந்தக் கற்பகக்கொடி, தன் பூவின் ஐசுவரியத்தை எனக்கு அளித்துவிட்டுத் தரையில் புரண்டு கிடந்தது. அதன் மணம் இன்னும் வீசுகிறது; அதன் தளிரின் மெல்லொலி இன்னும் என் செவியில் ஒலிக்கிறது. இந்த இன்பக் கனவிலிருந்து ஓர் அடி முன் வைத்தால் உண்மை எதிரே நிற்கிறது. அந்த ஆனந்தவல்லி என்னிடமிருந்து எவ்வளவோ தொலைவில் போய்விட்டாள்.

ஒவ்வொரு நாளும் சாயங்தரம், பினு அண்ணாவிடம் சென்று அவனை முடுக்கிக்கொண்டே இருந்தேன். பினு அண்ணாவின் வர்ணனைகள் யாவும் அளவுக்கு மேல் போகாததால் அவை நெருப்புப் பொறிகளைப்போல் என் உள்ளத்தைப் பற்ற வைத்துவிட்டன. பெண் ஆச்சரியமான அழகுடையவளென்று சொல்லக் கேட்டிருந்தேனே தவிர, அவளை நேரிலாவது, படத்தின்மூலமாகவாவது நான் கண்டதே இல்லை. எனக்கு எல்லாம் மங்கலாக இருந்தது. புறத்தில் அவளைக் காண்பது அரிது; அகத்துள் அவளைப் போல் பாவித்துக்கொள்ள முடியவில்லை. இந்தத் திண்டாட்டத்தில் சிக்கி என் மனம் எந்த நிலைக்கும் வராமல் பேய்போல் அலையத் தொடங்கியது.

என்னுடைய போட்டோவை அந்தப் பெண் பார்த்தாளென்ற சமாசாரம் ஹரிசன் மூலமாகத் தெரியவந்தது.

அவளுக்கு என்னைப் பிடித்துத்தான் இருக்கவேண்டும். என்னுடைய படத்தை அவள் மறைவாகத் தன் பெட்டியில் வைத்திருப்பாளென்று என் அசட்டுப் புத்திக்குத் தோற்றும். யாரும் இராத சமயமாகப் பார்த்துத் தனிமையில் அவள் அதை எடுத்துப் பார்ப்பாள். அவள் குனியும்போது அவளுடைய அலையும் கூந்தல் கொத்தாக அதன்மேல் படியும். யாரோ வரும் சப்தம் கேட்கவே பரபரவென்று சுகந்தம் கமழும் தன் மேலாடையில் அதை மூடிக்கொள்வாள்.

என் எண்ணங்களுக்கு ஒரு வரம்பில்லை. நாட்கள் சென்றன. ஒரு வருஷம் ஆயிற்று. மீண்டும் என்னிடம் விவாகப் பேச்சை எடுக்க மாமாவுக்கு மூஞ்சியே இல்லை. அம்மா மட்டும், ஊர் வம்பளப்பு ஓய்ந்ததும் இதைப்பற்றிப் பேச்சு எடுக்கலாம் என்றிருந்தாள்.

இந்தப் பக்கம் எனக்குக் கேள்வி என்னவென்றால், நல்ல இடம் ஒன்று வந்தபோது, பெண் தனக்கு விவாகமே வேண்டியதில்லை என்று ஒரே பிடிவாதமாய்ச் சொல்லி விட்டாளாம். இந்தச் செய்தியைக் கேட்டதும் என் மனம் துள்ளிக் குதித்தது. மனக்கண்முன் பார்த்தேன்: அவள் உணவை வெறுத்துவிட்டாள். கூந்தலை வாரிப் பின்னிக்கொள்வதில்லை. 'ஏன் இப்படி இவள் நாளுக்கு நாள் இளைத்துப் போகிறாள்?' என்று அவளுடைய தகப்பனார் விசாரப்படுகிறார். அவர் பார்க்கும்போதெல்லாம் அவள் கண்களில் நீர் தளும்புகிறது. 'உன் மனசில் என்ன வேதனை, அம்மா?' என்று அவர் வினவும்போது, அவள் கண்ணீரைத் துடைத்துக்கொண்டு, 'ஒன்றும் இல்லையே' என்கிறாள். பாவம்! ஒரே பெண் அவருக்கு. மிகவும் செல்வமாக வளர்த்தார். மழைத்துளி காணாது வதங்கும் பூவின் அரும்புபோல அவள் இவ்வாறு உருக்குலைவதைப் பார்த்தால் அவர் மனம் தாளுமா? அவர் மானத்தையும் லக்ஷியம் செய்யாமல் எங்களிடம் ஓடி வருகிறார். அதற்குமேல்—? அதற்குமேல் கலங்கி ஓடும் சித்தத்தில் ஒரு கருநாகம் சீறுகிறது. அவர் வருகிறார். அவர் வந்து என்னைப் பார்த்து, 'இது அழகா? மங்களகரமாக வந்து இப்படி மணவறையை அலங்கோலம் செய்து விட்டுப் போவது தர்மமா?' என்கிறார். இது என் கற்பனையின் வெண்மையான ஓட்டம். இப்போது அது அன்னத்தின் உருவுகொண்டு என்னிடம் வந்து, 'ஒரு சமயம் தமயந்தியைப் பூங்காவில் சந்தித்தேன். அவ்வாறே

என்னைத் தூது அனுப்பு; பிரிவாற்ருது சாம்பும் அந்தப் பெண்ணரசியிடம் நற்செய்தியை விடுக்கிறேன்' என்றது. அதற்குப் பின்? - துயர் இருள் விலகியது; புது மழை பெய்தது; வாடிய அப் பெண் மலர் முகம் தூக்கியது. அவளுடைய இருதயத்தைக் கொள்ளை கொண்டவன் ஒருவனே......பின்னர் என்ன?—என் மனச் சித்திரங்கள் மறைகின்றன.

ஆனால் நான் சொல்லவேண்டியது இதோடு முடிந்து விடவில்லை. எவ்விடத்தில் அது முடிவுருமல் நிற்கிறதோ, அவ்விடத்தில் நிகழ்ந்ததைக் கூறியதும் இந்தக் கதைக்கு முற்றுப்புள்ளி போட்டுவிடுகிறேன்.

* * * *

தீர்த்த யாத்திரை செய்ய அம்மா கிளம்பினுள். அவளுக்கு நான் துணையாகச் செல்லவேண்டி இருந்தது. ரெயில் வண்டியில் தூங்கிக்கொண்டிருந்தேன். வண்டி குலுங்கிக் குலுங்கிச் செல்லுகையில் தலைகால் இராத விசித்திரமான கனவுகள் வந்து போயின. திடீரென்று ஒரு ஸ்டேஷனில் தூக்கி வாரிப் போட்டுக்கொண்டு எழுந்தேன். தூக்க மயக்கத்தில் எல்லாம் குழம்பி உலகமே ஒளியும் நிழலும் கலந்த கனவுபோல் தோற் றியது. வானத்தில் சிரிக்கும் மீன்களே எனக்கு நித்திய அறிமுகமாய் இருந்தன. ஸ்டேஷனில் எரியும் விளக்குகள், பிளாட்பாரத்தில் செல்வோர் எல்லாம் சேர்ந்து வெகு தூரத்தில் நான் கண்டிராத ஓர் உலகில் ஸஞ்சரிப்பது போல் பிரமை ஏற்பட்டது. அம்மா தூங்கிக்கொண் டிருந்தாள். வண்டியில் எரியும் விளக்குப் பச்சைநிறத் திரை யிடப்பட்டது போலவும் சாமான், படுக்கை, பெட்டிகள் யாவும் தலைகீழாக இருப்பது போலவும் தோற்றின. தூக்கம் தெளியும் சமயம் என்முன் தோற்றிய ஓர் அற்புத உலகின் காட்சிகளாகும் இவை யாவும்.

அந்த ஆச்சரியமான உலகில், ஓர் அதிசயமான இரவிலே இனிமையான குரல் ஒன்று, "சீக்கிரம் வாயேன். அந்த வண்டியில் இடம் இருக்கிறது" என்று சொல்வது போல் கேட்டது.

மனித கண்டமா அல்லது தேவகண்டமாவென்று சந்தேகம் பிறந்தது. வங்கதேசத்துப் பெண்ணின் குரலில் வங்க மொழியானது அவ்வளவு மதுரமாகத் தொனித் ததை எனக்கு ஏற்பட்டதுபோன்ற இடம், பொருள்,

ஏவலில் கேட்டிருப்பீர்களானால் நீங்களுந்தான் திகைத்துப் போயிருப்பீர்கள்.

நெடுங்காலம் வரையில் குரலோசை ஒன்றுதான் அழியாமல் மனத்துள் பதிந்துவிடுகிறது. ஆனால் மனித னிடத்தில் அந்தரங்கமானதும், வர்ணிக்க முடியாததுமான ஒரு தன்மையை, எதிரொலிக்கச் செய்வது இக்கண்ட ஸ்வரமே. விரைவாக ஜன்னலைத் திறந்து வெளியே முகத்தை நீட்டிப் பார்த்தபோது யாரையுமே காணவில்லை. பிளாட்பாரத்தின் இருட்டில் நிற்கும் 'கார்டு' பச்சை விளக் கைக் காட்டினான். வண்டியும் நகர்ந்தது. ஜன்ன லண்டையே கிடந்தேன். என் கண் எந்த உருவத்தையும் காணவில்லை. ஆனால் உள்ளத்துள் மட்டும் வேறோர் இருதயத்தின் உருவைக் கண்டேன். தாரகைகள் சிதறிய கங்குலைப்போல் என் உள்ளத்தில் ஓர் உருவம் எழுந்தது; ஆனால் அதைப் பற்ற என்னால் முடியவில்லை. இன்னிசைக் குரலே! நான் கேட்டறியாத கண்டத் துவனியே, ஒரே கணத்தில் என் அந்தரங்கத்தில் குடிகொண்டு விட்டாயே! பரிபூர்ணமாய் என்னைக் கவர்ந்த விந்தை என்னே! நில்லாது ஓடும் காலப்பெருக்கில் முளைத்து அழகுற்ற மலரே! காலத்தின் அலை உன் இதழை அசைக்கவில்லையா? உன் மென்மை சற்றும் அதனால் நலிவுறவில்லையா?

ரெயில்வண்டி பல்வேறு ஜதிகளில் தாளங்களைப் போட்டுக்கொண்டே சென்றது. என் மனம் அதற்குத் தகுந்தாற்போல் பாட்டைப் பாடிக்கொண்டே இருந்தது. அதன் பல்லவிதான், "இடம் இருக்கிறது" என்பது. 'அவள் யாரோ?' 'அவள் யாரோ?' என்பது வெறும் பனித்திரை. அது ஒரு மாயை. அது விலகினால், யாரென்பது அறிமுகம் ஆகிவிடும்.—அமிர்தமயமான குரலே! என் இருதயத்தில் திகழும் உருவற்ற அழகே! என்றென்றும் எனக்கு அறிமுக மாகாது இருப்பாயா? "இடம் இருக்கிறது, இடம் இருக் கிறது. விரைந்து வா" என்று அழைக்கிறாயா? வந்துவிட் டேனே, இதோ தாமதம் செய்யாமல்!

அன்றிரவு எனக்குத் தூக்கம் வரவே இல்லை. ஒவ்வொரு ஸ்டேஷன் வரும்போதும் தலையை வெளியே விட்டுக் கவனித்தேன். ராத்திரியே ஏதாவது ஸ்டேஷனில் அவள் இறங்குவதாக இருந்தால் என்ன செய்வதென்று கதிகலங்கினேன்.

மறுநாள் ஒரு பெரிய ஜங்ஷனில் வண்டி மாறவேண்டி யிருந்தது. எங்களுக்கு முதல்வகுப்பு டிக்கட்டு இருந்தது.

வேறு வண்டியில் இடம் சுலபமாகக் கிடைக்கு மென்றே நம்பியிருந்தோம். இறங்கிப் பார்த்தபோது, பிளாட் பாரத்தில் மலையளவு 'ஸூட்கேஸ்'களை வைத்துக்கொண்டு வெள்ளைத் துரையின் பரிவாரமொன்று தயாராய்க் காத்திருந்தது. ஆஸாமி யாரோ ராணுவ உத்தியோகஸ் தனும். யாத்திரை செய்ய அந்த வண்டியில்தான் ஏறப் போகிறுனென்று தெரிந்தது. இரண்டு மூன்று நிமிஷங்கள் கழித்து நாங்கள் செல்லவேண்டிய வண்டித்தொடர் பிளாட்பாரத்திற்கு வந்தது. அம்மாவை அழைத்துக் கொண்டு எந்த இடத்தில் ஏறிக்கொள்வதென்று இந்தக் கோடிக்கும் அந்தக் கோடிக்கும் அலைந்தேன். முதல் வகுப்பைத் தன்னுடையதாக்கிக்கொண்டான் அந்தச் சீமைத்துரை. எல்லா வண்டியிலும் கூட்டம் தாங்க முடிய வில்லை. எதிலாவது ஏறித்தானே தொலையவேண்டுமென்று திரும்புகையில் இரண்டாம் வகுப்பிலிருந்து ஒரு பெண் மணி அம்மாவைப் பார்த்து, "இப்படி வந்து ஏறிக் கொள்ளுங்களேன். இங்கே இடம் இருக்கிறது" என்று கூப்பிட்டாள்.

எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. கொஞ்சும் அதே இன்னிசைக்குரல்! "இடம் இருக்கிறது" என்னும் அதே பாட்டின் அடி! தாமதம் செய்யாமல் அம்மாவுடன் அந்த வண்டியிலேயே ஏறிக்கொண்டேன். சாமான்களை எடுத்து வரக்கூட எனக்கு அவகாசம் இல்லை. என்னைப் போன்ற கையாலாகாதவன் உலகத்திலேயே அகப்பட மாட்டான். வண்டி புறப்பட்டுவிட்டது. அந்தப் பெண் மணி பரபரவென்று கூலியாளைக் கொண்டு என்னுடைய சாமான்களை உள்ளே இழுத்துப் போட்டாள். இந்த அவ சரத்தில் என்னுடைய 'காமிரா'வை ஸ்டேஷனில் விட்டு விட்டேன். அதைக்கூட நான் லக்ஷ்யம் செய்யவில்லை.

அதற்குமேல் என்ன செய்வதென்று தெரியவில்லை. என் மனத்துள் திகழும் ஓர் இன்பக் காட்சியை எங்கே ஆரம்பித்து எங்கே முடிப்பது? அதைச் சொற்களால் விவரிக்க எனக்கு இப்போது இஷ்டமில்லை. கடைசியில் அவ்வினிய குரலை நேரில் கேட்டேன்; கண்டேன். அப் போதும் அவளை ஒரு குரலோசையாகவே பாவித்தேன். அம்மாவை உற்று நோக்கினேன். அவளுடைய கண்கள் இமைக்கவே இல்லை. பெண்மணிக்கு வயசு பதினறு அல்லது பதினேழுதான் இருக்கும். ஆனல் இளமை அவளது மேனியில் அதிகமாகத் தன் ஆதிக்கியத்

தைச் செலுத்தவில்லை. சகஜமான நடை, நிர்மலமான சுபாவம், பரிசுத்தமான அழகு. ஓர் இடத்திலாவது குறை தென்படவேண்டுமே; சிறிதளவும் இல்லை. நானே பார்த்தேன். விரித்துச் சொல்ல ஆகாது. அவள் அணிந்திருந்த புடைவையின் நிறம் இன்ன தென்று சொல்ல அவ்வளவு ஆராய்ச்சி செய்யவில்லை நான். அவளைவிட உடையில் கண்ணைக் கவரக்கூடிய தொன்றும் எனக்குப் புலப்படவில்லை. தன்னைச்சுற்றி உள்ளவற்றைக் காட்டிலும் அவள் ஒரு படி அதிகமே. துல்லிய சண்பக மலர், தன் நீண்ட காம்பில் தனி எழி லுடன் நிற்பதுபோல், அவளும் தன் இனத்தைக் கடந்து தனி அழகுடன் விளங்கினுள். அவளுடன் இரண்டு மூன்று சிறுமிகள் இருந்தனர். அவர்களுடன் அவள் உல்லாஸ மாகச் சிரித்து விளையாடியது இவ்வளவு அவ்வளவல்ல. குழந்தைகளுடன் பழகும்போது அவளுடைய உள்ளம் சிசுவினுடையது போல் மாறி விடுகிறது. படங்கள் அடங்கிய கதைப் புத்தகம் ஒன்று பக்கத்தில் இருந்தது. அதினின்று கதை சொல்லும்படி அச்சிறுமிகள் அவளைப் பிய்த்து எடுத்தனர். அவர்கள் நூறு தடவைக்குமேல் கேட்டிருந்த கதையாகத்தான் இருக்கவேண்டும் அது. ஆயினும் குழந்தைகளுக்கு ஏன் இவ்வளவு ஆவல் என்பதைப் புரிந்துகொண்டேன். அந்த அமிர்தம்போன்ற குரலில் வரும் சொற்கள் யாவும் அமுதமாகவே மாறின. அப்பெண்மணியின் சரீரத்திலும், சொற்களிலும், பாவனை யிலும் ஜீவன் ததும்பியது. அவள் வாயினின்று வரும் கதை அச்சிறுமிகளுக்கு வெறும் கதையாக இல்லை; அவர் கள் இருதயத்துள் பாயும் உணர்ச்சியின் அருவியாகவே இருந்தது. இந்தக் கண்டஸ்வரமே அன்றொரு நாள் என் னுள் மகிழ்விரித்த கதிரொளியை மீண்டும் உயிர்ப்பித்தது. அடுத்த ஸ்டேஷனில் சிற்றுண்டி விற்பவனிடமிருந்து பலவிதப் பக்ஷணங்களை வாங்கிக் கூடவந்த குழந்தை களுக்குக் கொடுத்துத் தானும் வேடிக்கையாகத் தின்ருள். என் ஸங்கோசம் என்னைத் தடுத்தது. இல்லாவிட்டால், நானும் கை நீட்டி மகிழ்ச்சியின் வடிவமான அவளிட மிருந்து தின்பண்டத்தை யாசித்திருப்பேன்.

பிடித்ததும் பிடிக்காததுமாக, இருவிதமாகச் செல்லும் மனத்தினளாய் அம்மா உட்கார்ந்து இவற்றையெல்லாம் கவனித்தாள். அந்த வண்டியில் நான் ஒருவனே ஆடவன். அவள் சற்றும் கூச்சங்கொள்ளாது பக்ஷணங்களை

ஆவலுடன் நின்பதைப் பார்த்து அம்மாவுக்குப் பிடிக்க வில்லை. இவ்வளவு பெரிய பெண்ணுக்கு ஆடவர்கள் எதிரே மட்டுமரியாதை இல்லையே என்று நினைத்தாள் போலும். அம்மா யாருடனும் சட்டெனப் பழகமாட் டாள். ஒதுங்கி இருக்கவே விரும்புவாள். ஆனால் அந்தப் பெண்ணின் வசிகரம் அவளைத் தன்னையும் மீறிப் பேசத் தூண்டியது.

அதேசமயம், வண்டியும் பெரிய ஸ்டேஷன் ஒன்றில் வந்து நின்றது. அந்தச் சீமைத்துரையின் கூட்டாளியான மற்றொரு துரை வண்டியில் ஏறப் பிரயத்தனப்பட்டுக் கொண்டிருந்தான். எந்த வண்டியிலும் இடமே இல்லை. அவன் அடிக்கடி எங்கள் அறை எதிரேயே சுற்றிக்கொண் டிருந்தான். அம்மாவுக்குத் திகிலாய் இருந்தது. எனக்கோ ஆத்திரம்.

வண்டி நகருவதற்குச் சிறிது நேரத்திற்குமுன் ரெயில்வே உத்தியோகஸ்தனான நம் நாட்டைச் சேர்ந்த ஒருவன், பெயர் எழுதிய இரண்டு சீட்டுக்களை எங்கள் வண்டியில் இரண்டிடத்தில் மாட்டிவிட்டு, "இந்தப் பெட்டியில் உட்காருவதற்கு இரண்டு இடம் முன்ன தாகவே துரைமார் இருவர் 'ரிஸர்வ்' பண்ணியிருக்கி றார்கள். நீங்கள் வேறு வண்டியில் இடம் தேடிக்கொள் ளுங்கள்" என்றான். நான் வேறொன்றும் கூறமுடியாமல் இடத்தைவிட்டு எழுந்திருந்தேன். அப்போது அப் பெண்மணி ஹிந்தியில், "இவர்களை வண்டியைவிட்டு அப் புறப்படுத்தக்கூடாது" என்றாள்.

அவன் ஒரே பிடிவாதமாக, "போய்த்தான் ஆக வேண்டும்" என்றான்.

ஆனால், யாரும் நகராதிருப்பதைப் பார்த்து, அவன் ஆங்கிலேயனான ஸ்டேஷன் மாஸ்டரை அழைத்து வந்தான். ஸ்டேஷன் மாஸ்டர் என்னைப் பார்த்து, "தயை செய்து தாங்கள்—" என்று ஆரம்பித்தான். நான், "கூலி கூலி" என்று கூவினேன், சாமான்களை எடுத்துக் கொண்டு போவதற்காக. அப்போது அந்தப் பெண்மணி கண்களில் தீப்பொறி பறக்க, "நீங்கள் இதைவிட்டுப் போகவேண்டியது அநாவசியம். உட்காருங்கள் ; என்ன நடக்கிறதோ பார்க்கலாம்" என்றாள்.

இதைக் கூறியதும் அவள் வண்டியின் வாயிலை மறைத்துக்கொண்டு ஆங்கிலத்தில், "இந்த வண்டி முன்பே

'ரிஸர்வ்' பண்ணப்பட்டிருக்கும் பேச்சுச் சுத்தப் பொய்" என்றாள். உடனே இரு வெள்ளையரின் பெயர்கள் உள்ள சீட்டுக்களையும் பிய்த்துப் பிளாட்பாரத்தில் வீசி எறிந்தாள்.

இதற்குள் டவாலியுடன் ராணுவ உடை பூண்ட துரையும் வண்டியண்டை வந்தான். உள்ளே நுழையப் போகும்போது பெண்மணியின் ரௌத்திராகாரத்தைப் பார்த்து ஒதுங்கிப்போய் ஸ்டேஷன் மாஸ்டருடன் என்னவோ பேசினான். வண்டி புறப்படும் வேளை அதிக்கிர மித்தும், எங்களுடைய வண்டித் தொடரோடு வேறொரு பெட்டியை இணைத்த பிறகே வண்டி கூவென்று நகர்ந்தது. அந்தப் பெண்சிங்கம் பழைய கலகலப்புடன் பேச ஆரம்பித்துவிட்டாள். வெட்கத்தால் நான் என் மூஞ்சியை ஜன்னலுக்கு வெளியிலேயே நீட்டிக்கொண் டிருந்தேன்.

கான்பூரில் வண்டி வந்து நின்றது. அப்பெண்மணி தன் சாமான்களைச் சரிவர எடுத்து வைத்துக்கொண்டாள். ஸ்டேஷனிலிருந்து ஒரு ஹிந்துஸ்தானிக்காரன் ஓடிவந்து சாமான்களைக் கீழே இறக்கி வைத்தான். அந்தப் பெண் ணோடு பேச அம்மா ஆவல் கொண்டாள்; "உன் பெயர் என்ன, அம்மா?" என்று கேட்டாள்.

"என் பெயர் கல்யாணி" என்றாள் அந்த ரமணி. இதைச் செவியுற்றதும் அம்மாவும் நானும் திடுக்குற்றோம்.

"உன் அப்பா யார்?"

"இந்த ஊரில் ஒரு டாக்டர். அவர் பெயர் சம்புநாத ஸேன்."

அப்புறம் நாங்கள் வெவ்வேறு திசையாகப் பிரிந் தோம்.

### பின்னுரை

மாமா கிறிய கோட்டை மீறி, அம்மாவின் ஆக்ஞையை மீறி நான் கான்பூருக்கு வந்தேன். கல்யாணி யின் தகப்பனாரையும் சந்தித்தேன்; கல்யாணியையும் நேரில் கண்டேன். சம்புநாத பாபுவைக் கைகூப்பித் தலைவணங்கினேன். அவர் மனம் இளகியது. ஆனால் கல்யாணி, "விவாகம் வேண்டாம்" என்று சொல்லி விட்டாள்.

"ஏன் அப்படி?" என்று வினவினேன்.

"மாதாவின் கட்டளை" என்றாள்.

இதென்ன ஸங்கடம்? அவளுக்குக்கூட என் மாமாவைப்போல் தடையாக யாராவது இருக்கிறார்களா என்ன?

'மாதா' என்பது 'மாத்ருபூமி' என்று அப்புறம் தெரிந்துகொண்டேன். விவாகப் பேச்சு முறிந்தது முதல் கல்யாணி பெண்பாலரிடையே கல்வியைப் பரப்பும் மகத்தான தொண்டில் இறங்கிவிட்டாள்.

ஆனால் நான் மட்டும் நம்பிக்கையை விடவில்லை. அந்த இனிய குரல் இன்றளவும் என் இருதயத்தில் ஒலித்துக்கொண் டிருக்கிறது. என்னை வீட்டினின்று வெளியேற்றி உலக அரங்கிற்கு அழைத்தது அந்தக் குரலின் இசையே! அன்றிரவு இருளினின்று எழுந்து என் செவியில் புகுந்த, "இடம் இருக்கிறது" என்னும் சொல் எனக்குச் சலிப்பைத் தராத ஒரு பாட்டின் பல்லவியாக நீடூழி நிலவும். அப்போது வயசு எனக்கு இருபத்துமூன்று; இப்போதோ இருபத்தேழாகி விட்டது. ஆயினும் நான் நம்பிக்கையை இழக்கவில்லை. ஆனால் மாமாவை விட்டொழித்தேன். ஒரே பிள்ளையானபடியால் என்னைத் துறக்க அம்மாவினால் முடியவில்லை.

கல்யாணம் செய்துகொள்ள எனக்கு ஆசை இருக்கிறதென்று நினைக்கிறீர்களா? அது ஒருகாலும் நடவாது. அன்றோர் இரவு முன் பின் அறியாததோர் மதுரமான குரலோசையைக் கேட்டதே போதுமென்று என் மனம் சொல்லுகிறது. எனக்கு 'இடம் இருக்கிறது'. இல்லாமற் போனால்—? இவ்வாறு ஒவ்வொரு வருஷமும் சென்று மறைகிறது. அவளை எப்போதாவது கண்ணுறக் காண்கிறேன். அவளது இன்குரல் என் செவிக்கு இன்பத்தேனை ஊற்றுகிறது. சமயம் வாய்க்கும்போது அவள் இடும் ஏவலைச் செய்து வருகிறேன். என்னுள் ஒன்று, "உனக்கு இடம் கிடைத்துவிட்டதே" என்று எப்போதும் சொல்லிக்கொண்டே இருக்கிறது. 'நீ யாரோ? உன் பரிசயம் எனக்கு இன்னும் பூர்ணமாகவில்லை. ஆகவும் ஆகாது. உன்னிடம் வருவதற்கு இடமாவது கிடைத்ததே; அதுவே என் அதிருஷ்டம்!' என்று மனம் எண்ணுகிறது.

---

PRINTED AT THE MADRAS LAW JOURNAL BRANCH PRESS,
AT TIRUBHUVANAM, TIRUVADAMARUDUR POST.